ஸ்ரீ:

# ஸ்ரீ இராமாநுஜர் சரித்திரம்.

—(*)—

இது

மதுரைக் காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
சு. ஸ்ரீநிவாசையங்கார்

எழுதியது.



இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்
ஸ்ரீ கோபால் மஹால்,
மதுரை.

1931.



[விலை அணா 10.

ஸ்ரீ:

# முகவுரை.

ஸ்ரீ இராமாநுஜர் சரித்திரமாகிய இந் நூல், திவ்ய ஸூரி சரிதம், பின்பழகிய பெருமாள்ஜீயர் குரு பரம்பரை, இராமாநுஜார்ய திவ்ய சரிதை, குருபரம்பரா பிரபாவம், கோயிலொழுகு முதலிய நூல்களில் கூறப்பெற்றுள்ள ஸ்ரீ இராமாநுஜருடைய சரித்திரத்தை எடுத்துத் தனித் தமிழ் நடையில் எழுதப் பெற்றதாகும். மேலே கூறிய நூல்களில், முதலிற் கூறியது நீங்க, மற்றவைகள் எல்லாம் மணிப்பிரவாள நடையை அனுசரித்தனவாய் இருமொழியும் கற்றவர்களுக்கே ஏற்றனவாய் விளங்குதலோடு அப்பெரியாருடைய சரித்திரம் மிக விரிவாகவும் எழுதப் பெற்றுள்ளன. முதலிற் கூறப்பெற்ற நூலோ வடமொழியில் பத்திய ரூபமாய்க் காவிய நடையில் அமைந்துள்ளது. அதன் மொழி பெயர்ப்பு, ஹரிசமய திவாகரத்தில் வெளிவந்துள்ளது. அதனை இயற்றிய கருடவாஹந பண்டிதர், இராமாநுஜர் காலத்தில், அவருடனிருந்த சிறந்த வித்வான் ஆவார். ஆயுர் வேதத்தில் வல்லுநரா யிருந்தவர். இராமாநுஜார்ய திவ்ய சரிதை ஒழிந்த நூல்கள், மற்ற ஆழ்வார்கள் ஆசாரியர்களுடன் இராமாநுஜருடைய சரித்திரத்தையும் சேர்த்துச் சொல்லும் நூல்களாக இருக்கின்றன. கோயிலொழுகு, ஸ்ரீரங்கம் கோயிலில் கைங்கர்யம் செய்தவர்கள் யாவருடைய சரித்திரத்தையும் தொகுத்துக் கூறுவதாகும். ஆதலால், அந்நூல்களிலிருந்து இராமாநுஜருடைய சரித்திரத்தை மாத்திரம் தனித்து எடுத்து மிக விரிவும் மிகச் சுருக்கமுமின்றித் தமிழ் கற்றவர்கள் யாவருக்கும் எளிதில் விளங்குமாறு தெள்ளிய தமிழ் நடையில் இந்நூல் எழுதப் பெற்றுள்ளதாகும். இவற்றுடன் இராமாநுஜருடைய கால வாராய்ச்சி முதலியவற்றிற்கு, ஸ்ரீமான் து. அ. கோபிநாத

ராயரவர்கள் சென்னைச் சர்வகலா சங்கத்தின் ஆதரவில் செய்த உபந்நியாசம் மிகவும் உபயோகப்பட்டதாகும். காலவாராய்ச்சிக்குக் கலிங்கத்துப் பரணி, மூவருலா, தக்கயாகப் பரணி, செந்தமிழ் முதலிய நூல்களும் உபயோகப் பட்டன. இந்நூல் மதவிஷயத்தில் சிறப்பாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் என்று சொல்லப்பெற்ற வகுப்பார்களுக்கு உரியதாயினும், தமிழ்ப்பாஷை விஷயத்தில் இது தமிழ் மக்களாவார் யாவருக்கும் உரியதேயாகும். ஆழ்வார்கள் பாசுரங்கள் தமிழிலமைந்திருந்தமையானும் தமிழ் மொழியிலேயே தத்துவப்பொருளை வெளிப்படுத்தினல்தான் தேசத்து ஜனங்களுக்குத் தத்துவம் விளங்கிக் கடைத்தேறுவதற்குரியதாகும் என்னும் பரம கருணையானும் தத்துவங்களைத் தமிழ்மொழியில் பரவும்படி செய்தவர் இராமாநுஜரே. அன்றியும் இவர் காலத்தையொட்டிச் சோழநாட்டில் தமிழ் செழித்தோங்கியிருந்தது என்பதைச் சேக்கிழார், கவிச் சக்கரவர்த்திகளாகிற சயங்கொண்டார், கம்பர், ஒட்டக்கூத்தர் முதலியவர்கள் உலகம் புகழும்படி தமிழ்ப்பெரும்புலவர்களாய் விளங்கியதனு லறியலாம்.

இவ்வாறு, மேலே கூறிய நூல்களை யெல்லாம் தழுவி எழுதப்பட்ட இந்நூலைத் தமிழுலகம் ஆதரித்து இதன் கண்ணுள்ள குற்றம் குறைகளை எனக்கு எடுத்துக் காட்டித் திருத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்நூலை அச்சிடுவதற்கு எனக்கு வேண்டிய ஆதரவளித்துப் போற்றிவரும் ஸ்ரீமான் இ. மா. கோபாலகிருஷ்ணக்கோனர் அவர்களுக்குத் தமிழ்க் கடவுள் நோயின்மையையும் நீண்ட ஆயுளையும் விழுச் செல்வத்தினையும் கொடுத்துக்காப்பதாக.

மதுரைக் காலேஜ்
மதுரை
பிப்ரவரி—1931.

சு. ஸ்ரீநிவாசன்
தமிழ்ப் பண்டிதன்.

ஸ்ரீ.

# விஷய அட்டவணை.

---

ஸ்ரீ:




## ஸ்ரீ இராமாநுஜர்

பற்ப மெனத்திகழ் பைங்கழ லுன்றன
பல்லவ மேவிர லும்

பாவன மாகிய பைந்துவ ராடை
பதிந்த மருங்கழகும்

முப்புரி நூலொடு முன்கையி லேதிகழ்
முக்கோ றன்னழகும்

முன்னவர் தந்திடு மொழிக ணிறைந்த
முறுவனி லாவழகும்

கற்பக மேவிழி கருணை பொழிந்திடு
கமல முகத்தழகும்

காரிசு தன்கழல் சூடிய முடியுங்
கனநற் சிகைமுடியும்

எப்பொழு தும்மெதி ராசன் வடிவழ
கென்னித யத்துளதால்

இல்லை யெனக்கெதி ரில்லை யெனக்கெதி
ரில்லை யெனக்கெதிரே.

—எம்பார்.

ஸ்ரீ

# ஸ்ரீ இராமாநுஜர் சரித்திரம்.

## (முற்பகுதி.)

—.*-*.—

### ஸ்ரீ இராமாநுஜர் அவதாரம்.

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்துப்—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து"

என்ற பெரியார்மொழி பொய்ம்மொழியாகாதவாறு, தொண்டைநாடு மலைபெறு வளம், காடுபெறு வளம், கடல்பெறு வளம், நாடுபெறு வளம் முதலான பலவளங்களை யுடையதாயினும்,

* "நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவ ராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்ற அப்பெரியார் மொழிக்கே இலக்காக இவ்வுலகம் புகழும் இயல்பினரான சான்றோர்பலர் தன்னிடத்திலே வாழும் பெருமையை யுடையதாகும்.

---

*"நிலனே நீ ஒன்றில் நாடேயாக, ஒன்றில் காடேயாக, ஒன்றில் பள்ளமேயாக, ஒன்றில் மேடேயாக; எவ்வாறாயினும் எவ்விடத்து ண்மக்கள் அவ்விடத்து நீயும் நல்லையல்லது நினக்கென டைமை யல்லை வாழி'

அவ்வியல்பினதான தொண்டை வளநாட்டின்கண்—தேவாலயங்கள் பல திகழ்ந்துகொண் டிருப்பதாலும் 'முத்தி தரும் நகரேழில் முக்கியமாங்கச்சி' என்றிருப்பதாலும் முத்தியை நல்கக் கூடியதாகவும், உமாதேவியார் வந்து அறத்தினை வளர்த்த பெருமையாலும் பிரமதேவன் வந்து வேள்வி யியற்றினமையாலும் அறத்திற்கிடமாகவும், முற்காலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் சிற்றரசர்களும் பிற்காலத்தில் பல்லவர்களும சளுக்கியர்களும மற்றவர்களும் விஜயநகர அரசர்கள் முதலானவர்களும் இதனை அரசிருக்கை யாகக் கொள்ள விரும்பியமையால் இது பொருளே பொதிந்த பொக்கிசமாகவும், அறம் பொருள் முதலியவற்றால் அந்நகரமாந்தர் எப்பொழுதும இன்பமே நுகருதலால் இன்பத்திற் கிருப்பிடமாகவும—விளங்கிய நகரம் காஞ்சிபுரம் என்பதாம.

இவ்வாறு, அறம் பொருள் இன்பங்களுக்கு ஆதாரமாயும் வீட்டினை வேண்டுவார்க்கு அளிப்பதாயும் உள்ள அக கச்சிமாநகரை யடுத்து ஸ்ரீபெரும்பூதூர் என்று சிறபபெய்திய கிராமததின்கண், ஆசூரி வமசத்தில ஸ்ரீகேசவசோமயாஜியார் என்ற பெரியார் ஒருவர் திகழ்ந்தனர். அவர் திருமாலிடத்துத் திருந்திய மனமுடையார்; வேதங்களில் விதித்துள்ள வேள்விகள் பலவற்றைச் செய்து விளங்கியவர்; நல்லோர்கள் நாடும் நற்செயலுடையார்; அவர் வேதங்களையெல்லாம் கரைகண்டவராய், யஜுர் வேதத்திலே யுள்ள சிக்ஷை சிரௌதம் முதலியவற்றைக் குறித்துக் கேசவீயம் என்ற பெயருடன் பல நூல்கள் இயற்றியுள்ளார்.

அத்தகைய பெருமைவாய்ந்த கேசவசோமயாஜியார், ஸ்ரீஆளவந்தாருடைய அடியவர்களில் சிறந்தவரான திருமலை நம்பியின் உடன் பிறந்தாராகிய காந்திமதி என்ற பெண்மணி

யைப் பெருமையுடன் கலியாணம் செய்துகொண்டு வாழ்ந்து வந்தார். அக் காந்திமதியம்மை ஸ்ரீபூமிப்பிராட்டியின் அம்சமாக இவ்வுலகில் தோன்றியவராதலின் அவருடைய குணங்களைப்பற்றிக் கூறவேண்டுவதில்லை. எல்லாக்குணங்களும் நிறைந்த காந்திமதியம்மையும் கேசவசோமயாஜியாரும இல்லறத்தை இனிதே நடத்திக்கொண்டு செல்லா நிற்க, அவர்களுக்கு நீடித்த காலமாகப் புதல்வர்ப்பேறு இல்லாமையால் மனக்கவலையுடன் கச்சி அத்திகிரி அருளாளரையே அல்லும் பகலும சிந்தித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது பூவிருந்தவல்லி என்னும் கிராமத்தில் தோன்றியவரும் ஸ்ரீ ஆளவந்தாரடியவர்களில் சிறந்தவரும் கச்சிவரதராஜப் பெருமாளிடத்துக் கரைகடந்த பக்தியுள்ளவரும் அதனால் அப்பெருமாளே அவரிடம் நேரில் பேசும் பெருமை வாய்ந்தவரும் யாவரிடத்தும் அன்புள்ளவரும் சாத்தாத மரபினரும் திருக்கச்சிநம்பி என்று பெயர் வாய்ந்தவரும் ஆகிய பெரியார் ஒருவர், தினந்தோறும் பூவிருந்தவல்லியிலிருந்து புறப்பட்டுத் திருக்கச்சிநகர் சென்று ஸ்ரீவரதராஜப் பெருமாளுக்குப் பூமாலை முதலியவற்றைச் சமர்ப்பித்துத் திருவாலவட்டம் கொண்டு விசிறி உபசாரம் செய்து தம்மூருக்குத் திரும்புகாலில் கேசவசோமயாஜியாருடைய திருமாளிகையில் சிறிது தங்கி இளைப்பாறிவிட்டுச் செல்வார். இதனாலும் இருவரும் ஆளவந்தாரின் தொடர்புடையார்கள் என்பதனாலும் அவர்கள் இணைபிரியா நண்பர்களாயிருந்தார்கள். அப்பொழுது ஒருநாள் கேசவசோமயாஜியார் தமதகத்திற்கு வந்த திருக்கச்சிநம்பியை நோக்கி, “நண்பரே! அடியேனுடைய மனத்தில் ஒரு நினைவுண்டு; அஃதெங்ஙனம் தலைக்கூடும் என்பதை வரதராஜப் பெருமாளிடம் கேட்டுச் சொல்லியருளவேண்டும்” என்று கூறினார்.

திருக்கச்சி நம்பியும் 'அங்ஙனமே ஆகட்டும்' என்று அவரிடம் கூறிவிட்டு மறுநாள் தேவபெருமாளுக்குத் திரு வாலவட்டம் பணிமாறிப் பெருமாள் திருமுக மண்டலத் தைப் பார்த்துக்கொண்டு நின்றிருந்தார். அப்பொழுது தேவப்பெருமாள் நம்பியை நோக்கியருளி "நம்பியே! நீர் நம்மிடம் ஏதோ ஒன்று கேட்பவர் போல நிற்கின்றீரே; உமது மனத்திலுள்ளதைச் சொல்லிக் காணீர்" என்று கூற, நம்பியும் "ஸ்வாமி! கேசவசோமயாஜியாருடைய மனத்தின் கண் ஓர் நினைவுண்டாம்; அஃதெங்ஙனம் தலைக்கூடும் என்று கேட்டுவரச் சொன்னார்; தேவரீர் கிருபை செய்தருள வேண்டும்" என்று கூறி வணங்கி நின்றார்.

கச்சி அருளாளர், "நம்பியே! கேசவ சோமயாஜியா ருக்கு விதியின்படி புதல்வர்ப்பேறு இல்லை; ஆயினும், அவர் திருவல்லிக்கேணியில் பார்த்தசாரதி சந்நிதியில் கைரவணி தீரத்தில் புத்திர காமேஷ்டியென்னும் யாகத்தை நியமத் தோடு செய்து முடிப்பாரேயானால் அவருடைய எண்ணத் தைத் தலைக்கட்டி வைப்போம்" என்று கூறியருளினார். திருக்கச்சி நம்பியும் அவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு கேசவசோமயாஜியாரிடத்தில் சென்று அருளாளர் அருளிய வற்றைக் கூறியருளினார். கேசவசோமயாஜியாரும் அருளா ளப் பெருமாள் நியமித்தவாறே திருவல்லிக்கேணியில் புத் திரகாமேஷ்டி யென்னும் யாகத்தைத் தொடங்கி நிறை வேற்றினார்.

அக்காலையில் திருமால் தம்முடைய பரிவாரங்களில் சிறந்தவரான திருவனந்தனைக் கண்ணோக்கி "இப்பொழுது பூவுலகம் உன்னுடைய அவதாரத்தை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறது. நீ அங்கே அவதரித்து இராமாநுஜன் என்னும் நாமத்துடன் கூடினவனாய் வழியில்லா வழியில்

புகுந்து தடுமாறுகிற உலகத்தவர்களுடைய அஞ்ஞானத்தைப் போக்கி உயிர்கள் உய்யும்வழியைக் குரு சிஷ்ய முறைமையால் தெரியக்காட்டி நாட்டை யளித்து நம்முடைய புகழில் யாவரையும் அடிமை புகும் வண்ணம் செய்து நமது தர்சனத்தையும் (ஹிந்துமதத்தையும்) இராமாநுஜ தர்சனம் என்று கூறும்படி பல்லாண்டுகள் அவ்வுலகத்தில் வாழ்ந்திருந்து பின்னர் நம்மிடம் வருக'' என்று நியமித்தருளினார். திருவனந்தனாகிய ஆதிசேஷனும் ''அவ்வண்ணமேயாகுக'' என்றிருந்தனன்.

இஃதிவ்வாறாகக் கேசவசோமயாஜியார் நிறைவேற்றிய வேள்வியின் பயனாக அவருடைய மனைவி காந்திமதியம்மையார் வயிறு வாய்க்கப்பெற்றார். அவர் வயிற்றிலுள்ள கருப்பம் முதிர்ந்து பத்துமாதமானவாறே இற்றைக்கு ஏறக்குறையத் தொள்ளாயிரம் வருடங்களுக்குமுன் சாலிவாஹன சகம் தொள்ளாயிரத்து முப்பத்தொன்பதில் (939) (கி. பி. 1017ல்) பிங்கள வருடம் சித்திரை மாதம் திருவாதிரை நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் இவ்வுலகத் திருளகலத் திருமால் திருவாணையைத் தாங்கித் திருவனந்தன், காந்திமதியம்மையின் கர்ப்பத்திலிருந்து சிறு குழந்தையாக அவதரித்தனன். அப்பொழுது இவ்வுலகம் தன்னையறியாமலே மிகவும் இன்பமுள்ளதாயிருந்தது.

தமக்கு மைந்தன் பிறந்தான் என்பதைக் கேட்டவுடன் கேசவ சோமயாஜியார் மிகவும் மனமகிழ்ந்து உடுத்த ஆடையுடன் நீராடித் தனம் தானியம் முதலியவற்றை எல்லாருக்கும் தானம் செய்து குழந்தை பிறந்தவுடன் செய்ய வேண்டிய 'ஜாதகர்மா' என்னும் சடங்கைச் செய்து நிறைவேற்றினார்.

கேசவ சோமயாஜியாருடைய மைத்துனரான திருமலை நம்பி தம்முடன் பிறந்த காந்திமதிக்கு ஆண் மகவு பிறந்துள்ள செய்தியைக் கேட்டுத் திருமலையினின்றும் புறப்பட்டு ஸ்ரீபெரும்பூதூரை யடைந்து காந்திமதியம்மையின் *குழந்தையைக் கண்களாரக் கண்டு மகிழ்ந்து, இக்குழந்தை எல்லாக்குணங்களும நல்ல இலக்கணங்களும் நிறைந்திருப்பதாலும் அனந்தன் என்ற பெயருள்ள ஆதிசேஷனுடைய அவதாரம் என்று தமக்குத் தோன்றியமையாலும் அந்த ஆதிசேஷனுடைய அவதாரமாய் முற்காலத்தில இராமாநுஜனாகி (இராமனுக்கு உடன் பிறந்தவனாகி) இலக்குமணன் தோன்றியது போலவே அக்குழந்தையும் பிறந்திருக்கிறது என்று கருதியதனாலும அக்குழந்தைகக்கு இலக்ஷ்மணன் என்று நாமகரணம் செய்தருளினார்.

அக் குழந்தை வளர்பிறைச் சந்திரன்போல நாளொரு மேனியாக வளர்ந்து தக்க பருவங்களில் செய்ய வேண்டிய அன்னப் பிராசனம் (உணவு அருந்துதல்) சௌளம் (குடுமி வைத்துக கொள்ளுதல்) அக்ஷராப்பியாசம (கல்விகற்கத் தொடங்கல்) முதலான சடங்குகளைப் பெற்றோர்கள் செய்விக்கப்பெற்று இனிதே விளையாடிக்கொண்டிருந்தது.

---

## ஸ்ரீராமாநுஜர் வேத வேதாந்தங்கள் பயின்றதும் அவரது மணவினைச் சடங்கும்.

இலக்ஷ்மணர் கல்விகற்கத் தொடங்கி எட்டு வயசிற்குள் எல்லாக் கலைகளையும் ஆசிரியர் ஒரு முறை கூறுமுன்னரே அறிந்துகொண்டு யாவரினும் அறிவுமிக்கவராய் விளங்கினர். கேசவ சோமயாஜியார், தமது புதல்வர் உபநயனப் பருவமடைந்திருப்பதைக்கண்டு, தமது உற்றார் உறவினர்களுடன்

கலந்து ஆலோசித்து ஒரு நல்ல நாளில் தம் புதல்வருக்கு உபநயனச் சடங்கைச் செய்து நிறைவேற்றி வேதத்தை அவர் திருச்செவியில் ஓதுவித்தருளினர். அன்று முதல் இலக்ஷ்மணர் வேதம் பயிலத் தொடங்கினர். இலக்ஷ்மணர் பதினாறாண்டளவும பிரமசரிய விரதத்துடன் இருந்து நான்கு வேதங்களையும் அளவற்ற கலைகளையும் தம் தந்தையாரிடத்தி லேயே பயின்று "சுருதிகள் நான்கும் எல்லையில்லா வறநெறி யாவும தெரிந்தவன்" என்று பின்னுள்ள பெரியோர்கள் கொண்டாடும் வண்ணம் ஓதியுணர்ந்தனர். அவ்வாறு வட சொற் பயின்றமையோடு செந்திறத்த தமிழோசையையும் செவ்வனே பயின்று 'தென் சொற் கடந்தான் வடசொற் கடற் கெல்லை தேர்வான்' என்றவாறிருந்தனர்.

பின்னர்க் கேசவ சோமயாஜியார், தம் மகனுருக்குப் பதினாறாண்டு நிறைந்ததைக்கண்டு பிரமசரிய விரதத்தை முடித்து வைத்துத் தம மரபோடொத்த மரபில நற்குண நற்செயல்களுடன் கூடிய பெண் ஒருத்தியைத் திருமணம் செய்து வைத்தார். இலக்குமணர் அப்பெண்ணோடு இல்லறத்தில் இருந்து அதற்குரிய தருமங்களைத் தவறாது செய்து யாவரையும மகிழ்வித்து வந்தனர். அக்காலத்தே அவர் தந்தையார் தம் புதல்வரது இளமைப் பருவத்துச் செயல்களைக் கண்டு மகிழ்ச்சி கொண்டது போலவே பிற்காலத்துச் செயல்களையும் கண்டு மகிழப் பாக்கியம் பண்ணவில்லை யென்று கூறலாம் வண்ணம எத்தகையோருயிரையும் தின்று ஏப்பமிடுகின்ற எமன், சோமயாஜியா ருயிரையும் பருகிவிட்டனனே! ஐயோ; பாவம்!! இலக்குமணர் மிகவும் மனத்துயருடன் தம் தந்தையாருக்குச் செய்யவேண்டிய ஈமக் கடனை முடித்த பின்னர், அவர், தம தாயாருக்கு ஆறுதல்கூறி அவா சொற்கடவாது தம் மனைவியுடன் வாழ்ந்து வந்தனர்.

அப்பால், இலக்குமணருக்கு வேதாந்தபாடம் கற்கவேண்டும் என்னும் அவா உண்டாயிற்று. அதற்கேற்ப அக்காலத்தில் காஞ்சீபுரத்திற் கடுத்துள்ள திருப்புட்குழி என்ற கிராமத்தில் யாதவப்பிரகாசன் என்பான் அத்வைத சந்நியாசியாவருக்கும் வேதாந்த பாடம் கற்பிக்கின்றான் என்று கேள்வியுற்று இலக்குமணரும் அவனிடம் வேதாந்த பாடம் கற்கச் சென்றார். அவ் யாதவப்பிரகாசன் வேத வேதாந்தங்களின் கரைகளை மிகவும் எளிதிற் கண்டறிந்தவன். முதலில் அவன் சங்கரருடைய மதத்தில் புகுந்து அதனை நன்றாகக் கண்டறிந்தபின் அது அவனுடைய மனதிற்கு ஒத்துவாராமையால் சிற்சில வேறுபாடுகளுடன் யாதவப்பிரகாசமதம் என்று புதிதாக ஒரு கொள்கையை நிலைநிறுத்தியவன். அவ்வாறு பெருமை வாய்ந்த யாதவப்பிரகாசனிடம் இலக்குமணர் வேதாந்த பாடம் கற்று வருகையில், யாதவப்பிரகாசன் சில வேத வசனங்களை யெடுத்து உபந்யாசம் செய்யும்பொழுது அவன் கருத்துக்கிசைய அவற்றை வலிந்து பொருள் செய்வதை இலக்குமணர்கண்டு "நேரான வழியில் நல்ல பொருள் கொள்ளலா யிருக்க வழியில்லா வழியில் பொருள் செய்து இடர்ப்படுவானேன்; இவை நற்பொருளல்லவா?" என்று அவற்றிற்குத் தாம் கண்ட பொருளை உரைத்துக் காட்டினார். இலக்குமணர் கூறிய பொருள்கள் நற்பொருளா யிருந்தாலும், அவர், பலமுறையில் தான் கூறிய பொருளை மறுத்துரைத்தமையால், யாதவப்பிரகாசன் மிகவும் சினந்து, இனி அவர் தன்னிடம் வேதாந்த பாடம் கற்க வேண்டாம என்று கூறி விலக்கிவிட்டனன்.

யாதவப்பிரகாசன தம்மை விலக்கிவிட்டமையால் இலக்குமணர் வேதாந்தபாடம கற்பதையொழிந்திருக்க, யாதவப்பிரகாசன், தன்னுடைய மாணவர்களை யொருங்கு திரட்டி,

"மாணவர்களே! இலக்குமணன் எப்பொழுதும் வேத வசனங்களுக்கு நாம் கூறும் பொருள்களை மறுத்துரைக்கின்றான்; அவன் இவ்வுலகில் இருக்கும் வரையிலும் நம்முடைய மதத்தைத் தலையெடுக்க வொட்டான். இதற்கு நாம் யாது செய்யலாம்? இவ்விஷயத்தில் உங்களுடைய கருத்துக்களை யறிய விரும்புகின்றேன்; செய்ய வேண்டுவதைக் கூறுங்கள்" என்று வினவினான். அதற்கு அவனுடைய மாணவர்கள் இலக்குமணரைத் தொலைப்பதற்குத் தங்கள் தங்களுக்குத் தோன்றிய கருத்துக்களை யெல்லாம் வெளியிட, அவை, தன் கருத்திற்கு ஒத்து வாராமையால், இறுதியில், எவ்வாற்றாலும் இலக்குமணரைத் திரும்பவும் தன்னிடம் சேர்த்துக் கொண்டு அப்பால் காசியாத்திரை செல்லுவதாக உடனழைத்துச் சென்று அங்கே மணிகர்ணிகைத் துறையில் கங்கையில் வீழ்த்தி முடித்துவிடுவதே நேரான வழி யென்ற தன் கருத்தை வெளியிட, மாணவர்கள் யாவரும் "அதுவே தகுதியுடையது; மணிகர்ணிகையில் வீழ்ந்து இறக்கின்றவர்களுக்கும் வீழ்த்துகின்றவர்களுக்கும் உடனொக்க நற்கதியே யெனப் புராணங்கள் கூறுவதால் அவ்வாறு செய்வதே நன்மை" என்றனர்.

பின்னர், யாதவப்பிரகாசன் தன் மாணவர்களைக் கொண்டு இலக்குமணரை அழைத்துவரச் செய்து "இலக்குமணனே! நீ இல்லாத மாணவர்களுடைய கோட்டி சிறப்புடையதாகக் காணப்படவில்லை, உயிரற்ற உடல்போலக் காணப்படுகிறது; ஆதலின், நீ மனவருத்தத்தை யொழித்து முன்போலவே வேதாந்த பாடம் கற்று வருவாயாக" என்று கூறினான். இலக்குமணரும் அவன் கூறுவதை மனமாரக் கூறுவதாகவே மதித்து அன்று முதல் அவனிடம் பாடம் கேட்டு வருவாராயினர்.

இங்ஙனமாகத் திருமலை நம்பியுடைய மற்றொருடன் பிறந்தவளான த்யுதிமதியம்மையை மழலைமங்கலத்தில் கமலநயன பட்டர் என்பவர் மணம் செய்து கொண்டு அவ ளிடமாக ஓராண் குழந்தையைப் பெற்றெடுத்தார். அக் குழந்தை பிறக்கும் பொழுது இலக்குமணருக்கு ஒன்பது வயசு நடந்து கொண்டிருந்தது. அக்குழந்தை இலக்குமண ருக்குத் தம்பிமுறையாக வேண்டும். திருமலை நம்பி இலக்கு மணருக்கு நாமகரணம் செய்ததுபோலவே, த்யுதிமதி யம் மையின் குழந்தைக்கும் கோவிந்தன் என்று நாமகரணம் செய்தனர்.

கமலநயன பட்டரும் அந்தப் புதல்வனுக்குச் செய்ய வேண்டிய எல்லா மங்கள காரியங்களையும் செய்து கல்வி கற்பித்து வேதம் முதலியவற்றையும் கற்றுக்கொடுத்துக் கலியாணமும் செய்து வைத்து இல்லறத்தை யினிதே நடத்தும் வண்ணம் செய்தனர். அக் கோவிந்தர் தம் பெரிய தாயார் புதல்வர் இலக்குமணர் புட் குழியில் யாதவப்பிர காசனிடம் வேதாந்த பாடம் கற்று வருகின்றார் என்பதைக் கேட்டுத் தாமும் வேதாந்தம் கற்கவேண்டும் என்னும் ஆசையோடு யாதவப் பிரகாசனை யடைந்து இலக்ஷ்மண ரோடு சேர்ந்து வேதாந்த பாடம் கற்று வந்தனர்.

கோவிந்தருக்கு யாதவப் பிரகாசன் இலக்குமணரை முடித்து விடுவதற்குச் செய்த சூழ்ச்சி தெரியுமாயினும், இலக்குமணரும் கோவிந்தரும் சந்தித்துக் கொள்ளாவண் ணம் பார்த்துக் கொள்ளுமாறும், அவ்வண்ணம் சந்தித்துக் கொண்டாலும் தனது சூழ்ச்சி வெளிப்படா வண்ணம் பாது காக்குமாறும் தன்னுடைய மாணவர்களுக்குக் கட்டளையிட் டிருந்தமையால் கோவிந்தர், அவன் சூழ்ச்சிகளை இலக்கு மணருக்குத் தெரிவிப்பதற்கு வேளை வாய்க்கவில்லை.

இவ்வாறாகச் சில நாட்கள் சென்றவாறே, யாதவப்பிர காசன் கங்கா யாத்திரையென்று சொல்லித் தன் மாணாக்கர் யாவரையும் உடனழைத்துக் கொண்டு புறப்பட்டான். அவ் வாறு கங்கா யாத்திரை சென்ற கூட்டத்தவர் யாவரும் நான்மறை ஆறங்கம் முதலியவற்றைக் கற்ற கேட்ட அறிவு நிரம்பியவர்களாதலின், ஒருவரோடொருவர் சொற்போர் புரிந்து கொண்டு சென்றமையால் அவர்களுக்கு வழி நடந்து செல்லுதலின் வருத்தம் ஒரு சிறிதும் தோன்றவேயில்லை. இவ்வாறு, அவர்கள் காஞ்சீபுரத்திலிருந்து பெரும் பாலான வழியைக் கடந்து விந்தமலைக்கு அருகான காட்டையடைந் தனர். அங்கே எவ்விடங்களிலும் 'வெயில் நுழைபறியாக் குயில் நுழை பொதும்பா' என்னலாம்படி வானளாவிய மரங்கள் மிகுந்து செறிந்திருந்தன. வனவிலங்குகள் எல்லா விடங்களிலும் உலாவிக்கொண்டிருந்தன. மரங்கள் தோறும் பறவைகளின் இனிய ஒலி மாந்தர் மனங்களை மகிழச் செய்தன.

அத்தகைய காட்டுப் பக்கத்தை, யாதவப்பிரகாசனை முதலாகவுடைய அக் கூட்டத்தார் சென்று சேர்ந்து அன் றிரவு அங்கே யோரிடத்தில் அமர்ந்து யாவரும் உறங்கினர். விடியும் வேளையில் இலக்குமணர் நீர் கழித்து வருவதற்காக அக் கூட்டத்தை நீங்கி ஒரு நீர் நிலையை நோக்கிச் சென்றனர். அவ்வேளையில் சூரியனும் இவருக்குத் துணை செய்வதற்குத் திருமாலால் அனுப்பப்பட்ட சக்கரம்போல மிக்க ஒளியுடன் கீழ்த்திசையில் தோன்றினன். அக் கூட்டத்தில் இருந்த கோவிந்தர் அக் கூட்டத்தவர்களுக்குத் தெரியா வண்ணம் அவர்களை விட்டு நீங்கி, இலக்குமணா தனிமையில் நீர்கழிக் கச் சென்ற விடத்தை யடைந்து, அவ்விடத்தில், யாதவப் பிரகாசனுடைய கங்காயாத்திரையின் சூழ்ச்சிகளை எடுத்துக்

கூறி எவ்வாறாயினும் அவர்களுடன் சேரா வண்ணம் பிரிந்து போகுமாறு அவருக்குக் கூறினர் இலக்குமணர் யாதவப் பிரகாசனுடைய வஞ்சநெஞ்சினையறிந்து கோவிந்தரிடம் விடை பெற்றுக் கொண்டு அக்காட்டில் நுழைந்து தொண்டை நாடு நோக்கி வழிதேடிச் செல்வாராயினர். கோவிந்தர், தமது முன்னவருடைய உயிருக்கு இனி எவ் விதத்திலும் யாதவனால் கேடுநேராது என்று கண்டு அக் கூட்டத்தில் வந்து கலந்து கொண்டார். யாதவன் தன கூட்டத்தாரோடு அன்று பகல் அங்கே தங்கியிருந்து பின் னர்க் கங்கையை நோக்கி வழிக்கொண்டு செல்லத் தொடங் கினன். அப்பொழுது அவன் தன் கூட்டத்தில் இலக்கு மணரைக் காணாமையால் மற்ற மாணவர்களைக் கொண்டு அவ்விடமெங்குந் தேடச் செய்தனன். அவர்கள் எங்குந் தேடியும் இலக்குமணரைக் காணோமென்று வந்து கூறினர் கள். யாதவன் முதலானவர்கள் இலக்குமணரை அக் காட் டில் வாழும் புலி சிங்கம் முதலிய கொடிய விலங்குகளுள் எதுவோ அடித்துத் தின்று விட்டது என்று கருதி, மேலே சூரிய வெப்பத்தால் சூடு கொண்டு, உள்ளே மிகவும் குளிர்ந் திருக்கும் நீர்நிலைபோல, வெளியில், தாம அவர் பொருட்டு இரங்குவதுபோல நடித்து, உள்ளே தாம் கருதியது நிறை வேறிற்று என மிக மகிழ்வாராயினர். இது வஞ்சகர்கள் செயலல்லவோ! பிறரை வஞ்சிக்கப்போய்த் தாம் வஞ்சிக்கப பட்டதை இவர்கள் அறியவில்லையே! இது என்ன விந்தை! இது என்ன விந்தை!! இவர்கள் கங்கைக்குச் செல்லட்டும்.

இனி, இலக்குமணர், தாம் கோவிந்தரால் யாதவப்பிர காசனிடமிருந்து அரிதில் உயிர் தப்பி மீளும்படி செய்த கருணைக்கடலாம் கண்ணனை — முதலை வாயிலகப்பட்ட யானைக்கு அன்று அருள் செய்த வள்ளலை—மனமார வாயார

நினைந்து துதிப்பாராயினர். அவர் அக்காட்டில் எவ்வாறு வழிகண்டு தம்மூருக்குச் செல்லுவது என்று முதலில் திகைத்தார். பின்னர், அது, தம்மை அவ்வளவுவரை காப்பாற்றிய அண்ணல் திருமால் கடமை என்று கருதினார். இங்குமங்கும் சுற்றி நோக்கினார். அங்கே சிறிது தூரத்திற்கு அப்பால் ஒரு ஒற்றையடி வழியாக வில்லைக் கையிலே கொண்ட வேடனொருவனும் வேடச்சியும் தாம் இருக்கும் இடம் நோக்கி வருவதைக் கண்டார். தமக்குத் துணையகப்பட்டதே என மகிழ்ச்சி கொண்டார். அவர்கள் தம்மையணுகியவுடன் "ஓ வேட்டுவனே! நீயும் இவ்வேடச்சியும் எங்கே செல்கின்றீர்கள்? வழித்துணையகப்படாமையால் நான் இக்காட்டில் தனியே தவிக்கின்றேன். நான் தொண்டை நாட்டுக் காஞ்சிபுரத்திற்குச் செல்லவேண்டியவன். ஆவார் யார் துணை யென்றலமருகின்றேன். எனக்கு இக்காட்டில் உங்களைத் தவிர வேறு துணையில்லை. என்னை வஞ்சகர்கள் சிலர் ஏமாற்றிக் கொல்லக் கருதி, இங்கே யழைத்து வந்தார்கள். எம்பெருமான் என்னை அக்கொடியவர்கள் கையினின்றும் எவ்வாறோ தப்புவித்தனன். உங்களிருவரையும் பேரருளாளனாகவும் பெருந்தேவித்தாயாகவும் நான் கருதுகின்றேன். நீங்களே என்னை இக்காட்டிலிருந்தும் நேரான வழியில் செலுத்தவேண்டும்" என்று கூறினார். "நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப் பாயும் பனி மறுத்த பண்பாளா" என்றவாறு, நச்சுவார் முன்னிற்கும் நாராயணன் தன் அடியார்களுக்கு நேரும் அச்சம் களைவதற்குத் தானும், தன்னிலும் முற்பட்டு நிற்கும் திருமகளுமாக உலகத்தில் தோன்றுவது இயல்பாதலின், இப்பொழுதும், இலக்குமணருக்குத் துன்பந்துடைத்து இன்பம் தருவதற்காகத் திருமகளார் தனிக்கேள்வன் வேடனும் வேடச்சியுமாக வந்தாராதலின், அவ்வேடன் இலக்குமணரை நோக்கி

"அந்தணரே! நாங்கள் இம்மலைக்கு அப்பால் சித்தாச்சிரமத்தில் வசிப்பவர்கள். இப்பொழுது சத்தியவிரத க்ஷேத்திரமாகிய காஞ்சீபுரத்திற்குச் செல்கின்றேம். நீரும் அங்கே போவதாகச் சொல்லுவதால், எம்முடன் வரலாம். எங்களுக்கு இவ்விடத்து வழிகள் நன்றாகத் தெரியும்: ஆதலால், உமக்கு ஒருவருத்தமுமின்றி நல்லவழியில் நடத்திச் செல்லுவோம்; வாரும்" என்று கூறி அவரையும் உடனழைத்துச் சென்றனன். அவ்வாறே இலக்குமணரும் அவர்களுடன் நடந்து சென்றார்.

செல்லும் நடைவயில் இலக்ஷ்மணர் திருமாலினுடைய குணங்களைப் பாடிக்கொண்டும வேடனுக்கு உரைத்துக் கொண்டும் சென்றார். அதனால் அவருக்கு வழிநடத்தலின் வருத்தம் தோன்றவில்லை. முடிவில் அவர்கள் அக்காட்டின் எல்லையைக் கடந்தபொழுது சூரியனும் அத்தமித்தனன். அவர்கள் அன்றிரவைக் கழிப்பதற்கு அவ்விடத்துள்ள ஓராலமரத்தின் கீழே யமர்ந்தனர். இரவின் முற்பகுதி கழிந்தவாறே அவர்களைத் துயில் என்னும் ஆருயிர் மருந்து அணுகிற்று. உயிர்களுக்கு உண்ணுஞ் சோறும் பருகும் நீரும் எவ்வாறு மருந்துபோல் இன்றியமையாதனவோ அவைபோல் துயிலும் உயிர்கள் இளைப்பாறி இன்பம் பெறுதற்கின்றியமையாததொன்றும். அது கருதியே போலும் உலகம் காக்கும் முழுமுதற்கடவுளும் துயிலின்மேன்மையையுணர்த்தும் பொருட்டுக் "காவிரித் திருநதியிலே யொருகருணைமா முகில் துயிலுமே" என்றவாறு திருவரங்கம முதலான திருப்பதிகளில் அறிதுயிலமர்ந்த மூர்த்தியாய் அடியவர்களுக்குக் காட்சி தந்தருளுவதாம்.

அவ்வாறு, அவர்கள் இளைப்பாறத் தொடங்குகையில், திருமகளாராம் வேடச்சி தன் கணவனை நோக்கி "நாத!

எனக்கு மிக்க தாகமா யிருக்கின்றது. நாவறண்டுபோகின்றது. இது வழிநடந்து வந்தமையால் உண்டாகியது. சிறிது நீர் வேண்டுமே பருகுவதற்கு; என் செய்வது?" என்று கூறினள். அதற்கு வேடன் "காதலி, இப்பொழுது இரவாகி எங்கும் இருள் கவிந்துகொண்டது. நீர்வேட்கையை அடக்கிக்கொண்டு சிறிது பொழுது உறங்கினால், பொழுதும் புலர்ந்துவிடும்; இங்கே அருகில் ஓர் நீர்நிலை யிருக்கின்றது. விடிந்தவுடனே அதிலிருந்து உனக்கு நீர் தருவேன். கண்ணே, உறங்குக" என்று கூறித் தேற்றினன். தன் கணவனுடைய அன்பெனும் தீம்பாலளாவிய மொழியால் வேடச்சி ஆற்றியிருந்து உறக்கம கொண்டனள். அவர்கள் உரையாடுவதைக் கேட்ட இலக்குமணர், "ஐயோ! இப்பெண் தாகம எடுத்துத் தவிக்கவாம்; விடிந்தபிறகு நீர் தேடித் தருவதாம்; நீரின் இன்றியமையாமை ஏற்பட்ட இப்பொழுது நீர் இல்லையாம்; நீர்வேண்டுவ தில்லாதபோது நீர் தருவதாம். என்னே விந்தை! இவ்வேடன்தான் யாது செய்வான்? இவ்விருளில எங்குச்செல்லுவான்? அன்றி, நாலுவது சென்று நீர் தாலாம் என்றால், நீர் இருக்குமிடத்தை எங்கே காண்பது? இப்பெண்ணின் நீர் வேட்கை தீர்க்க மாட்டாதேன் இருப்பது வீணே. பிறர் துக்கம கண்டு சகியாது அதனைப் போக்க முயல்வதன்றோ மானிடர்களின் முதற் கடமையாம் அங்ஙனம் இயலாவிட்டால் இவவுடம் பெடுத்ததனால் யாது பயன்? பெரியாரும்—"அன்போடியைந்த வழக்கென்ப வாருயிர்க், கென்போடியைந்த தொடர்பு"—என்று கூறியருளினரன்றோ? இதனைக் கண்டு யானும் என்னெஞ்சமும் நோவதன்றி யாதுசெய்ய இயலும்? எம்பெருமானே! அருளாளனே! என் இவ்வாறு பல விதத்திலும் உயிர்களை வருத்துகின்றாய்?" என்று தம்முளே தமக்கியல்பாயுள்ள அருளால் இரங்கிக்கூறி மனம் எய்த்துக்

களைத்துத் துயின்றனர். வேடனும் வேடச்சியும் உறங்கு வார் போலே யோகுசெய்திருந்தனர்.

பூம்பொழில்களில் புடகள் புலம்பின. போயிற்றுக் கங்குல். பாயிருளகன்றது. புகுந்தது புலரி. சூழ்திசை யெல்லாம் சுடரொளி பரந்தன. தாரகைகள் மின்னொளி சுருங்கின. பனிமதி படரொளி பசுத்தனன். இலக்குமணர் உறக்கம் நீங்கினர். நாற்றிசையும் நனி நோக்கினர். கதிர வன் குணதிசைச் சிகரம் வந்தணைந்ததைக் கண்டனர். தம் முடன் வழிகாட்டி வந்த வேடனும் வேடச்சியும் உறக்கம் நீங்கி எழுந்துட்கார்ந் திருப்பதைக் கண்டனர். அவர்களு டன் கூப்பிடு தூரம் சென்றனர். அங்கே, அவர், வேடன் காட்டிய ஒரு கிணற்றிலிறங்கித் தம் கையால் நீரை முகந்து வேடனுக்கும் வேடச்சிக்கும் அள்ளி யள்ளிக் கொடுக்க அவர்கள் பருகிக் களைதீர்ந்தவர்களாய் உருக்காட்டாதே யொளித்தனர். பிறகு, இலக்குமணர் கிணற்றிலிருந்து வெளி யேறி வந்தனர். வேடனையும் வேடச்சியையும் கண்டிலர். அவர்கள் அவ்விடத்தில் தம்மை விட்டுச் சென்றமையால் வியப்பெய்தினர். அவர்கள் அவ்வனத்தில் திடீரென்று தம் கண்ணுக்குத் தோன்றாமல் எவ்வழிச் சென்றிருப்பார்கள் என்று கருதினார். அக்கிணற்றின் அருகில் ஒரு சாலையும் அச்சாலையில் சிலபல மனிதர்கள் தம் தம் காரியங்களைக் கருதி யங்கு மிங்கும் செல்வதையும அவர் பார்த்தனர். அவர்களருகில் இலக்குமணர் சென்று "ஐயன்மீர், இது எத்தேசம்? எவ்வூர்? என்று அவர்களைக் கேட்க, அவர் கள் "அந்தணரே, அதோ தோன்றும விமானத்தைப் பாரும்; அது புண்ணியகோடி விமானமல்லவோ? இந்நாடும் ஊரும் நவிலவும் வேண்டுமோ? இதுதான் காஞ்சீபுரம் என் பதைக் கருத்துறத் தெளியீரோ?" என்று கூறித் தம்

வழியே சென்றனர். அப்பொழுது இலக்குமணருக்கு உண்டாகிய மகிழ்ச்சிக்கோ ரளவு முண்டோ? முந்தின இரவு விந்தமலைச் சாரல் கந்தமலர்ப் பொழிலில் கருத்து மயங்கித் தவித்து நின்ற தாம், மறுநாட் காலை மதுமலர்ச் சோலைசூழ் மாமதிட் காஞ்சி மாணகரருகு மனமகிழ வந்தெய்துவது, மாமலர் மன்னிய மங்கை மகிழ்ந்துறை மார்பினனும் திருமால் திருவருளன்றிக் கூடுவதொன்றன்று என்று கருதி எழிலுற நிவந்த இணைத்தோள் வேடனும் ஏலவார் குழல் வேடச்சியும், கோகுலம் மேய்த்துக் குருந்தொசித்த கோவிந்தனும் கோலமலர்ப் பாவையுமேயாம் என்று எண்ணி அவ்விருவரும் தம் திறத்துக் காட்டிய இன்பமார் அன்பினை நினைந்து நைந்துள் கரைந்துருகி "ஐயோ! வேடன் தன் மனைவிக்கு விடிந்தவுடன் நீர் தருவதாகக் கூறிய கிணறு இச்சாலைக் கிணறேயோ! இது எம்பெருமானுக்கும் பெருந் தேவியார்க்கும் மிகவும் உகப்பானதாகும். நான் தினந் தோறும் இதிலிருந்து அவர்கள் பொருட்டுத் திருமஞ்சனம் எடுத்துக்கொண்டு போய்க் கொடுத்து அவர்களுடைய திருவருளுக் கிலக்காவேன்" என்று தீர்மானித்து நகரின் உள்ளே சென்று தமதில்லத்தை யடைந்து தம தன்னையாரிடம் நடந்தவற்றை நவின்று முன்னம் தாம் தீர்மானித்த வண்ணமே அன்று முதல் தினந்தோறும் சாலைக் கிணற்றிலிருந்து பேரருளாளனுக்கும் பெருந் தேவியாருக்கும் திருவாராதனத்துக் குதவும்படி திருமஞ்சனம் கொணர்ந்து கொடுத்து இனிதமர்ந்திருந்தனர்.

## இலக்குமணர் பிரமராக்ஷசை ஓட்டியது.

இஃதிவ்வாறாக, அங்கே விந்தமலைச் சாரலிலிருந்து கங்கை சென்று சேர்ந்த யாதவப்பிரகாசனை யுள்ளிட்ட கூட்டத்தார், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தத்தில் நீராடிக் காசி, கேதாரம், பதரிக்காச்சிரமம் முதலிய தலங்களிற் சென்று கடவுளை வணங்கிக்கொண்டு திரும்பவும் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தனர்.

பின்னர், ஒரு நாள், யாதவப்பிரகாசன் வரதராஜஸ்வாமியை வணங்குவதற்கு அத்திகிரி என்று பெயர் வாய்ந்த கோவிலுக்குத் தன்னுடைய மாணவர்கள் தற்சூழ்ந்துவரச் சென்றனன். சென்றவன் அக்கோயிலுள் இலக்குமணரைக் கண்டு தனக்குள்ளே வியப்பெய்தி வெளியே முகமலர்ந்தவனாய் அவரை நோக்கி "இலக்குமணரே, உம்மை நான் விந்தமலைச்சாரலில் காணாமல் மிகவும் மனம் வருந்தி எங்குந் தேடச் செய்து பார்த்தும் அகப்படாததால் உம்மைப் பேயோ, விலங்கோ, பெரும் பறவையோ பெயர்த்தெடுத்துச் சென்றுவிட்டது என்று கருதி ஏதோ ஒருவாறு என் பயணத்தை முடித்துக்கொண்டு இங்கே வருவதற்கும மனமற்றவனாய் வந்து சேர்ந்தேன். நீர் இல்லாத என் மாணவர் கோட்டி உயிரற்ற உடல்போலத் தோன்றியது. இப்பொழுது இங்கே உம்மைக் காணப்பெற்ற பெரும்பேற்றை என் என்பது! நீர் எவ்வாறு எங்களை விட்டுப்பிரிந்தீர்? உமக்கு நேர்ந்தது என்? இவற்றை விளங்க வுரைத்து என் மனக்கவலையைப் போக்கிடுக" என்று கூறினான்.

இலக்குமணர், அவன் கூறியவற்றைக் கேட்டு, அவன் வஞ்சக நெஞ்சனாயினும் தமக்கு ஆசிரியர் என்னும் மரியாதையினால் தாம் விந்தமலைச் சாரலில் வழிதப்ப, அவர்களைப்

பிரிய நேர்ந்தது என்றும் அப்பொழுது ஒரு வேடனும் வேடச்சியும் தமக்குத் துணையாகிக் கச்சிநகருக்கு அழைத்து வந்தனர் என்றும் நடந்தவற்றை அவனுக்குக் கூறினார். யாதவப்பிரகாசன் அவரை நோக்கிச் "சென்றன செல்லட்டும். இனி, நீர் முன்போலவே மற்ற மாணவர்களோடு சேர்ந்து என்னிடம் வேதாந்த பாடம் கற்பீராக" என்று கூறித் தன் மாணவர் கூட்டத்துடன் சேர்த்துக் கொண்டு கற்பித்து வருவானாயினன்.

இவ்வாறு சில நாட்கள் செல்ல, அந்நகரத்தரசன் மகளைப் பிரமராக்ஷஸ் என்ற ஒருவகைப் பேய் பிடித்துக் கொண்டு வருத்திற்று. அதனை ஓட்டி யொழிப்பதற்கு எத்தகைய மந்திரம் வல்லோராலும் முடியாமற் போயிற்று. போகவே அரசன், ஆராய்ச்சிவல்லாரைக்கூய், 'இதற்கென் செயற்பாலது?' என்றுசாவ, அவர்களும் "இந்நகரத்தில் யாதவப் பிரகாசன் என்பான், பெரியோனாய் மந்திரவிச்சைகள் கைவரப் பெற்றவனாய் விளங்குகின்றான். அவன்வரின் நின்மகளுடைய நோய் நீங்கும்." என்று நவின்றனர். அரசனும் அவர்கள் கூறியாங்கு யாதவனை அழைத்து வருமாறு ஏவலரைப் போக்கினான். அவர்களும் போய்ச் "சுவாமி! நம் நகரத்தரசன் தன் மகளது பேய்க்கோளை நீக்குவதற்குத் தம்மையழைத்து வர எங்கட்குக் கட்டளையிட்டுள்ளான். ஆதலின், தாம், பெருமனம் கொண்டு வந்தருளி நம்மரசன் மனக்கவலையை மாற்றியருளவேண்டும்." என்று வேண்டி நிற்க, யாதவனும், "ஏவலரே! எம்மை யரசன் அழைத்தது இதன் பொருட்டாயின் இஃதெமக்கோர் அரிய பொருளல்லவே; நாம் அங்கே இதன் பொருட்டுவரவும வேண்டுமோ? இருந்த இடத்திலிருந்தே இதனைப் போகக வல்லேமல்லேமோ? நம் திறமையை இதனிற் காணீர். நீவிர் சென்று

'யாதவபபிரகாசனும் யாம், 'போகச் சொன்னோம்' என அதனிடம் கூறுவீராக" என்று கூறி ஏவலரைச் செலவிடுத்தனன்.

அவ்வாறே ஏவலர்கள் சென்று அரசன் மகளை யணுகி "ஓ பிரமராக்ஷஸே, நீ அரசன் மகளை விட்டு நீங்கும்படி யாதவன் உனக்குக் கூறியுள்ளான். நீ அவ்வாறே இவளை விட்டு விலகவேண்டும்" என்று கூறின மாத்திரத்தில் அது, தன், பற்களெல்லாம் வெளியில் தோன்ற 'வெடவெட' எனச் சிரித்து "அறிவற்ற மூடர்காள், யாதவன என்னைப்போகச் சொல்வதே; நான்போவதே, நன்று, நன்று, வெகுநன்று! நீவிர் அவனையும் ஒரு பொருட் படுத்தினீர்களே! வெகு அழகு, வெகு அழகு! நீவிர் போய், நான் அவனையே இவ் வூரைவிட்டு நீங்கும் வண்ணம் கூறியதாகக் கூறுங்கள்" என்று அஞ்சாமற் கூறிய்.

அரசன் ஏவலாளர், அதற்கு அஞ்சி நடுங்கி ஓடோடியும் யாதவப் பிரகாசனிடம் போய் "ஐயரே, அப்பேயின் அட்டகாசத்தை நாங்கள் என்னென்று இயமபுவது; அது, உமமையே இந்நகரத்தைவிட்டு வெளியேறும்படி கூறுகின்றது. அதன் திறத்துச்செய்யலாவது என்?" என்று கேட்டு நின்றனர். அப்பொழுது யாதவபபிரகாசன், மிகக சினங்கொண்டு, தானே நேரில் போவது என்று கருதி மாணவர் குழாத்துடன் அரமனை நோககிச் சென்று அந்தப்புரத்தினுள்ளே நுழைந்து பேய்ககோட்பட்ட அரசன் மகளெதிரில் வீற்றிருந்து அதனை ஒழிப்பதற்குரிய மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினன். அவ்வேளை அந்தப் பிரமராக்ஷஸ் தான் மடக்கிக் கொண்டிருந்த கால்களை அவனெதிரில் நன்றாய் நீட்டிக் கொண்டு "ஓ, யாதவப் பிரகாசா, நீ உசசரிக்கிற மந்திரத்தை யானறியேனோ? அம் மந்திரம் இதுவல்லவா" என

அதைத்தான் வாயால் வெளிப்படையாகச் சொல்லிக் காட்டி, "ஓ துறவியே, நான் இந்த மந்திரத்துக்கும் உனக்கும்போகத் தக்கவனோ? முன்னைப் பிறவியில் நீ யாராயிருந்தாய் என்பதும் யான் யாராய் இருந்தேன் என்பதும் அறியாத நீயோ என்னைப் போக்கவல்லவன்? இவ்விரண்டையும் நன்கு அறிந்திருக்கிற நானோ உன் மந்திரத்திற்குப் பயபபட்டுப்போகின்றவன்" என்று கூற, யாதவன், திடுக்கிட்டு, வியப்பெய்தி, வேறொரு முயற்சியும செய்ய வல்லமையற்றவனாய், அதனை நோக்கி, "நம இருவர் முற்பிறப்பின் வரலாறுகளையும் நன்கறிந்துளள நீ, இவ்வாறு திக்கதியடைய நேர்ந்தது எவ்வாறு? நம்முடைய முற்பிறப்பின் வரலாறுகள் தாம் என்ன? அவற்றை விளங்கக் கூறுக" என்று கூறிய வளவிலே, அது அண்டங்கள் எல்லாம் வெடிபடச் சிரித்து, "யாதவனே, கேள்; முற்பிறப்பில் நீயோருடும்பும் நான் ஒரு மறையோனுமா யிருந்தோம்; அக்காலத் திருவரங்க மாநகரிலிருந்து வடவேங்கடம் செல்லும் வைணவர் பெருங்கூட்டமொன்று வழியில் மதுராந்தகத்தில் தங்கி, ஏரியில் நீராடித் திருமாலை வணங்கி வழிபட்டு உணவு கொண்டு தம் வழியே செல்ல அங்கேயோர் புறறுக்குள் மறைந்திருந்த நீ, கீழே சிதறிக் கிடந்த உணவின் மிச்சந்தை உண்டதினால் இத்தகைய மேற்பிறப்பை யடைந்தமையோடு புலவர் திலகமுமாய் விளங்குகின்றாய்; நானோ, மறையோனாய்ப் பிறந்து வேதங்கள் எல்லாம வல்லோனா யிருந்தும், சிறந்த வேள்வியொன்றனை இயற்றுங்கால், உண்டாகிய மந்திரம் செய்கை முதலியவற்றின் குறைபாடுகளினால் இக்காலை இப்பேய்ப் பிறபபில் பிறந்து கலங்குகின்றேன்; இவை தாம் நம்மிருவருடைய முற்பிறப்பின் வரலாறுகள்" என்று கூறிற்று. யாதவன், அதனைக் கேட்டுப் "பேயே, நான் உடும்பாயிருந்த காலத்தில், திருமாலடியவர்கள் உண்ட மிச்சிலை

உண்டிருந்தேனாயின், எனக்குக் கிடைக்கும்பேறு' ஈதல்லவே? பிறவாமை என்பதல்லவோ என்பேறாகும்" என்று வினவப் பேய், "அத்தகைய அறிவோடு நீ அப்பொழுது உண்டிருப் பாயேயானால், நீ கூறிய வாறே பிறவாமை உனக்குக் கிடைத்திருக்கும்; அங்ஙனமன்றி நீயுண்டமையால், மேலான இப்பிறவியை எய்தினை என்று விடை கூறிற்று.

அப்பால், யாதவன், 'நாம் எவ்வாறாயினும் இம்மகளை விட்டு இப்பேய் நீங்குமாறு செய்யவேண்டும்; அப்பொழு தே அரசன் நம்மை அன்போடளித்துப் போற்றுவான். இதனிடத்தில் நம்முடைய படாடோபம் பலிக்காது; பயத் தால் முடியாவிடினும் நயத்தாலாவது நாம் முயலவேண்டும்' என்று தன்னுள் கருதிப் "பேயே, நீ என்னால் இப் பெண்ணைவிட்டு நீங்காவிடினும் உன்னுடைய இப் பேய்ப் பிறவிக்கும் ஒரு முடிவுவேண்டுமே; அது யாரால், எப் பொழுது ஏற்படும் என்பதாவது நீ கூறலாமல்லவா? அது உனக்கும் நன்மையன்றோ?" என ஒருபாயத்தால் வினவ, அப்பேய், "யாதவனே, எனக்கு நற்காலம் கிட்டியது என்று தெரிந்துகொள். இதோ உன் பக்கத்தில் நிற்கும் உன் மாணவர் இலக்குமணர், தமது திருப்பவளச் செவ்வாய் திறந்து தித்திக்கும் செஞ்சொல்லால் என்னைப் 'போ' எனப் பணித்தருளித் தமது பூவார்கழல்கள் அருவினையேன் தலை மேல் பொருந்துமாறு புணர்ப்பாரே யாமாகில், அக்கணமே இப்பெண்ணை விட்டு நீங்குவேன். எனக்கும் நற்கதியுண் டாம்" என்று கூற, யாதவன், தன்னருகில் நின்று கொண்டி ருந்த இலக்குமணரை நோக்கி, "நீர் இந்தப் பேயினையோட் டுக" என, இலக்குமணரும், "ஓ, பிரமராக்ஷஸே, நீ ஏன் இந் தப் பெண்ணைப் பிடித்து வருத்துகின்றாய். விரைவில் இவளை விட்டு நீங்குவாயாக" என்று கூறிப் பணித்தவளவில், அப்

பேய், பெருங் குரலெடுத்துக் கதறி யழுது, "அன்பும் அருளும் ஆருயிரோம்பும் ஒரு பெருங் கொள்கையும் வாய்ந்த பெரியீர், என்போன்ற மஹா பாபிகளுடைய பாபங்களைப் போக்கி ஆட்கொள்ளக் கருதியன்றோ தேவரீர் இவ்வுலகத் தவதரித்தருளி யிருக்கின்றீர். ஆதலின், தேவரீரது, போது நின்றது என்னப் பொலிந்த பொன்னங் கழற் காலை அடியேன் முடிமீது ஊன்றி அடியேனையும் ஆட் கொண்டருளுமாறு வேண்டுகின்றேன். சுவாமி, அடியேன் வேண்டியவாறு செய்து இப் பேய்ப் பிறப்பினின்றும் அடியேனை ஈடேற்றி யருளுக" என்று பூமியில் பலமுறை வீழ்ந்து வணங்கி வேண்டிக்கொண்டது.

இலக்குமணரும அதனை வேண்டுகோட்கிரங்கி, அது கூறியவாறே செய்தருள, அப்பேய் அப்பெண்ணைவிட்டு நீங்கித் தான் நீங்கியதற் கடையாளமாக அப்பேயின் வாழ் விடமான அவ்வந்தப்புரத்திற் கருகில் நின்ற ஓரத்திமரத்தை வேருடன் முறித்துத் தள்ளிவிட்டுச் சென்றது. அவ்வாறு செல்லும்பொழுது, "யாதவப்பிரகாசனே, நீ இந்த மஹா புருஷனை யறிந்து கொண்டா யல்லை. நீ எவ்வளவு கற்றிருந்தும, யாது பயன்? இவரே உலகமுய்யத் தோன்றிய உத்தம புருடா என்று அறிந்து கொள்க" என்று கூறி விலகிச் சென்றது. பேய்க்கோள் நீங்கிய அரசன் மகள் இலக்குமணரை வணங்கி அந்தப்புரம் சென்றாள். அன்று முதல் அவள் துன்பம் நீங்கி இன்பமுற்று வாழ்ந்தனள். யாதவப்பிரகாசனும் இலக்குமணர் முதலான மாணவர்களுடன் தன்னிடம் சென்று அவர்களுக்குப் பாடங் கற்பித்து வந்தான். இஃதிங்ஙனமாக:

---

## ஸ்ரீ ஆளவந்தார் இலக்குமணரைச் சந்தித்தது.

அக்காலையில், அரங்கமா நகரில், திருமாலடியவர் குழாம் தம்மைச் சூழ்ந்து வீற்றிருக்க, அவர்கள் நடுவில், தாரகை நடுவண் தண்மதி போல யமுனைத் துறைவர் என்ற மறு பெயரையுடைய ஸ்ரீ ஆளவந்தார் என்னும் பரமாசாரியர் வீற்றிருந்து ஞானம், யோகம், பக்தி, வைராக்கியம் முதலிய வற்றை அவர்களுக்கு இந்தவகைத்து என்று எடுத்துக்காட்டி விளங்கவைத்து விசிஷ்டாத்வைதமதம் என்ற ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை மேலோங்கச் செய்து கொண்டிருந்தனர். அவர், தமது குரு பரம்பரையின் முன்னோர்களான சடகோபர், நாத முனி, உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆகிய இவர்கள், வருங்காலத்தில் இவ்வுலகில் தோன்றி, இருளையும் ஞாலத்தி லிடர் கடிந்து அருளீயுமவரான எந்த மஹா புருஷருடைய அவதாரத்தை எதிர் பார்த்து, அவருடைய விக்கிரஹ வடிவத் தைப் போற்றி வந்தனரோ, அந்த மஹா புருடருடைய அவதாரம இப்பொழுது இவ்வுலகில் நிகழ்ந்திருக்க வேண் டுமே, அதனை எவ்வாறு அறிவது என்று கருதிக்கொண் டிருந்தனர்.

அவர், அவ்வாறிருக்குங்கால், கச்சிமா நகரிலிருந்து அரங்கத்து அறிதுயி லமர்ந்த செல்வனை அடிதொழுதற் பொருட்டு வந்த திருமாலடியவர் சிலர், திருமால் சமயத்துப் பெரியாரான ஆளவந்தாரை வந்தடிபணிந்து நின்றனர். ஆளவந்தார் அவ்வாறு வந்தவர்களை இருக்கவைத்துக் கச்சி மாநகரின் சிறப்புக்களை வினவியருள, அவர்களும் அம்மாநக ரின் விசேடங்களைக் கூறிவருமளவில் "யாதவப்பிரகாசன் என் பான் அத்வைதமத சந்நியாசி ஒருவன், வேதம் மிகவும் வல் லவனாய் மாணவர் பலருக்கு வேதாந்த பாடம் கற்பித்து வரு கிறான். அவன் மாணாக்கர்களில் இலக்குமணர் என்பவர்

அவர்கள் 'யாவரிலும் கல்வியறி வொழுக்கங்களில் மிக்க வராய்த் திருமாலுக்கே தொண்டுபுரியு மனமுடையவராய் விளங்கிக்கொண்டிருக்கிறார். அவர் ஸ்ரீபெரும்பூதூரில் ஆசூரி அப்பிள்ளை என்ற கேசவ சோமயாஜியாருக்குத் திருக் குமாரராய் அவதரித்தவர். யாதவப்பிரகாசன் மாறு கொள் ளக் கூறிய சில வேத வசனங்களுக்கு அவர் நேர்பொருளு ரைத்துக்காண, அது, யாதவனுக்கு மனவருத்தத்தை யுண்டு பண்ணியும் உள்ளது. அதனால் அவன் அவரை முடித்து விடுவது என்று கருதிக் கங்கைக்கு அழைத்துச் செல்ல அப் பொழுது வழியில் அவர் அவனைத் தப்பி ஒரு காட்டில் நுழையப் பெருமாளும் பிராட்டியும் வேடனும் வேடச்சியு மாகி அவருக்கு வழிகாட்டி யுய்வித்துக் கச்சி நகர் கொணர்ந்து சேர்த்தனர். அனறியும், அவ்விலக்குமணர் யாத வனால் போக்க முடியாத பிரமராக்கதத்தை அரசன் மகளை விட் டகலவெருட்டி யருளியு முள்ளார்'' என்று கச்சி நகர நிகழ்வுகளைக் கவுணிற மொழிந்தனர்.

ஸ்ரீ ஆளவந்தார் அவர்கள் கூறியதைக் கேட்டு மகிழ் கூர்ந்து தம்முடைய சீடர்களை நோக்கி "அன்பர்களே! பார்த்தீர்களா? நாம் கருதியவாறே இப்பொழுது அந்த மஹாபுருஷருடைய அவதாரம் இவ்வுலகத்தில் நிகழ்ந்திருக் கின்றது. அவருக்குப் பெருமாளும் பிராட்டியும், வேடனும் வேடச்சியுமாகக் காட்சி தந்தருளினராம். நாம் கச்சிமா நக ரம் சென்று அப்பெரியாரைப் பார்த்துவரவேண்டும். ஓரா சான் வழியாக உலகத்தில் ஓரொருவரே உணர்ந்து வழி பட்டு வந்த திருமால் சமயம், இனி, அவரால் பலருக்கும உணர்த்தப்பட்டு இவ்வுலக முழுதும் பரவப்போகின்றது. அவருடைய வருகையையே நம்முடைய முன்னோர்கள் எதிர்பார்த்துக் 'கலியும் கெடுங் கண்டுகொண்மின்' என்று

அருளிச் செய்ததும், என அறிக" என்று கூறி அவர்களு டன் கச்சிமா நகர் நோக்கி வழிக்கொண்டு சென்றார்.

செல்கின்றவர் வழிநெடுகிலுமுள்ள திருமால் திருப்பதி களை வணங்கிக் கொண்டு கச்சிமா நகரடைந்து அங்கே திருக் கச்சி நம்பிகளால் வணங்கப்பெற்று வரந்தரும் பெருமாள ரையர் என்பவருடன் கோயிலினுட் சென்று தேவப்பெரு மாளை வணங்கிக் கோயில் மரியாதைகளைப் பெற்று அங்கே ஒரு பக்கலில் எழுந்தருளி யிருந்தார். அவ்வேளையில் யாத வப் பிரகாசன் தன் மாணவர் குழாம் புடைசூழ்ந்து வரக் கோயிலுட் சென்று பிராகாரம சுற்றி வரும்பொழுது, யமு னைத்துறைவர் இருக்கு மிடத்தைக் கடந்து சென்றனர். அப்பொழுது, யமுனைத்துறைவராம ஆளவந்தார, தம்முடன் நிற்கும் திருக்கச்சி நம்பியை நோக்கி, "யாதவப்பிரகாசனு டன் செல்லும் இக் குழுவினுள், இலக்குமணர் யாவர்?" என்று கேட்டருள, அவர், "அதோ யாதவப் பிரகாசனுக் கருகில், மிகவும் நெடியோராய்த் தாள்வரையும நீண்ட தடக்கையராய்ச் சிவந்த திருமேனியும் அகன்ற மார்பு முடையாராய்ச் செல்லு மவரே இலக்குமணராவார்" என்று கூறக் கேட்ட ஆளவந்தார், 'இவரே நம் தர்சனத்தை, இனிதே நடத்திச் செல்லும் உத்தம புருடராவதற்குரியார' என்று தம்மனத்துட் கொண்டு அப்பொழுது யாதவப்பிர காசனுடன் செல்லும் இலக்குமணரிடத்தில் ஒன்றும் கூற முடியாதவராய் அங்கு நின்றும் புறப்பட்டு ஸ்ரீரங்கத்திற்கு வந்து எழுந்தருளியிருந்தார். இலக்குமணருக்கு ஸ்ரீ ஆள வந்தார் வந்ததும் தம்மைத் திருக்கண்களால் நோக்கியருளி யதும் ஆகிய ஒன்றும் தெரியாது.

அப்பால், ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளி யிருக்கும்போது, அவர் திருமேனியில் நோய் உண்டாக

யாவரும் கண்டு விசன மெய்தத் தொடங்கினார்கள். அப்பொழுது ஆளவந்தார் அவர்களைத் தேற்றித் தமக்கு ஏதாவது நேரிட்டாலும் அதன் பொருட்டு அவர்கள் உயிர் விடத் துணியக் கூடாது என்று சொல்லிப் பிரமாணம் செய்யும்படி கூற, அவர்கள் அவ்விதமே செய்வதாகக் கூறி அவருடைய கட்டளையை மீறுதிருந்தனர்.

இஃதிவ்வாறாக, இலக்குமணர், தமது குருவாகிய யாதவப்பிரகாசனுக்கு ஒரு நாள் எண்ணெய் தேய்த்துக்கொண்டிருக்கும்போது, அவ் யாதவப்பிரகாசன், வேதாந்த வாக்கியங்களுள் ஒன்றற்கு உண்மைப் பொருளை யுணராது மாறுகொளப் பொருள் கூற, இலக்குமணர் அதனைக் கேட்டாற்றாமல் மிகவும் துயரத்துடன் தமக்குள்ளே யழத் தொடங்க, அதனால் கண்ணீருண்டாகி அது யாதவப்பிரகாசனுடைய தொடைகளில் சிந்திற்று. அவ்வாறு சிந்திய கண்ணீர் அவனது தொடைகளில் 'சுரீர்' என்று தைக்கவே, அவன் நிமிர்ந்து நோக்கி, "இது ஏது?" என்று கேட்க, இலக்குமணர், "நீர் வேதாந்த வாக்கியத்திற்குப் பொருள் மாறுகொளக் கூறியமையால் எனக்குத் துயரம் பொறுக்க முடியாமல் கண்ணீர் உண்டாயிற்று. அதுவே உமது தொடைகளில் சுறீர் என்றது" என்று கூற, அதனால் அவன் மிகவும் சினங்கொண்டவனாய் நீர், இனிமேல் என்னிடம் வேதாந்தபாடம் கற்கவேண்டாம் என்று கூறி இலக்குமணரைத் தன்னிடத்தில் நின்றும் விலக்கிவிட்டான். அதனால் இலக்குமணர் பாடம் கற்பதை விட்டொழிந்து தமதன்னையாரிடம் சென்று தமக்கும் யாதவப்பிரகாசனுக்கும் நடந்தவற்றைக் கூறி மேல் செய்யலாவது என்? என்று உசாவி நின்றனர். அதற்கு அவரது தாயார், "அப்பனே, நீ கற்க வேண்டுவனவெல்லாம் கற்றாயிற்று. இனி, நீ, கற்க வேண்டுவது ஒன்று

யில்லை. இனி, நீ எம்பெருமானுக்கு உகப்பான செயல்களைச் செய்துகொண்டிரு. அச்செயல், முன்போல நீ சாலைக் கிணற்றிலிருந்து பேரருளாளனுக்கும் பெருந்தேவியார்க்கும் திருமஞ்சன தீர்த்தம் கொணர்ந்து கொடுத்தலாம். அவர்கள் உனக்கு நன்மையையே செய்தருளுவார்கள்." என்று கூறினர். அவ்வாறே இலக்குமணர் எழிலார் திருமார்பற்கு ஏற்கும் இது வென்று தினந்தோறும சாலைக் கிணற்றிலிருநது திருமஞ்சன தீர்த்தம் கொணர்ந்து கொடுத்து இனிதமர்ந்திருந்தனர்.

## இலக்குமணர் ஆளவந்தா ரடிவணங்க ஸ்ரீரங்கம் எழுந்தருளியது.

இவர் இவவாறிருக்க, ஸ்ரீ ஆளவந்தார் மிகவும் நோவுற்றனராக அவரைக் காண்பதற் கென்று ஸ்ரீ காஞ்சிபுரத்திலிருந்து இரண்டொரு ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்ரீரங்கம் வந்து அவர் முன் சென்று நிற்க, ஆளவந்தார் அவர்களை நோக்கி யாதவப் பிரகாசனையும் இலக்குமணரையும பற்றி யுசாவ, அவர்கள் 'இலக்குமணர் இப்பொழுது யாதவப்பிரகாசனோடு மாறுகொண்டு அவனை நீங்கிப பெருமாளுக்கு நித்ய கைங்கர்யம் செய்து வீற்றிருக்கின்றார்." என்று கூறக் கேட்டு, ஆளவந்தார் அளவற்ற மகிழ்ச்சி யுடையராய்ப் பேரருளாளன், நீடித்த நாளாகவுள்ள நம் எண்ணத்தை நிறைவேற்றி வைத்துவிட்டார். இனி யென் குறையுளது? ஸ்ரீ வைஷ்ணவ சமய மாகிய கொடியும் தக்கதொரு கொழு கொம்பை யடைந்து விட்டது" என்று கூறித் தமமால் அருளிச்செய்யப் பெற்ற தோத்திர ரத்தினத்தைத் தம் சிஷ்யர் பெரிய நம்பி யிடம் கொடுத்து, "நீர் கச்சி நகர் சென்று

இலக்குமணரை நம்பிடத்திற்கு அழைத்து வாரும்'' என்று சொல்லிப் போகவிட, அவரும மிக விரைவாய்ச் சென்று திருக்கச்சி நம்பியோடு பேரருளாளன் சந்நிதியடைந்து, ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்திர ரத்தினத்தை எடுத்துக் கூறித் துதித்துப் பின்னர் இலக்குமணர் சாலைக் கிணற்றிற்குத திருமஞ்சனம் கொணரச் சென்றிருக்கிறார் என்று தெரிந்து அவர் வரும் வழியில் நின்று கொண்டு ஆளவந்தார் அருளிய தோத்திரத்தை உரக்க எடுத்தோதிக்கொண்டு நின்றார். அவ்வேளையில், இலக்குமணர் சாலைக் கிணற்றிலிருந்து திருமஞ்சன நீர்த்தம எடுத்துக்கொண்டு திரும்பி வருகின்றவர், பெரிய நம்பி கூறிக்கொண்டு நிற்கும் தோத்திரத்தைச் செவியேற்று, "இது மிகவும் மேன்மை வாய்ந்த துதியாக இருக்கின்றதே. இது திருமாலின் மேன்மையைத் தெரியப் படுத்துகின்றதே. செவிக்கினிய செஞ் சொற்கள் அமைந்து சிந்தைக்கினிய தீம்பொருள் பொதிந்து திகழ்கின்றதே. இத் தகைய துதியை இயற்றியருளிய பெரியோரைக் கண்களாரக் கண்டு களிப்பெய்த வேண்டும்'' என்று கருதியவராய்ப் பெரிய நம்பி திரு முன்பு சென்று நின்று, "பெரியோரே, இந்தத் தோத்திரத்தைச் செய்தருளிய மஹான் யாவர்? அவர் எங்கே எழுந்தருளி யிருப்பது? அவரை அடியேன் கண்டு சேவிக்க வேண்டுமே. இவற்றை யெல்லாம் விவரமாக அருளிச்செய்ய வேண்டும்'' என்று வினவி நின்றார்.

பெரிய நம்பி அவர் கூறியவற்றைக் கேட்டுக் "கற்று வல்லவரே, இத் தோத்திர ரத்னத்தை யருளிச் செய்தவர் ஸ்ரீரங்கம் என்னும் திவ்ய தேசத்தில் எழுந்தருளியிருக்கிறார். அவர் ஆளவந்தார் என்னும் மஹான் ஆவார். தேவரீர் அவரைக் காணவேண்டும் என்னும் அவாவுடையீராயின், அடியேனோடெழுந்தருளினால் அவரை வணங்கி மகிழலாம்''

என்று கூற, இலக்குமணர் அப்பொழுதே அவரைக் காண வேண்டும் என்னும் அவாவால் திருமஞ்சன தீர்த்தத்தைச் சந்நிதியில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு உடனே பெரிய நம்பியுடன் ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டனர்.

அவ்விருவரும் மிகவும் விரைவாகப் புறப்பட்டு வழிக்கொண்டு ஸ்ரீரங்கத்திற் கருகில் காவேரியின் வடகரையை நெருங்கின வளவில், அக்கரையில் திருக்கரம்பன் துறையில் ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருந்திரள் மிகப் பேரிரைசசலுடன் திரண்டு நிற்பதைக்கண்டு, தங்கள் எதிர்வருவார்களை நோக்கி "இது என்ன கூட்டம்" என்று வினவ, ஆளவந்தார் என்னும் ஸ்ரீ வைஷ்ணவ சமயத்துப் பெரியார், திருநாட்டுக்கு எழுந்தருளினார்: அவரைப் பள்ளிப் படுக்க வந்த கூட்டமாகும் இப்பெருங் கூட்டம்" என்று விடை பகர்ந்து அவர்கள் செல்ல, அதனைக் கேட்ட பெரிய நம்பியும் இலக்குமணரும் அடியற்ற பனைபோலப் படியுற்றுப் பதைத்துருகி, 'ஐயோ! என் ஆசிரியரை அந்திய காலத்தில் பிரிந்து அவருடைய திருவடிக்கீழ்க் குற்றேவல் செய்யப்பெறாத மஹாபாவி யாயினேனே' என்று பெரிய நம்பியும், மிக்க பசியுடையான் ஒருவன் உணவிருக்கு மிடத்தை நெருங்கி வரும்பொழுது அவ்வுணவு மாயமாய்க் காணாமல் போயினால் எவ்வாறு துடிப்பானோ அதுபோல் ஆருயிர் சோர்ந்து அறிவு சிதறி அங்கங் குலைந்து அடி பெயர்த்து வைக்க முடியாமல் செயலற்றவராய்ப் புலம்பிக்கொண்டு இலக்குமணரும் நிற்க, அவ்வேளையில வாளோடு காணத் தேளோடு மாயும் என்னும் முதுமொழிப்படி இலக்குமணர் படும் பாட்டைக் கண்ட பெரிய நம்பி தம்முடைய இழவையும் மறந்து இலக்குமணரைத் தேற்றி அவர் கையைப் பிடித்து ஆளவந்தாரைப் பள்ளிப்படுக்கு மிடத்திற்கு அழைத்துக்

கொண்டுபோய் அவரைச் சேவிக்கும்படி செய்ய அப்பொ ழுது அங்கே திரண்டு நின்ற திருமாலடியார் கூட்டம் சற்று விலகிக்கொடுக்க, இலக்குமணரும் ஆளவந்தாரருகில் நெருங்கி அவரை வணங்கி அவருடைய அடிமுதல முடிவரை ஒவ வோரவயவமாக அன்போடு நோக்கின வளவில், ஆளவந் தார் திருமேனியின் வலத்திருக்கையில மூன்று விரல்கள் மடங்கியிருக்கக் கண்டு அங்கேயுள்ள அடியார் குழாங்களை நோக்கி, இப்பெரியோர் கைவிரல்கள் எப்பொழுதும் இவ் வாறே மடங்கியிருப்பதுண்டோ? என்று வினவ, அவர்கள், 'இப்பொழுது தான் இப்படியுள்ளதேயொழிய இதற்கு முன்பு இவ்வாறு இருந்ததில்லை? என்று விடைகூற, அங்ஙன மாயின், 'இவர், அரும்பொருள்களை விரித்துரைக்கும் வேளை களில், தம் மனத்தின் கண் ஏதாவது எண்ண மிருப்பதாகக் கூறியதுண்டோ?' என்று திரும்பவும் இலக்குமணர் வினவ, மற்றவர்கள், "ஆம், திருமாலன்றி மற்றுமோர் தெய்வ முண்டோ? எனத் தெளிவுறவிரித்துரைத்த வியாச பராசர முனிவர்களிடத்து நன்றியறிவுடைமையும், திருககுருகைப் பிரான் சடகோபனிடம் பக்தியும், வியாச சூத்திரத்திற்கு ஷ்டாத்வைத மதசசார்பாகப் பாடியம் செய்யவேண்டும் என்னும் வே[illegible]ம் உடையராயிருந்தமையைப் பல காலும் உரை[illegible]யதுண்டு" என்று கூறக்கேட்டு இலக குமணர் "அடியேனுடைய இவவுடம்பு நோயற்றுச் சுகமே யிருந்து இவ்வாசாரியர் திருவருளும் கடவுளுடைய திருக் கருணையும அடியேனிடத்தில் நிறைந்து நிற்குமாயின், இப் பெரியார் மனத்துக்குறையைப் பெயர்த்திடுவேன்" என்று அருளிச்செய்தவுடனே மடங்கியிருந்த ஆளவந்தாரின் விரல் கள் மூன்றும் நிமிர்ந்து நின்றன. அதனைக்கண்ட யாவரும் வியப்பெய்தி "அண்ணலே, இப்பொழுது நிகழ்ந்த இந் நிகழ்ச்சியினால் இவ்வாசாரியருடைய திருவருள் உம்மிடத்

தில் நிறைந்துள்ளது என்பது நன்றாக விளங்குகின்றது. இத னால் தேவரீருக்கு எய்தற்கரியது ஒன்றுமின்றென உணர்ந் தருளுவீராக. இனி, இப் பெரியாருக்குப் பின்னர் நீரே தலை வராயமர்ந்து இத்திருமால் சமயத்தைச் சிறப்புற நடத்தி யருளுவீராக" என்று யாவரும்வணங்கி விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

அப்பொழுது, இலக்குமணர் அவர்களுக்கு 'ஆம்' என்று கூறி, ஸ்ரீ ஆளவந்தார் சீர்பாதங்களில் அன்புடைய வராய் வீழ்ந்து வீழ்ந்து வணங்கிக் கண்ணீர் வார மெய்ம் மயிர் சிலிர்க்க அவருடைய திருமேனியை நோக்கியகண்ணி மையாமல் நோக்கி நோக்கி நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நீக்கமிலாவகை தேக்கி, எதிகட்கிறைவன் யமுனைத்துறை வனும் ஆளவந்தாருடைய இணையடியாம கதிபெற்றுடைய வராய் 'அரங்கத்தமர்ந்தபிரான் திருவருள் நம்பக்கல் இருந்த படியிதுவேயோ; இது வாயின் யான் இப்பொழுது அரங்க நகராளியை அடிவீழ்ந்து வணங்கேன்; கச்சிநகருக்கே திரும் பவும் சென்றிடுவேன்' என்று தமமுள் கருதி நீராடி நித்திய கருமங்களை நிறைவேற்றிக்கொண்டு தம்மை மிகவும் அன் போடு கச்சியினின்றும் அழைத்து வந்[illegible]ருளாளராகிய பெரிய நம்பியின் திருவடிகளில் வீழ்ந்துமல் [illegible]ங்கி விடை கொண்டு ஸ்ரீ ரங்கத்துள் நுழையாமல் [illegible]காவேரிக்கரையிலி ருந்தவாறே புறப்பட்டுக் கச்சிமாநகரை வந்தெய்தினர்.

---

## இலக்குமணர் தமக்கு ஆசாரியரை அறிந்துகொண்டு உபதேசம் பெற்றது.

பின்னர், இலக்குமணர், காஞ்சிபுரத்தையடைந்து திருக்கச்சிநம்பி முதலான பெரியோரிடம் ஸ்ரீ ஆளவந்தார் திருநாடலங்கரித்த செய்தியை விண்ணப்பம் செய்ய, அவர்களும் கேட்டு மிகவும துக்கமடைந்து தேறிப் பின் நீராடிச் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்து வரதராஜப் பெருமானை வணங்கியிருந்தனர். இலக்குமணரோ தாம் இதற்குமுன் செயது வந்ததுபோலவே அத்திகிரியருளாளனுக்குச் சாலைக் கிணற்றிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொணர்ந்து கொடுத்துக்கொண்டிருந்தனர். இவ்வாறிருக்க ஒருநாள், இலக்குமணர், திருக்கச்சிநமபிக்குத் தாம் சிஷ்யராயிருந்து, அவர் வழியாகத் திருமாலின் திருக்குணங்களைத் தெரிந்துகொண்டு, அப்பெருமானை வழிபடும் மந்திரத்தையும் அப்பெரியாரிடமிருந்து பெற்று வழிபட்டு முத்திபெறலாம் எனக் கருதித் தம் கருத்தைத் திருக்கச்சி நம்பியிடம் விண்ணப்பம் செய்ய, அவர், இலக்குமணரை நோக்கி, "அன்புடையீர், நீர் கூறுவது இவ்வுலகத்துள்ள சாமானிய ஜனங்கள் ஒப்புக்கொள்ளத் தகுந்ததன்று. நீரோ மேலான வருணத்தில் பிறந்தவர். நான் தாழ்ந்த வருணத்தவன். ஆதலின், நீர் எனக்குச் சிஷ்யனுகவும் நான் உமக்குக் குருவாகவும் அமைவது இவ்வுலக சம்பிரதாயத்திற்கு அடுத்ததன்று. உலகத்தைக் கடந்து பக்திவழியொழுகி மோக்ஷத்தை யடையும் நிலையில் நிற்பவர்களுக்கு வருணச்சிரமபேதங்கள் இல்லை. அவர்களுக்கு எல்லாம் ஒன்றே. உலக மரியாதைக்கு நாம் இப்பொழுது அவ்வாறு இருத்தல் கூடாது. ஆதலின், நீர் என்னிடம் கொண்டுள்ள அன்பை வெளிக்காட்டாது ஒளிப்பீராக" என்று கூறி இணங்காது மறுத்து விட்டனர்.

திருக்கச்சிநம்பி மறுத்துவிடவே, இலக்குமணர், அவரை நோக்கிப் "பெரியோரே, தேவரீர் அடியேன் வேண்டிக் கொண்டதை மறுத்துவிட்டாலும், அடியேனுடைய மனத்தின் கண் சில நினைவுகள் உண்டு. ஸ்ரீ அருளாளப் பெருமானிடம் அந்நினைவுகள் முடிவுபோமாற்றைக் கேட்டு அடியேனுக்கு அருளும்படி கேட்டுக்கொள்கிறேன்," என்று விண்ணப்பம் செய்து கொண்டார். அதற்கு நம்பியும 'அப்படியே ஆகட்டும்' என்று அவரிடம்கூறி, அன்றிரவு கச்சியெம்பெருமானுக்குத் திருவாலவட்டம் பணிமாறிக்கொண்டு வெகு நாழிகை நிற்கக் கச்சிக்காரொளிவண்ணன் நம்பியின் திருமுகம் நோக்கி "நம்பியே, நீர் நம்மிடம் ஏதோ விண்ணப்பம் செய்து கொள்ளவேண்டும் என நிற்கின்றீர்போல உம்முடைய முகம காட்டுகின்றது. அகத்தினழகு முகத்திற்றெரியுமன்றோ? நீர் தெரிவித்துக்கொள்ள வேண்டுவனவற்றை இப்பொழுது தெரிவித்துக்கொள்ளலாம்" என்று கட்டளையிட்டருளினார்.

எம்பெருமான் தம்மிடம் வினவியருளும்படியான பேற்றைப் பெற்ற திருக்கச்சி நம்பி, மிகவும் மகிழ்ச்சி கொண்டவராய்ச் "சுவாமி, இவ்வூரில் யாதவப் பிரகாசனிடம் சாத்திரங்களையெல்லாம் நன்கு கற்றுணர்ந்த இலக்குமணர் என்பவர் தம் மனத்தில் ஏதோ சில நினைவுகள் உண்டு என்றும், அவற்றின் விஷயமாகத் தேவரீருடைய திருவுள்ளம் எத்தகைத்து என்பது தமக்குத் தெரியவேண்டும் என்றும் விரும்புகின்றார். அதனைத் தேவரீரிடம் விண்ணப்பித்துக்கொள்ள விரும்பி நின்றேன்" என்று கூறினார்.

புள்ளையூர்வான் ஆகிய அத்தியூரான், "நம்பியே, அவ்விலக்குமணனது மனத்தின்கண் உள்ளவற்றிற்கு விடைப்கருவேன்; கேள் நாமே பரம்பொருள்; நம்முடைய சித்தாந்

தம் ஜீவாத்ம பரமாத்ம பேதத்தையுடையது. மோக்ஷத்தை யடைவதற்கு உபாயம் பிரபத்தியே (ஈசுவரனிடம் தன்னுடைய குற்றங்களைப் பொறுத்தருளுமாறு வேண்டிக் கொள்ளுதல்) ஆகும். அந்திம காலத்தில் ஈசுவரனை நினைக்க வேண்டியதில்லை. (முன்னேல் நினைத்திருந்ததே போதும்) இவற்றிற்கெல்லாம், இலக்குமணன் பெரிய நம்பி என்பவரை ஆசாரியனாக அடையவேண்டும். இவையே, அவன் நினைவினுக்கு விடையாகும். இவற்றை அவனிடம் தெரியப்படுத்துக" என்று கூறியருளினார். அவற்றைக் கேட்டுக்கொண்ட திருக்கச்சி நம்பி தம்பிடமடைந்து அன்றிரவின் மற்றைப் பங்கையும் உறங்கிக்கழித்து, மறுநாள் விடிவோரையில், தம்மிடம் வந்த இலக்குமணரிடம் முன்னாளிரவில் பெருமாள கூறியருளியவற்றைத் தெரியப்படுத்த, இலக்குமணா அவற்றைக்கேட்டு வியப்பெய்தியவராய்க் கிடையாதன கிடைக்கப் பெற்றவர் போல மெய்க்கூச்செறிந்து மகிழ்வுகொண்டு 'எம்பெருமான் திருவருள் இதுவாயின் யானுய்ந்தேன்' என்றுகூறி திருக்கச்சிநம்பி திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் "பெரியோரே, பெருமாள திருவுள்ள மறிந்தோமன்றே; ஆதலால், அடியேன் பெரிய நம்பியின் சீர்பாதங்களில் ஆசிரயிக்க இப்பொழுதே செல்லவேண்டும்; தேவரீர் விடைதந் தருளுவீராக" என்று வேண்டிக்கொண்டனர். கச்சிநம்பியும் "இலக்குமணரே, நீர பெருமாள் திருவுள்ளத்தின் வண்ணமே செய்தருள்க; இப்பொழுதே பெரிய நம்பியைக்கருதி நீர் புறப்படலாம்" என்று விடை தந்தனா. அவரிடம் விடைகொண்டு இலக்குமணர் பெரிய நம்பியை அடையவேண்டும் எனக் கருதி ஸ்ரீரங்கத்தை நோக்கிப் புறப்பட்டனர்.

இஃதிவ்வாறிருக்க, ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ஆளவந்தாரடியார்களாகிய ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் ஒன்று திரண்டு

பெரிய நம்பியிடம் சென்று "பெரியோரே, தேவரீர், ஸ்ரீ ஆளவந்தாரடியவர்களுள் சிறந்தவரன்றோ? ஆளவந்தார் இவ்வுலகை விட்டுப் பெருவிசும்படைந்த பின்னர், ஸ்ரீவைஷ்ணவமதத்தைத் தலைமை வகித்து நடத்துபவர்கள் இல்லாமையால், அம்மதம, தன்னை நடத்திச் செல்லும் மீகாமனில்லாத மரக்கலம் கடலில் எவ்வாறு தத்தளிக்குமோ அது போலத் தத்தளிக்கின்றதே; இதற்கு என் செயலாம்? தேவரீரே தலைமை பெற்று நடத்துவதாயின் எங்களனைவருக்கும் உடன்பாடே, தேவரீர் எவ்வாறுகட்டளையிட்டருளுவீரோ அவ்வாறே அடியோங்களனைவரும் நடந்துகொள்ளுகிறோம்" என்று தங்களுடைய குறையினையெடுத்து மொழிவாராயினர்.

பெரிய நம்பி, அவர்கள கூறியவற்றைக்கேட்டு "ஸ்ரீவைஷ்ணவ சமயத்தில் பற்றுதலுடையவர்களே, நம்முடைய ஆசாரியரான ஸ்ரீ ஆளவந்தாருடைய எண்ணம் எதுவோ அதனையே நிறைவேற்றிவைக்க நாமனைவரும் கடமைப்பட்டுள்ளோம். அவருடைய திருவுள்ளமோ 'வேதங்களையும் மற்றுமுள்ள கலைகளையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்த இலக்குமணரே தமக்குப்பின் ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தைச் செவ்வைபெறநடத்தி இவ்வுலகத்தில் நிலை நாட்டத் தகுதியுடையார்' என்பதே, என நாமனைவரும் நன்கு அறிந்துளோமன்றோ? இது, ஆளவந்தாருடைய விரல்கள் நிமிர்ந்தமையினாலும் விளங்குமன்றோ? ஆதலின், நமமனைவருக்குந் தலைவராயிருந்து தர்சனத்தை நடத்திச்செல்வதற்கு அவ்விலக்குமணரே தக்கவர். அவரையே இத்துறையில் இறங்கும்படி செய்ய வேண்டும்" என்று கூறினார். உடனே அவர்களனைவரும் பெரிய நம்பியை நோக்கி, "அண்ணலே, இலக்குமணரை ஆளவந்தார் கட்டளையின் வண்ணம், நாங்கள் தலைவ

ராயேற்றுக்கொள்வதற்குத் தடையில்லை. அவரைத்தலைவரா கச் செய்தருள வேண்டியது தேவரீருடைய கடமையாகும் தேவரீரே அக்காரியத்தை நிறைவேற்றி வைத்தருளவேண் டும்" என்று வணங்கிக்கேட்டுக்கொண்டார்கள், அவர் 'அங்ங னமே யாகட்டும்' என்று அவர்களிடம் கூறி அவர்களை யனுப்பிவிட்டு மறுநாளே ஸ்ரீரங்க நாதனுடைய அனுமதி பெற்றுத் தம்மனைவியோடு காஞ்சிநகரத்தை நோக்கிப் புறப் பட்டார்.

அவ்வாறு புறப்பட்டுச் சென்றவர் காஞ்சீபுரத்திற் கரு கிலுள்ள மதுராந்தகம் என்ற ஊரையடைந்து அங்கே இளைப் பாறி விடாய் தீர்த்துக்கொள்வதற்காக அவ்விடத்துள்ள ஏரிகாத்தபெருமாள் கோயிலினுள்ளே புகுந்து வீற்றிருந்தார். பெரிய நம்பியை மனத்திற்கருதிப் புறப்பட்ட இலக்குமணர் மதுராந்தகத்துள்ள அக்கோயிலினுள்ளேயே பிரவேசித் தனர். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது என்றவாறு தம் எதிரே தாம் தேடிவந்த பெரிய நம்பியைக் கண்டவுடன் இலக்குமணர் வியப்பெய்தி அவருடைய சீர்பாதங்களில் வீழ்ந்து வணங்கி ஆனந்தக்கண்ணீர் பெருக்கிக்கொண்டு நிற்கப் பெரியநம்பியும் தம்மெதிரே தம்மை வணங்கி நிற்கும் இலக்குமணரைக்கண்டு மகிழ்ச்சிகொண்டவராய்த் தாம் கருதி வந்தபலன் உடனே கைக்குக் கிட்டிவிட்டது என்று தம்முள் கருதி அவரை வாரியெடுத்துத் தம் மார்போடணைத்து 'ஸ்ரீ ஆளவந்தாருக்கும் கிடைத்தற்கரிய பெரும்பேறு அடி யேனுக்குக் கிடைத்ததே. இவருடைய திருமேனியைப் பரி சிக்கும்படியான பாக்கியம் அடியேனுக்கல்லவோ அமைந் திருந்தது' என்று தம்முளே கருதி மகிழா நிற்ப, இலக்கு மணர் அவரெதிரே கைகூப்பி வணங்கிக்கொண்டு நின்று, "சுவாமி, தேவரீர் அடியேனுக்கு ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்

தையும் அச்சமயத்துக் கடவுளாகிய திருமாலின் இயல்புகளை யும் அவரை வழிபடும் நெறியையும் அதற்குரிய மந்திரத்தை யும் உபதேசித்து அடியேனை ஆட்கொண்டருளவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டனர். பெரிய நம்பி, அவ வாறுகேட்ட இலக்குமணரை நோக்கி" "இலக்குமணரே, ஸ்ரீ ஆளவந்தார், அடியேனுடைய தலையிலே ஒரு பெரும் பாரத்தை வைத்துவிட்டுச் சென்றனா. அச்சுமையை உம்மி டத்திலே இறக்கிவிடும்படி அவருடைய கட்டளையாகும். அதனைத் தாங்குவதற்குரியார் நீரே என்பதும் அவருடைய திருவுள்ளமாகும். அச்சுமையை இறக்குவதற்கே நான் உம் மைத் தேடிக்கொண்டு புறப்பட்டு வந்திருக்கிறேன். ஆதலின் உமக்கு உபதேசத்தைச் செய்துவைப்பேன். அதனைக் காஞ் சிபுரத்தில் அத்திக்கு முன்னம அருளேயளித்த அண்ணலார் திருமுன்னா உபதேசிக்கலாம் என்று நினைக்கின்றேன். நாம் இருவரும் அங்கே போவோம வாரும்" என்று கூறினர்

அவர் கூறியவற்றைக் கேட்ட இலக்குமணர், "ஆசாரி யரே, காஞ்சிபுரம் சென்று அங்கே உபதேசிப்பேன் என நீர் கூறுவது ஒக்கும். இவ்வுடம்போ நிலையற்றது. எப் பொழுது அழியும் என ஒருவரும் அறியார். "மின்னின் நிலையில மன்னுயி ராக்கைகள்" என்ற பெரியோருடைய அருளிச செயல், தேவரீர் அறியாத தன்றே? அடியேன் ஆளவந்தார் கழல் சூடும் கருத்தினனாய்த் தேவரீருடன் புறப்பட்டவன்று அந்நினைவு யாதாய் முடிந்தது? ஆதலின், இத்தகைய காரியங்களை எப்பொழுது நினைத்தோமோ அப் பொழுதே அவற்றிற்கு அனுகூலங்களும் வாய்த்திருக்குமே யானால் உடனே நிறைவேற்றிக்கொள்ள வேண்டும். ஆத லின் தேவரீர் இந்தப் பெருமாளுடைய சந்நிதியிலேயே அடியேனுக்கு உபதேசித்தருள வேண்டும்" என்று வேண்

டிக்கொண்டனர். பெரிய நம்பியும் அவர் கூறியதை ஒப்புக்கொண்டு அப்பொழுதே அவ்விடத்திலேயே அவ்விலக்குமணருக்கு உபதேசித்தருளினர். அவர் உபதேசிக்கும் பொழுது, தம்முடைய ஆசாரியராகிய ஸ்ரீ ஆளவந்தாருடைய திருவடி நிலைகளைத் தம் மனத்துள்ளே நீங்காமல் நிலைபெறுத்தித் திருமாலடியான் என்பதற் கடையாளமாகச் சங்கு சக்கரங்களின் வடிவங்களை முறையே இடத்தோளிலும் வலத்தோளிலும் பொறித்து அவரைத் தம் வலப்புறத்தில் உட்காரவைத்துத் தம்முடைய ஆசாரிய பரம்பரையை அன்போடு தியானித்துத் தம் வலக் கையை அவருடைய திருமுடிமேல் வைத்துத் தம அருட்கண்ணால் அமர்ந்து நோக்கி அவருக்கு த்வயம் என்னும் மந்திரரத்தினத்தைக் குருபரம்பரையோடு கூட அவரது வலத் திருச்செவியில் உபதேசித்தருளினர்.

அப்பால், பெரிய நம்பி இலக்குமணரை யழைத்துக் கொண்டு கச்சிமாநகரெய்தித் திருக்கச்சி நம்பியும் உடன் வரப் பெருமாள் கோயிலினுள்ளே நுழைந்து "இலக்குமணரே, இவ்வுலகெலா முய்யும்படி இதோ நம்மெதிரிலெழுந்தருளியிருக்கும கரிகிரிவரதரே நான் உமக்கு உபதேசித்த த்வயம் என்னும் மந்திரத்தின் பொருளாவார். இவரையே எப்பொழுதும் நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நீங்காமல் நிலைபெறுத்தி அம்மந்திரத்தையும் ஓதிவருவீராக" என்று கூறிப் பெருமாளை இலக்குமணருக்குக் காட்டிக் கொடுத்தார். அப்பெரியோர் காட்டிக்கொடுத்தவாறே இலக்குமணரும் கண்டுகொண்டு 'கண்டேன் நானே' என்றவாறு மிகவும் பெருமித முடையராய் எழுந்தருளியிருந்தார்.

---

## இலக்குமணர் துறவு.

பின்னர் இலக்குமணர், தம்முடைய ஆசிரியராகிய பெரிய நம்பியைத் தம்முடன், தம்முடைய திருமனைக்கு அழைத்துச் சென்று அங்கே அவருக்கு வேண்டிய இடமமைத்துக் கொடுத்து அவ்விடத்தில் அவர் பத்தினியோடும் வாழ்ந்து வருமாறு செய்தார். பெரிய நம்பியும் தமக் கேற்பட்ட இடத்தில் தம் இல்லாளோடும் தங்கியிருந்து இல்லறத்தை இயல்புற இனிதே நடத்தியும் இலக்குமணருக்கு ஸ்ரீ வைஷ்ணவ சமயத்திற்குரிய சாஸ்திரங்களையும் ஆழ்வார்கள் அருளிச் செயல்களையும் அன்போடு அருளிச் செய்தும் தினந்தோறும் காலை மாலை இரு வேளைகளிலும் கோயிலிற் சென்று பெருமாளுடைய நல்ல தாள்களைத் தொழுதும் அமர்ந்திருந்தனர். இலக்குமணரோ குளிர் காய்பவன் ஒருவன், தீயைவிட்டு நீங்காமலும் மிக நெருங்காமலும் எவ்வாறு இருப்பானோ, அவ்வாறு இருந்து, பெரிய நம்பியின் நிழல்போல நின்று ஆசாரிய பக்தி நிறைந்த நெஞ்சுடையவராய்த் தம்முடைய குருவுக்கு எவ்விதமான பணிவிடைகள் செய்தால் மனம் உவப்பாரோ அவ்விதமான குற்றேவல்களைக் குறிப்பாலறிந்து உள்ளம் உரை செயல் ஆகிய மூக்கரணங்களாலும் செய்து, தாகவிடாய் கொண்டவன் நீர் பருகுவதில் அவாக்கொண்டிருப்பதுபோல அப்பெரியாரிடமிருந்து கற்றுக்கொள்ளும் அவாவுடையவராய்க் கற்று வந்தனர்.

இவ்வாறு சில மாதங்கள் சென்றவாறே, ஒரு நாள், பெரிய நம்பியின் மனைவியாரும் இலக்குமணருடைய மனைவியாரும் ஒரு கிணற்றில் நீர் எடுக்கும் பொழுது இருவர் குடங்களும் ஒன்றோடொன்று மோதிக்கொள்ள இலக்குமணரின் மனைவியார் சினங்கொண்டு பெரிய நம்பியின் மனைவியாரைப் பலவாறு வைது மனக்கொதிப்படையுமாறு

செய்தனர். மனம் நொந்த பெரிய நம்பியின் மனைவியார், தம் கணவரிடம் நடந்தவற்றைத் தெரியப்படுத்த, அவர், இனி இங்கிருந்தால், இதன் வழியாக நமக்கும் இலக்குமணருக்கும் மனத்தாங்கல் ஏற்பட்டாலும் ஏற்படலாம என்று கருதி அவ்விடத்தினின்றும் புறப்பட்டு அரங்கமா நகரை அடைந்தனர். இவ்விஷயம் நடந்தபொழுது இலக்குமணர் அங்கே இல்லாமையால் அது அவருக்குத் தெரியாது. இவ்வாறு பெரிய நம்பி புறப்பட்டுச் சென்றதற்குத் தம் இல்லாளே காரணம் என்பது பின்னர் இலக்குமணருக்குத் தெரியவர, அவர், தம் ஆசாரியனிடத்தில் பிழைபட நடந்த தம் மனைவியை விட்டுவிட வேண்டும் என்று நினைத்தனர். அன்றியும், இதற்கு முன், திருக்கச்சி நம்பி உண்ட சேடம் தமக்குக் கிடைக்க வேண்டும் என்று இலக்குமணர் கருதி அவரைத் தம்முடைய இல்லத்திற்கு ஒரு நாள் உணவருந்த வரவேண்டுமெ என அழைத்திருந்தனர். ஏதோ அவசர நிமித்தமாகத் திருக்கச்சி நம்பி இலக்குமணர் இல்லாத வேளையில் அவரில்லம் சென்று, அவர் மனைவியாரிடம் தமக்கு உணவளிக்குமாறு வேண்ட, அவரும் நம்பிக்கு உணவு பரிமாறி அவருண்ட கலம் முதலியவற்றை எடுத்தெறிந்துவிட்டு, அவ்விடத்தில் சாணத்தைத் தெளித்துச் சுத்தி செய்துவிட்டு, அவருண்ட சேட அன்னத்தையும் அப்பால் ஒதுக்கி வைத்து விட்டு, வேறு உணவு ஆக்கி வைத்திருந்தனர். வெளியே சென்றிருந்த இலக்குமணர், இல்லத்தையடைந்த பிறகு திருக்கச்சி நம்பி வந்து உணவருந்தியதையும் தம் மனைவியார் செய்த செயல்களையும் அவரிடமே கேட்டுத் தெரிந்து கொண்டு தம் எண்ணம் நிறைவேறாது செய்ததற்காகத் தம் மனைவியிடம் கோபங்கொண்டார். இதன்றியும், பின்னர் ஒரு நாள் கோயிலில் பெருமாளுக்குத் தொண்டு செய்து கொண்டிருக்கும் பொழுது, அங்கே வந்த

தேசாந்தரி யொருவர், தமக்கு மிகப் பசியா யிருக்கிறது என்று இலக்குமணாரிடம் கூற, அவர் கேட்டுத் தம் மில்லமிருக்குமிடத்தைத் தெரிவித்து அங்கே போய்த் தம மனைவியிடம உணவு கேட்டு வாங்கி யுண்டு பசிதீர்த்துக் கொள்ளுமாறு தம் மனைக்கு அனுப்ப, அவரும் சென்று இலக்குமணார் மனைவியாரிடம் அவருடைய கட்டளையைக் கூற, அவர், வந்தவருக்குச் சிறிதும் முகம் கொடுத்துப் பேசாமல கடுகடுத்துக்கூறி யனுப்பிவிட்டனர். அவர் சென்று இலக்குமணாரிடம நடந்தவற்றை அறிவித்தனா. அதனைக் கேட்ட இலக்குமணார், தம் மனைவிமேல் உண்டாகிய சிற்றத்தை ஒருவாறு தம் மனத்துள்ளே அடக்கிக்கொண்டு, பசியுடன் கூடிய தேசாந்தரிக்குக் கோயிலில் பிரசாதம் வாங்கிக் கொடுத்து அவர் பசியை யாற்றி அவரை அனுப்பிவிட்டுத் தம் மனையை யடைந்த வளவில், அங்கே தம் மனைவி, தன் பிறந்தகத்திலிருந்து செய்திகொண்டு வந்தவர்களுக்கு மிகவும அன்புடன் உணவளித்துக் கொண்டிருப்பதைக் கண்டு, மிக்க மனவருத்தம் கொண்டு, பாம்போடு ஒரு கூறையிலே பயின்றாற்போல, இவ்வேறுமாறுன மனைவியுடன்கூடி வாழ்வதினும் கூறுமற் சந்நியாசம் கொள்வதே மேல் என்று நினைத்துத் தம்மனைவியை நோக்கிப் "பெண்ணே, இவர்கள் கொண்டுவந்துள்ள செய்தியால், நீ உன் பிறநதகத்துககுப் போய் வருவது இன்றியமையாதது என்று தோன்றுகின்றது. ஆதலின், நீ, இவர்களுடன் முதலிற செல்லுக. நானும் இன்னும் இரண்டொரு தினத்தில் வந்து சேருகிறேன்" என்று ஒருவாறு போக்குக கூறித் தம் மனைவியை அவளுடைய பிறந்தகத்துக்குப் போகச்செய்து, தாம், மற்றை நாட் காலையில், தம் முள்ளழுக்கற்றவாறு போல, வெளியழுக்கையும் அனந்த சரசில் நீராடிப் போக்கிக் கொண்டு, பெருமானையே, தமக்கு நான்காவது ஆச்சிரமம்

கொடுக்கும் ஆசாரியனைக அடைய வேண்டும் என்று கரு தித் "தொழுதெழு தொண்டர்கள் தமக்குப், பிணியொழித் தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன்" சந்நிதியில் சென்று, "அப்பனே, அடிநாட்களில் அடியேன் உனக்கு முன்னடியார் தமக்கும் தொண்டு செய்யாமல், "தாயே தந்தையென்றும் தாரமே கிளை மக்களென்றும், நோயேபட் டொழிந்தேன்" ஆதலால் அடியேன் இதற்கு முன் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுத்தருளி, அண்ணலே, உன் னடிசேர் வண்ணம் அருளுவாய். உனக்கும் உன்னடியார் களுக்கும் தொண்டு செய்வதறகு இடையூறாக இருக்கும் இம்மனை வாழ்க்கையை வேண்டேன். அதனைப் போக்கி உன்னை வழிபடுதற்குரிய நான்காவது ஆச்சிரமத்தைத் தந்து அடியேனை யாட்கொண்டருள வேண்டும். ஆதலால், அதற்குரிய காவி யுடையும் முக்கோலும் கமண்டலமும் அடியேனுக்குக் கொடுத்தருளுவாய்" என்று வேண்டிக் கொண்டார். பேரருளாளனும் தன்னை வணங்கிக் கேட்டுக் கொண்ட இலக்குமணருக்கு முக்கோல் காவியுடை முத லானவற்றைக் கொடுத்து, அவ்வாறு அவர் மேலான நிலையை யடைந்ததற் கேற்ப, அவருக்கு இராமாநுஜ முனிவர் என்ற பெயரையும் கொடுத்தருளினார். அதுமுதல் இலக்கு மணர் இராமாநுஜர் என்று அழைக்கப்பெறுவாராயினர்.

## இராமாநுஜருக்கு முதலில் சிஷ்யரானவர்கள்.

இவ்வாறு, இராமாநுஜர், நான்காவது ஆச்சிரமம் பெற்றுப் பேரருளாளன் நியமித்தபடியே திருக்கச்சி நம்பியால் ஒருமடத்தில் வைக்கப் பெற்று அங்கே அமர்ந்துறையும் நாளையில், ஸ்ரீ ஆளவந்தார் திருவுள்ளக் கருத்தை நிறைவேற்றி வைப்பதற்குத் தக்கதுணை வேண்டுமே; அதற்கு யார் தகுந்தவர் எனக் கருதுகையில், தம்முடைய சிறிய தாயார் புத்திரராய்த் தம்மோடு யாதவப் பிரகாசனிடம் பயின்றவரான கோவிந்தரே தக்கவர் என்று நினைந்தார். நினைந்தவர், அக்கோவிந்தர் சைவ சமயத்தில் புகுந்து காளஹஸ்தி என்னும் சிவ தலத்தில் சிவனைப் பூசை செய்து வருகின்றார் என்று அறிந்து, அவரைத் திருத்தி வைஷ்ணவ சமயத்தை மேற்கொள்ளும்படி செய்து தமக்குத் துணையாக்கித் தருமாறு தம்முடைய அம்மானான திருமலை நம்பியிடம் சிலரைப் போக்கித் தெரிவிக்க, அவர், அங்ஙனமே செய்து தருவதாகச் சொல்லியனுப்பி அதற்குத் தகுந்த ஏற்பாடுகளும் செய்துகொண்டிருந்தார்.

இதற்கிடையில், இராமாநுஜருக்கு உடன் பிறந்தவளுடைய குமாரனான கந்தாடை முதலியாண்டானும் திருமறுமார்பன் என்ற இயற் பெயரையுடைய கூரத்தாழ்வானும் இராமாநுஜரை யடைந்து அவரடிகளில் வீழ்ந்து வணங்கிச் "சுவாமி, அடியோங்களுக்குப் பஞ்ச சம்ஸ்காரங்களைச் செய்து மந்திரோபதேசம் பண்ணி உய்வித்தருளவேண்டும்" என்று கேட்டுக்கொள்ள, அவர், அவர்களுக்கு அவ்வாறே செய்து வாழ்வித்தருளினார். அது முதல் அவ்விருவரும் அவரடி பிரியாதவர்களாய்த் தொண்டு பூண்டு அவருக்குக் குற்றேவல்கள் செய்து கொண்டிருந்தனர்.

## யாதவப்பிரகாசன் இராமாநுஜருக்குச் சிஷ்யன் ஆயினமை.

அப்பொழுது, யாதவப்பிரகாசனுடைய தாயார், வேத மார்க்கத்தைப் பிரதிஷ்டை செய்வதற்குக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் இராமாநுஜரைக் காணுந்தோறும் "நம் முடைய புத்திரனும் இவரைப் போலவே சிகாயக்ஞோபவீத திரிதண்ட கமண்டல காஷாயம் முதலானவற்றைக் கைக் கொண்டு வேதத்திற் கூறிய பரம் பொருளான திருமாலை வழிபட்டு உய்யலாமே" என நினைப்பதுண்டு. இவ்வாறாக, அவ்வம்மையார் ஒருநாள் தம் புதல்வரிடம "நீ இராமாநு ஜனையடைந்து, காஷாயம் திரிதண்டம் முதலியன கொண்டு மந்திரோபதேசம் பெற்றுக் கடைத்தேறக்கூடாதோ!" என்று கேட்க, அது, யாதவப்பிரகாசனுக்கும் தகுதியாகத் தோன்றிற்று. ஆயினும், தான் இதுவரையினும் சிகாயக் ஞோபவீத திரிதண்டங்கள் இல்லாமலிருந்த குற்றத்திற்குப் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டுமே; அப்பிராயச்சித் தமும் பூமியை வலம் வருதலாயிற்றே; அதனைச்செய்து தன் னைத் தூய்மைப்படுத்திக் கொண்டல்லவா இராமாநுஜ முனி வரைப் பின்பற்றவேண்டும்; அதற்குத் தான் என் செயலாம் எனக்கருதிக் கருதி அவன் ஒருநாளிரவு உறங்குகையில், கச்சி யெம்பெருமான் அவனது கனவில் தோன்றி, "யாத வனே! நீ செய்து கொண்ட குற்றத்திற்குக் கழுவாயாகப் பூமியை வலம்வர வேண்டும் என்றல்லவா நீ நினைத்துக் கொண்டிருக்கின்றாய்; அது, வீண் நினைவே; நீ அதற்காக ஒரு முறை நம் இராமாநுஜனை வலம் வருவாயேயானால், நீ செய்த குற்றமெல்லாம் தீயின் முற்பட்ட பஞ்சுபோல நாசமாய்க் கெட்டுவிடும்; ஆதலின், நீ அவ்வாறு செய்து இராமாநுஜனை யடைந்து கடைத் தேறுவாய்" என்று அருள் செய்து மறைந்தனர்.

மறுநாள விடியற்காலையில் யாதவப்பிரகாசன் எழுந்து நித்தியக் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டு தனக்குண்டாகிய கனவின் தன்மையைக் கருதுவானாயினன். கனவிற் பெருமாள கட்டளையிட்டவாறு செய்வது தனக்குடன்பாடாயினும், தான் பகைமை பாராட்டிய இராமாநுஜரைக் குருவாகக் கொள்வதில் சிறிது வெட்கம் கொண்டவனாய்த் திருக்கச்சி நம்பியிடம் சென்று "நம்பியே, என் மனத்தின் கண்ணோர் நினைவு நிகழா நிற்கின்றது. அதனைப் பெருமாளிடம தெரிவித்து அவர் கூறுவதை யெனக்கு அறிவிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். நம்பியும், அவன் பெரிய வித்வான் என்பதனால் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டு, அன்றிரவில் அவர் திருவால வட்டத் தொண்டு செய்து முடித்தவாறே எம்பெருமானிடம யாதவன் நினைவைப் பற்றி வினவப் பெருமானும் "நம்பியே! நேற்றிரவு நாம் அவனுக்குக் கனவில் ஒன்று கூறினோம். அதனிடத்து அவன் நம்பிக்கை கொள்ளாமல், உமமால் நம்மிடம் வினவுகின்றான். நாம் அவனுக்குக் கனவில் கூறியவாறே, நம்மிராமாநுஜ முனிவரை வலம் வந்து வணங்கிவழிப்பட்டு வாழ்வானாக" என்று கூறியருளினார். நம்பியும் விடிவோரையில், அதனை அவனுக்கறிவிக்க, அவனும் கேட்டு மிக்க மகிழ்ச்சி கொண்டவனாய்த் தீப்பற்றிய வீட்டில் அகப்பட்டவன் அதனினின்றும் வெளியில் எவ்வளவு விரைவாக ஓடிவருவானோ அவ்வளவு விரைவாக ஓடிச்சென்று, இராமாநுஜர் திருவடிகளில், அடியற்ற பனைபோல வீழ்ந்து வணங்கிச் "சுவாமி, அடியேன் முன்னாட்களில் தேவரீரிடத்துச் செய்துள்ள பிழைகளை யெல்லாம் பொறுத்துக் காப்பாற்ற வேண்டும். எனக்கு வேறு கதியில்லை. நீரே கதி. எனக்கு நான்காவது ஆச்சிரமத்தை நல்கி ஆள் என்னைக் கொண்டருளவேண்டும்" என்று கூறி நிற்க, அப்பொழுது அருகே நின்ற கூரத்தாழ்

வானும் முதலியாண்டானும் இராமாநுஜரை வணங்கி "ஆசாரியரே, தேவரீர் அடியேங்களைத் தொண்டர்களாக்கிக் கொண்டதுபோல, இவரையும் ஆட்கொண்டருள வேண் டும்'' என்று கேட்டுக்கொள்ள, இராமாநுஜர், யாதவனிடத் தில் மிகவும் இரக்கம் கொண்டவராய், அவ் யாதவனுக்குச் சிகை யக்ஞோபவீதம் திரிதண்டம் முதலானவற்றைத் தரித்துக் கொள்ளும்படி செய்து, பஞ்ச சம்ஸ்காரங்களைப் பாங்குடன் செய்து மந்திர ரத்தினத்தை மாண்புற உபதேசம் செய்தருளினார்.

அந்த யாதவப்பிரகாசனுக்கு இராமாநுஜர், ஸ்ரீ கோ விந்த ஜீயர் என்கிற பெயரைச் சந்நியாசம் பெற்று மந்தி ரோபதேச மானதற் கடையாளமாகக் கொடுத்தருளினார். இவ்வாறு, தம்மிடத்து மிகவும் அருள் செய்து உபதேசித்த இராமாநுஜரைக் கோவிந்த ஜீயர், "எங்கள் கதியே, இராமா நுஜமுனியே, சங்கை கெடுத்தாண்ட தவராஜா'' என்று பல வாறு துதித்து அவரடிக்கீழ்க் குற்றேவல் செய்துகொண்டு தமது ஆசாரியருடைய கட்டளைப்படி யதிதர்ம சமுச்சயம் என்ற நூலையும் இயற்றியருளி இனிதே யமர்ந்திருந்தார்.

## இராமாநுஜர் ஸ்ரீரங்கம் சென்று சீர்திருத்தத் தொடங்கியது.

இஃதிவ்வாறாக, ஸ்ரீரங்கத்தில், ஆளவந்தா ரடியாரெனு வரும் பெரிய நம்பியிடம் சென்று "சுவாமி, தேவரீர், ஆள வந்தார் கட்டளையின் வண்ணம் ஸ்ரீ லக்ஷ்மணாரியரை, நம்மு டைய சமயத்தில் புகும் வண்ணம் பஞ்ச சம்ஸ்காரம் முதலி யவற்றைச் செய்து, மந்திரோபதேசம் செய்தருளினீர்.

அவரும் இப்பொழுது பேரருளாளன் அருளாலே சந்நியாசம் பெற்று இராமாநுஜ முனிவர் என்ற அழகிய பெயரோடு கூரத்தாழ்வான் முதலியாண்டான் முதலான சிஷ்யர்கள் சூழ்வரக் கச்சிமா நகரில் எழுந்தருளி யிருக்கின்றார். அவரை இங்கேயழைத்து வந்து, நமது ஹரிசமயத்தையும் அரங்க னமர்ந்துறையும் கோயிலில் தொண்டுகளையும் செவ்வனே நடக்கும் வண்ணம சீர்திருத்தி யருளும்படி, செய்தருளுவீராக'' என்று வேண்டிக் கொண்டார்கள். பெரிய நம்பியும் அவர்கள் கூறியன தகும் என்று மனத்துட் கருதி "இந்தக்காரியத்தை நிறைவேற்றி வைப்பதற்குரியவர் திருவரங்கப் பெருமாளரையரே யாகும். நாம் அவரிடம் செல்லுவோம் வாருங்கள்'' என்று அவர்களெல்லோரையு மழைத்துக் கொண்டு அரையரை யெய்தி, அவரிடத்தில் இந்தச் செய்தியைக் கூறி அவரோடும் கோயிலினுட்சென்று ஸ்ரீரங்க நாதனிடம் இதனை விண்ணப்பம செய்து அவரனுமதி பெற்றுத் திருவரங்கப் பெருமாளரையரைக் கச்சிமா நகருக் கனுப்பினர்.

திருவரங்கப் பெருமாளரையர் கச்சிநகா சென்றெய்தி, அங்கே வரந்தரும் பெருமாளரையருடைய மனையில் அன்று தங்கி, மறுநாள், வரந்தருமரையருடன் வைய மாளிகையாகிய பேரருளாளன் கோயிலிற் சென்று, திருக்கச்சி நம்பி இராமாநுஜர் ஆகிய இவர்கள், வழுவிலா வடிமைகளை வரதராஜனுக்குச் செய்து கொண்டு நிற்கத் தம்முடைய தேவகானத்தால், வரதராஜன் விஷயமான பிரபந்தப் பாடல்களை இயலு மிசையு மியையப் பாடி அவரை மனமகிழு மாறு செய்தருளினர். அரையருடைய கானத்தால் மனமகிழ்ந்த அருளாளர், தீர்த்தம் சடகோபன் முதலான அவருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகளைத் தமது அர்ச்சகரால்

செய்வித்து "அரையரே, நீர் நம்மிடம் உமக்கு வேண்டும் வரங்களைக் கேட்டுப் பெற்றுக் கொள்க" என்று கட்டளையிட, அரையரும் அங்கே தொண்டு செய்து கொண்டு நிற்கிற இராமாநுஜரைக் காட்டி, "எந்தாய், இதோ நிற்கும் இராமாநுஜரை ஸ்ரீ வைஷ்ணவ சமயம் நிலைபெறவும், அரங்கன் கோயில் காரியங்கள் அழகாக நடைபெறவும் அரங்கம் நகருக்கு அடியேனுடன் அனுப்பித்தந்தருள வேண்டுகிறேன். அம்மா, அடியேன் வேண்டுவது ஈதே" என்று கேட்டுக் கொண்டனர். கச்சி அருளாளனும இராமாநுஜரைப் பிரிவதற்கு மனமில்லையாயினும், தாம் கொடுத்த வரத்தைத் தவிர்தல் கூடாது என்னும் உறுதிப்பாட்டால், "அரையரே! நீர் கேட்ட வரம் கொடுத்தற்கரியதே யாயினும் முதலில் நாம் தருவதாகக் கூறிவிட்டமையால், நம்மிராமாநுஜனை உமக்குத் தந்தருளினோம். உம்முடன் அழைத்துக்கொண்டு செல்லுக" என்று கூறி, இராமாநுஜரை நோக்கி "இராமாநுஜ, நாம் இவருக்கு வரம் கொடுத்தமையால் நீ இவருடன் செல்லுக" என்றருளினர்.

உடனே, திருவரங்கப் பெருமாளரையர், மிகவும் அன்போடும ஆசையோடும் இராமாநுஜருடைய கையைப்பற்றிக் கொண்டு "இராமாநுஜரே, வாரும்; ஸ்ரீரங்கம் செல்லுவோம்" என்று அழைக்க, இராமாநுஜரும் தம அருகே நின்று கொண்டிருக்கும் கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் நோக்கி, நாம இப்பொழுதே இப்பெரியாருடன் ஸ்ரீரங்கம் செல்லவேண்டும; நீங்கள் மடத்தில் சென்று நாம் உபயோகப்படுத்தும் பொருள்களை யெடுத்துக்கொண்டு மிகவும் விரைவாக வருக என்று கூற, அவர்களும் அவ்வாறே சென்று அவருககு வேண்டுமவற்றை யெடுத்துக் கொணர, இராமாநுஜர், தம்மைக் கூரத்தாழ்வானும் முதலியாண்டா

னும் தொடர்ந்து வரத் தாம் திருவரங்கப் பெருமாளரைய ரைத் தொடர்ந்து, முன்னம் விசுவாமித்திர முனிவரைத் தொடர்ந்து சென்ற இராமபிரானைப் போலவே, திருவரங்கப் பெருநகரை நோக்கிப் புறப்பட்டனர். இராமாநுஜர் ஸ்ரீரங் கத்துக்கு அணித்தாக வருவதை யறிந்த பெரிய நம்பி முத லான ஸ்ரீரங்க வாசிகள், திருக்கோயிலுட் சென்று, ஸ்ரீரங்க நாதனிடம் இராமாநுஜர் வருகையை விண்ணப்பம் செய்து தீர்த்தம் சடகோபம் பூமாலை பரிவட்டம் முதலான கோயில் மரியாதைகளோடு எதிர் சென்று அவர் வடதிருக்காவேரி யைத் தாண்டித் தென்கரைக்கு வந்தபொழுது திருவரங்கப் பெருமாளரையருடன் அவரை வரவேற்றுக் கோயில் மரி யாதைகளை யெல்லாம் அங்கேயே செய்து திருவீதிகளை வல மாகப்போய் நகரத்துள் அழைத்துச் சென்று திருக்கோயி லினுள்ளே நுழைந்தார்கள்.

இராமாநுஜர் கோயிலில் நுழைந்து கொடிமரம், பலி பீடம், கருடன் நிற்கும் நிலை முதலியவற்றை முறையே வணங்கிக்கொண்டு என்னையாளுடைய நாயகி ஏழுலகுக் தன் கருணையால் காப்பாற்றும் உலகின் தாய். அகல கில்லேன் இறையுமென்று அரிமார்பத்தமர்ந்துறையும் அலர் மேல் மங்கை. அமுதில் வரும் பெண்ணமுது. தன்னடி யார் பிழைபொறுத்துத் தண்டுளப னருளுக்கு இலக்காக் கும் அன்னை ஆம் ஸ்ரீரங்க நாயகியார் திருவடிகளில் வீழ்ந்து வீழ்ந்து வணங்கிக் கண்ணீர் வார உடல் மயிர் சிலிர்க்க உள்ளங்கனிந்து தழு தழுத்த குரலோடு முன்னோர் மொழிந்த சது சுலோகி முதலான துதிகளால் தோத்திரம் செய்து, அத்தேவியார் விடுத்த மரியாதைகளைப்பெற்று, அங்கு நின்றும் புறப்பட்டுப் பிரணவ வடிவமான விமானத் தை வணங்கி வலம் வந்து அழகிய மணவாளன் திருமண்ட

பத்து ஏற எழுந்தருளுகையில், நம்பெருமாள் கைத் தலத்தில் எழுந்தருளிவந்து இராமாநுஜரை எதிர்கொண்டு உள்ளே அழைத்துச் சென்றனர்.

ஸ்ரீராமாநுஜர், பெருமாளைக்கண்டவாறே, விழுவது எழுவது தொழுவதாகச் செய்து உள்ளே சென்று 'திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு' அவா திருமேனியழகிலீடுபட்டு, முதலில் அப்பெருமானுடைய திருமுடியைக்கண்டு 'முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ' என்றும், எட்டாம் பிறைச் சந்திரன் போல விளங்குகின்ற திருநெற்றியைக் கண்டு 'நாள் மன்னு வெண்டிங்கள் கொல் நற்சிலைகொல்' என்றும், அப்பெருமானுக்கே சிறப்பாகச் சொல்லப்படுகிற கமலச் செங்கண்ணை நோக்கி 'அரங்கத்து அமலன் முகத்துக் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப பெரிய வாய கண்கள்' என்றும், திருவதரத்தைச் சேவித்துக் 'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ திருப்பவளச செவ்வாய் தான் தித்தித்திருக்குமோ' என்றும், திருமுகமண்டலத்தின் தேசினைத் தரிசித்து, யசோதை தன் மகனுக்குக் கூறியவாறு 'சுற்று மொளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்தெங்கும் எத்தனை செய்யினும் என்மகன் முகம் நேரொவ்வாய்' அம்புலீ, என்றும், எம்பெருமானுடைய திருமேனி யொளியாலே, நீல நிறங்கொண்ட பாஞ்ச சன்னியம் என்னும் சங்கே போலத் திகழ்கின்ற திருக்கழுத்தைப் பார்த்து 'அரங்க நகர்மேய அப்பன் அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால் வரை முற்றும் உண்ட கண்டம்கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே'' என்றும், திருத்தோள்களைப் பார்த்து 'கற்பகக்காவன நற்பல தோள்

கள்' என்றும், ஸ்ரீமஹாலக்ஷ்மி தனது குடியிருப்பாகக் கொண்டு, இறையும் அகலாது இருந்துறையும் திருமார் பினைக் கண்டு 'அரங்கத்தம்மான் திரு ஆரமார்பதன்றோ அடியேனை யாட்கொண்டதே' என்றும், திருவயிற்றினைச் சேவித்துக் 'காரார்திண் கடலேழும் மலையேழிவ் வுலகேழு முண்டு ஆராது' என்றிருந்த திருவயிறு என்றும், திருவுந் தியினைக்கண்டு, 'அரங்கத்தர வினணையான் அந்திபோல் நிறத்து ஆடையும் அதன் மேலயனைப் படைத்ததோருந்தி' என்றும், அதற்குக் கீழே இரணியன் மார்பகம் கீள அவனை எடுத்துக் கிடத்துவதற்கு இடமாக இருந்து பிரகலாத னைக் காத்தருளிய திருத் தொடைகளையும், பின்னர் 'இணைக் காலில் வெள்ளித்தளை நின்றிலங்கும கணைக்கா'லையும் கண்டு சேவித்து முடிவாகச், சிறு குழந்தைகள் தமக்கு ஆதார மாகிய தாய்முலையில் வாய் வைக்குமாறு போலத் தன்னைப் பற்றினவர்கட்கு எல்லாம் தாரகமும் போக்கியமும் ஆகித் தானே பேறும் அப் பேற்றுக்குத்தானே காரணமுமான பூவார்கழல்களைப் பொருந்த நோக்கி அக்கழல்களில் 'முத் தும் மணியும் வயிரமும் நன்பொன்னும் 'தத்திப்பதித்துத் தலைப்பெய்தாப்போ லெங்கும் பத்து விரலும் மணிவண் ணன் பாதங்கள் ஒத்திட்டிருந்தவாறு' கண்டு பிறவிப் பிணிக்கு மருந்தாகிய அந்நற்றாள்களில் வைத்தகண்கள் வாங்காமல் 'புகலொன்றில்லா அடியேன் உன்னடிக் கீழ மர்ந்து புகுந்தேனே' என்று கூறிச் சரணம் புகுந்து எழுந்து நின்றார்.

இவ்வாறு, இராமாநுஜர், அரங்கத்தமர்ந்த பிரானை முடி முதல் அடியளவாகக் கண்டனுபவித்துத் தீர்த்தம் சடகோ பம் பூமாலை திருப்பரிவட்டம் முதலிய சிறப்புக்களைப் பெற்று நிற்கச் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்

இராமாநுஜரை நோக்கி, "இராமாநுஜரே, பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' ஆகிய நம்முடைய லீலா விபூதி நித்யவிபூதி என்ற இரண்டையும் உமக்கும் உம் முடையோர்க்கும் தந்தோம். இன்று முதல் நீரே இவ் விரண்டையும் உடையவர். ஆதலால், நீர் நம்முடைய கோயிற் காரியங்களை யெல்லாம் செவ்வனே ஆராய்ந்து நடத்திச் செல்லுவீராக" என்று தமது சோதிவாய் திறந்து கூறியருளினார். எல்லாச் சிறப்புக்களுடனும் இரண்டு விபூதி களையும் பெற்றுக்கொண்ட இராமாநுஜர், தம் அருகே நிற்கின்ற தமது ஆசாரியரான பெரிய நம்பியை நோக்கிச் "சுவாமியே, அடியேன் உமக்கு ஆட்பட்டமையால், இச் சிறப்புக்களெல்லாம் கிடைக்கப் பெற்றேன். பெரியார்க்காட் பட்டக்கால் பெருதபயன் பெறுமாறு தேவரீர் காட்டியருளி னீர். அடியனேனுக்கு இனி யென்குறையுள்ளது" என்று விண்ணப்பம் செய்தார். அப்பொழுது பெரிய நம்பியும் இராமாநுஜரை இறுகப் பிடித்துத் தம் மார்போடணைத்து "இராமாநுஜரே, நீர் அரங்கத் தரவினணையான் கட்டளை யால் உடையவர் ஆயினீர். இன்று முதல் யாவரும் உம்மை உடையவர் என்ற திருநாமத்தால் சிறப்பிக்கட்டும்" என்று கூறியருள, அப்போது அந்தக் கோஷ்டியிலுள்ளாரனை வரும் பெருத்த குரலால், உடையவரே என்று உரத்துக் கூவி யழைத்தனர். அது முதல் இராமாநுஜருக்கு உடை யவர் என்ற திருப்பெயர் வழங்கலாயிற்று.

அப்பால், இராமாநுஜராகிய உடையவர், திருவரங்கமா நகரில் ஒரு மடத்தைத் தமக்கு இடமாகச் செய்துகொண்டு அங்கே யிருந்து தம்முடைய காரியங்களைச் செய்யத் தொடங்கினார். ஸ்ரீவைஷ்ண சமய சாஸ்திரங்களை யாராய்ந்து செம்மை செய்வதற்குக் கூரத்தாழ்வானைத் துணையாகக்

கொண்டும், திருவரங்கம் பெரிய கோயில் காரியங்களைச் சீர்திருத்தி மேற்பார்ப்பதற்கு முதலியாண்டானை நியமித்தும் இவ்விருவருக்கும் மேலாகத் தாம் இருந்து இவ்விரண்டு காரியங்களையும் சீர்பெற நடத்திவந்தார். கோயிலுக்குரிய விளை நிலம் தோட்டம் நந்தவனம் முதலியவற்றை மேற்பார்க்கத் தொடங்கினவுடன் அவற்றை வைத்துகொண்டு ஏகபோகமாக இதற்கு முன் அனுபவித்து வந்தவர்கள், இராமாநுஜரிடம் முதலில் சிறிது வெறுப்புக் கொண்டனராயினும், பிறகு, அவர்கள் இராமாநுஜருடன் ஒத்துழைத்து அவருடைய காரியத்திற்கு இடையூறு செய்யாமலிருந்தனர். அவர்கள்கொண்ட வெறுப்பின் பயனால் இராமாநுஜர் இரண்டு வருடம் ஸ்ரீரங்கத்தை நீங்கி அணித்தான திருவெள்ளறை என்னும் திவ்விய தேசத்தில் வசித்ததாகச் சொல்லுவார்கள்.

இவ்வாறு, இவர் கோயில் காரியங்களை, உட்புகுந்து சிறிது சிறிதாகச் சீர்திருத்தத் தொடங்கி நடத்திவரும் பொழுது, பெரியகோயில் நம்பி என்பார், மஹாவித்வானாய், அரசனால் விரும்பப்பட்டவராய், ஸ்ரீரங்கம் பெரியகோயிலைத் தமக்கே உரிமையாக உடையராய் ஒருவர் இருந்தார். அவர், இராமாநுஜர் கோயிலைச் சீர்திருத்தத் தொடங்கியதைப் பொறுதவராய்ச் சிறிது மனவருத்தம் கொண்டு 'என்னுடைய கோயிலில் நீர் சீர்திருத்தம செய்யவேண்டாம்' என்று இராமாநுஜரிடம் கூறினர். அதனால் மனவருத்தம் கொண்ட இராமாநுஜர், அரங்கத்தமர்ந்த பிரானிடம் இதனை விண்ணப்பம் செய்து விட்டு, இரவில் துயில் கொண்டருளினார். அப்பொழுது, அரங்கநாதன் அவருடைய கனவில் தோன்றிப் "பெரிய கோயில் நம்பி நம்மை வெகு காலமாய் நம்பினவராகிப் பக்தி செய்து வருகிறார்.

நீர் அவருக்கு இடையூறு செய்யவேண்டாம். வேறு வழி களில் உம்முடைய மனம் போனவாறு திருத்திக் கொள்க" என்று கூறி மறைந்தனர். மறு நாள் விடிந்தவுடன் இராமாநுஜர், கூரத்தாழ்வானிடம் தமக்குப் பெருமாள் கனவில் கூறியவற்றைக் கூறி "இதற்கு என் செய்யலாம்? பெருமாளோ நம்முடைய பகைவனுக்கு அநுகூலராய் நம்மைப் புறக்கணித்து விட்டார். இனி நமக்கு இங்கு என்ன வேலை யுளது? முன் போலவே நாம் காஞ்சீபுரம் செல்வோம்" என்றனர். அதற்கு ஆழ்வான் "சுவாமி, தேவரீர் ஏன் கவலைப்பட வேண்டும்? பெரிய கோயில் நம்பியிடம் பெருமாளுக்கு விருப்பம் இருக்குமேயானால் அவரைத் திருத்தித் தேவரீருடைய திருவடிகளைச் சேர்ந்துய்யும்படி செய்யா தொழியார். ஆதலின், தேவரீர் இங்கே, இனிதே வீற்றிருந்து கோயில் பணிகளை யாராய்ந்தருளலாம்". என்று கூறி இராமாநுஜருடைய மனவருத்தத்தை ஒருவாறு ஆற்றினர். இராமாநுஜர், "ஆழ்வானே, நீ இங்ஙனம் கூறுவதாயின், அந்நம்பியை ஒருவாறு திருத்தி நம்மிடம் கொண்டு வந்து சேர்ப்பாய்" என்று கூ,

ஆழ்வானும் அவர் கூறியவாறே, பெரிய கோயில் நம்பியிடம் தினந்தோறும் சென்று விசிஷ்டாத்வைதம் என்னும் மதத்தின் மாண்பையும், இராமாநுஜரின் பெருமையையும் பெருக்கப் பேசி, அவர் மனத்தையும் செயலையும் நன்றாகத் திருத்திப் பணிகொண்டு இராமாநுஜரிடம் வந்து சேரும் வண்ணம் வணக்கினர். அக்காலையில், அந் நம்பியுடைய தாயார் காலகதியாய்விட, அவளுக்குச் செய்ய வேண்டிய உத்தரக் கிரியைகளை யெல்லாம் செய்து பதினோராவது தினத்தின் பகலில் செய்ய வேண்டிய 'ஏகாஹம்' என்னும் சிராத்த காரியத்தில் கூரத்தாழ்வானை உண

வருந்த வருமாறு அந்நம்பி வேண்டிக் கொண்டார். கூரத்தாழ்வானும் அதற்கு இசைந்து அவ்வாறே அன்று உண வருந்தி எழுந்திருக்கும் வேளையில் பெரிய கோயில் நம்பியை நோக்கி, "நீர், உமக்குக் கோயிலிலுள்ள உரிமைகளை யெல்லாம் எனக்குத் தானம் செய்து கொடுத்தால்தான், நான் திருப்தி (மனநிறைவு) எனச் சொல்லுவேன்" என்று கூற, நம்பியும் இவர் திருப்தி (மனநிறைவு) என்று சொல்லாது போனால் இந்தக் காரியம் நிறைவேறாது என்பதனாலும கூரத்தாழ்வான் இராமாநுஜர் ஆகிய இவர்களிடத்தில் கொண்டுள்ள கௌரவத்தினாலும் அவ்வாறே தாம் கொடுப்பதாகக் கூறிக் கோயில் காணியாட்சியும் கோயிலில் புரோஹிதராயிருப்பதும் புராணம் படிப்பதும் ஆகிய தம்முடைய கோயிலுரிமைகளைத் தான சாசனமும் எழுதிக் கொடுத்தார். அதனைப் பெற்ற கூரத்தாழ்வான் இராமாநுஜரிடம் அதனை ஒப்பித்தனர். அதனால் மிகவும் மனமகிழ்ந்த இராமாநுஜர், முதலில் பெரிய கோயில் நம்பியை அழைத்து அவர் திருந்தியமைக்குப் பெருமானை மனமாரத்துதித்து அவருக்குப் பஞ்ச சம்ஸ்காரம் மந்திரோபதேசம் முதலியவற்றைச் செய்து வைக்குமாறு கூரத்தாழ்வானுக்குக் கட்டளையிட அவரும் அவ்வாறே பெரிய கோயில் நம்பிக்கு எல்லாவற்றையும் செய்து வைத்தருளினார். இராமாநுஜர், பெரியகோயில் நம்பி மஹாவித்வானாய், வாக்கு அமுதம் போலே இருந்தமையால் அவருக்கு அமுதன் என்ற பெயரை யளித்தனர். அதுமுதல் பெரிய கோயில் நம்பியானவர் திருவரங்கத்தமுதனார் என்று வழங்கப் பெறுவாராயினர்.

அப்பால், அவர் கோயிற் காரியங்களினுட் புகுந்து இடைப்பட்ட காலத்தில் வைகானச ஆகம விதிப்படி நடந்து

வந்த பூசனையை எப்பொழுதும் போலவே பாஞ்சராத்திரம் என்னும ஆகம விதியின்படி நடந்து வருமாறு செய்து, திருமங்கையாழ்வார் காலம முதல் ஐந்து பிரிவாக இருந்து கோயிற் காரியங்களை நடத்தி வருகின்றவர்களைத் (1) திருப்பதியார், (2) திருப்பணி செய்வார், (3) பாகவத நம்பிமார், (4) உள்ளூரார், (5) விண்ணப்பம் செய்வார், (6) திருக்கரகக் கையார், (7) தானத்தார், (8) பட்டாள், (9) ஆரிய பட்டாள், (10) தாஸ நம்பிகள் என்று பத்துப பிரிவுகளாகப் பிரித்து அவர்களுக்குப் பத்துக் கோத்தார் எனப் பெயர் வழங்குமாறு செய்து, மற்றும் கோயில் காரியங்கள் பார்க்கின்றவர்களைப் பல வகுப்புக்களிலும் ஏற்படுத்தித் திருவரங்கச் செல்வம சிந்தாமே மங்காமே பொங்கும்படி ஆராய்ந்து கொண்டு வந்தார்.

இராமாநுஜர், தாம், இவர்களுள் முதல் வகுப்பாகிய திருப்பதியார் என்னும் கொத்தில் சேர்ந்தவராயிருந்தார். அவ்விடத்துள்ள தன்வந்திரியின் ஆலயத்தைப் பழுது பார்த்து அங்கே ஒரு வைத்தியசாலையையும் அமைத்து, அச்சாலைக்குத் தலைவராய், ஆயுர் வேதம் முதலான வைத்திய சாஸ்திரங்களின் கரை கண்டவரான கருடவாஹன பண்டிதர் * என்பவரை ஏற்படுத்தித் திருவரங்கர் திருமேனியின் பாங்குக்குப் பழுது நேராமே அவரால் தினந்தோறும் கஷாயம் அமைத்துத் தருமாறும் செய்தருளினர். அதுமுதல உடையவராகிய இராமாநுஜர் கட்டளை செய்தருளியவாறே கோயிலில் காரியங்கள் நடக்கத் தொடங்கின. பிற்பட்ட காலங்களில் இவற்றில் வேறுபாடுகள் தோன்றியு மிருக்கலாம்.

---

* இவர் திவ்வியசூரி சரிதத்தைச் செய்தவர்.

## இராமாநுஜர் பிள்ளை உறங்காவில்லியையும் அகளங்கனையும் அடியவராகக் கொண்டமை.

இராமாநுஜர் இவ்வாறு கோயிலையும் மதத்தையும் சீர்திருத்தம் செய்து கொண்டுவரும் காலத்தில், சோழ நாட்டை முதலாவது குலோத்துங்க சோழன் என்பான் கங்கைகொண்ட சோழபுரத்தை இராஜதானியாகக் கொண்டு அரசாண்டு வந்தனன். அவனுக்குப் புதல்வர் பலர் இருந்தனர். அவருள் விக்கிரம சோழன் என்பான் மிகவும் சிறந்தவன். அவனே குலோத்துங்கனுக்குப் பிறகு சோழநாட்டரசனாயினன். அவன் தன் தந்தையிருக்கும் காலத்தில் அவனுடைய பிரதிநிதியாய் உறையூரிலிருந்து சோழநாட்டின் ஒருபகுதியை யாண்டுவந்தான். அவனுக்கு அகளங்கன் என்ற வேறு பெயரும் உண்டு. அவனிடம் மூவர் வில்லாளிகள் சேவகத்தில் அமர்ந்திருந்தனர். அவருள், உறங்காவில்லி என்பவன் தினந்தோறும் ஸ்ரீரங்கத்திற்கு வடக்கே காவேரியின் மறுகரையிலுள்ள திருவெள்ளறையிலிருந்து அரசவைக்குத் தன் மனைவியுடன் சென்று உச்சிப்பகலில் திரும்புவது வழக்கம். அவ்வாறு செல்லும் பொழுது தன் மனைவிமேல் வெயில் படாமலிருக்கக் குடைபிடித்தும் அடி சுடாமலிருக்கத் தன் மேலுத்தரியப் பட்டாடையை விரித்தும் செல்லுவது வழக்கம். அதனை இராமாநுஜரடியார்கள் அவருக்கு விண்ணப்பம் செய்ய, அவரும் ஒருநாள் அவ்வாறு அவ்வில்லியும் மனைவியும் செல்வதைக் கண்டு, அவர்களைத் தம்மருகழைத்து அவ்வில்லியை நோக்கி "நீ இவ்வாறு செல்லக் காரணம் யாது?" என்று வினவ, அவ்வில்லி அவரைநோக்கிச் "சுவாமி, அடியேனிருப்பது திருவெள்ளறை. தொழில் செய்வது உறையூரிலே அகளங்க அரசனிடத்தில். இவள் அடியேனுடைய மனை

யாட்டி. இப்போது நாங்கள் திருவெள்ளறைக்குத் திரும்பிச் செல்லுகின்றோம்." என்று தெரிவித்துக் கொள்ள, உடையவராம் இராமாநுஜர், "அப்பனே, தொழில் செய்யப் போமிடத்திற்கு மனைவியுடனும் செல்வதுண்டோ?" என்று வினவ, அவ்வில்லி, தன்மனைவியை அவருக்குக் காட்டி "இவ்வாறு அழகின் மிக்கவோரரிவை, தாழ்வான எங்கள் குலத்தில் மட்டுமல்லாமல், மற்றெக் குலத்திலுமே காணப்படுவது அருமையாம். அத்தகைய கிடைத்தற்கரிய பெண்மணி கிடைக்கப் பெற்ற அடியேன், இவளை விட்டுப் பிரிந்திருக்கவும் இவள் கண்ணழகில் ஈடுபடாமலிருக்கவும் கூடுமோ? அதனால் தான், நான் இவ்விதம் செய்கின்றேன்" என்று கூறக் கேட்ட இராமாநுஜர், "அப்பனே, நீ இவள் கண்ணழகில் ஈடுபட்டு இவ்வாறு உழன்றால், கடைத்தேறுவ தெவ்வாறு?" என, வில்லி, "சுவாமி, அடியேனைக் கடைத்தேற்றும் பொருள்களும் இவள் கண்களேயன்றி மற்றுமோர் பொருளுமிவ்வுலகத்திலுண்டோ? ஆதலின், எனக்கு இவள் கண்களே எல்லாப் பொருள்களுமாகும்" என்று தன் மனக்கருத்தை வெளிப்படுத்தவே, இராமாநுஜர், அவனை உய்யக் கொள்ள வேண்டும் என்று தம் மனத்துட் கருதி, "ஐயனே, நீ நினைத்திருப்பதைப் பார்க்கிலும் மேலான பொருள் உலகத்தில் உண்டெனக் காட்டுவோமாகில், நீ ஏற்று அதன் வழி நடப்பாயோ" என்று வினவ, அவன் அவ்வாறே நடப்பேன் என்றுடன்பட, இராமாநுஜர், உடனே அவ்விருவரையும் தம்மோடு வருமாறு அழைத்துச் சென்று காவேரிக் கரையில் அமைக்கப் பெற்ற பந்தலின் கீழ் எழுந்தருளிச் சித்திரைத் திருவிழாவைக் கொண்டாடுகின்ற திருவரங்கச் செல்வனாரைக் காட்டித் தொழு தெழுமாறு செய்ய; அவர்களும் தொழுது நின்று அடிமுதல் முடிவரையும் எம்பெருமானுடைய அவயவ

அமைப்பை ஆவலுடன் நோக்கின வளவில், அப்பெருமா னுடைய திருவருள் இவர்களுக்கு உண்டாயினமையால், அவ்வில்லி பெருமாளுடைய கண்ணழகில் ஈடுபட்டு இராமா நுஜரை நோக்கி, "அடியேன் வெல்லப் பட்டவனாயினேன்: அடியேன் முற்பிறப்பிற் செய்த நல்வினைகளெல்லாம ஒன்று திரண்டு தேவரீருடைய திருவருள் நோக்கத்திற்கு அடி யேனை இலக்காக்கின. தேவரீர் அடியேனை உய்யக் கொண் டருளவேண்டும்" என்று அவருடைய இணையடிகளையும் பற்றிக் கொண்டு கிடந்தனன். அவ்வாறே அவனுடைய மனைவியும், தன்னையும் கடைத்தேற்றவேண்டும் என்று அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள். இராமாநுஜர் அவவிருவரையும் எழுந்திருக்குமாறு செய்து, அவர்களைத் தம்முடன் மடத்திற்கு அழைத்துச சென்று, அங்கே அவர் களுக்குப் பஞ்ச சம்ஸ்காரம் முதலியவற்றைச் செய்து மந்திரத்தை உபதேசித்து அவ்வில்லிக்குப் பிள்ளை உறங்கா வில்லி தாசர் என்றும் அவன் மனைவிக்குப் பொன் நாச்சியார் என்றும் பெயர் வைத்துத் தம் மடியவர் குழாத்துடன் சேர்த்துக் கொண்டனர்.

அபபால், பிள்ளையுறங்காவில்லி தாசர், 'யான் பெற்ற பேறு என்னுற்றாரும் பெறுக, என்ற மொழிக்கிணங்கத் தம்முடன் அரசனிடத்துத் தொழில் புரிந்து வந்த வண்ட வில்லி, செண்டவில்லி என்ற தம் மருமக்களிருவரையும இரா மாநுஜர் திருவடிகளில் கொணர்ந்து சேர்க்க, அப்பெரியார் அவ்விருவருக்கும் பிள்ளையுறங்காவில்லி தாஸருக்குச்செய்தது போலவே செய்து வண்டலங்கார தாஸர், செண்டலங்கார தாஸர் என்ற பெயர்களை ஈந்து ஆட்கொண்டருளினர்.

இவ்வாறு, இராமாநுஜரால் ஆட்கொள்ளப்பட்ட பிள்ளையுறங்காவில்லி தாஸர், வண்டலங்கார தாஸர், செண்ட

லங்கார தாஸர் ஆகிய மூவரும் வழக்கம்போல் அரசனிடம் தொழில் செய்து, அதனால் தங்களுக்குக் கிடைக்கக்கூடிய மாத வருவாயை உடையவரிடம் கொணர்ந்து கொடுப்பார்கள். அப்பெரியார் அதனையேற்று, இவர்களுடைய நன்மையின் பொருட்டுப் பெருமானுக்கும் அவனடியார்களுக்கும் ஆசாரியர்களுக்கும் உபயோகமாம்படி செலவிட்டு அவர்களையும் தம்முடைய கோஷ்டியோடு சேர்த்துத் தென்மொழி வடமொழி வேதாந்த காலக்ஷேபங்களைச் செய்து கொண்டிருந்தார்.

அங்ஙனமாக, ஒரு நாள், அகளங்கன் வண்டவில்லி செண்டவில்லி ஆகிய இருவரும் தன் பக்கத்தில் மெய்காத்து வர உலாப்புறப்பட்டான். அப்பொழுது அவன், இவ்விருவரும் ஸ்ரீவைஷ்ணவ சமயத்துப் பெரியோருக்கு ஆட்பட்டிருக்கின்றனரே. இவர்களுடைய மனத்தின் நிலைமை எத்தன்மைத்தாக இருக்கின்றது என்பதை அறிவோம் என்று தன்னுட் கருதிச் சிறிது சேய்மைக்கண் தோன்றிய ஒரு ஜின ஆலயத்தின் கோபுரத்தைக் காட்டி, "இது ஸ்ரீரங்கம் கோயில் கோபுரம் போலுளதே; நாம் ஸ்ரீரங்கத்திற்கு அணித்தாக வந்துவிட்டோமோ?" என்றுகூற அவ்விருவரும் உண்மையாகவே அது ஸ்ரீரங்கம் கோயில் கோபுரம் தான் என்று கருதி அவ்விடத்திலேயே அக்கோபுரமிருக்கும் திக்கை நோக்கித் தாளும் தடக்கையும் கூப்பித் தண்டனிட்டுக் கிடக்க, அதனைக் கண்டு அகளங்கன் உரக்கச் சிரித்து, "ஐயோ; பாவம்! இதோ தோன்றுவது சமணக் கோயிற் கோபுரமல்லவோ? இதனையோ நீங்கள் தொழுதீர்கள்? நன்றாயிருந்தது உங்கள் வைணவத் தன்மை" என்று கூற, அதனைக் கேட்ட மாத்திரத்தில் மறந்தும் புறந்தொழா மாந்தர்களாகிய அவ்விருவரும், "நாம் சமணக்

கோயிலையோ தொழுதோம்; நாம் கெடுக" என்று கூறி அங்கிலேயிலேயே மூச்சடங்கப் பெற்றனர். அகளங்கன் இவர்கள் எழுந்திருக்கவில்லையே யென்று கருதிப் புறட்டிப் பார்த்தும் உயிரிழந்தவர்கள் போலவே விறைத்தது விறைத்தாற்போலிருக்கக் கண்டு அஞ்சி, இவர்களுடன் பழகுபவரான உறங்காவில்லிதாசரை அழைத்து வருமாறு கட்டளையிட, ஏவலர், அவ்விதமே சென்று உறங்காவில்லிதாசருக்கு அறிவித்து அழைத்து வநதனர். அவர், அங்கே வந்து அவ்விருவரையும் கண்டு, நடந்தவற்றை அரசனால் அறிந்து கொண்டு, மறந்தும் புறந்தொழா மாந்தருக்கு மாயன் தமர்களடிப்பொடியே மருந்து என்று கூறித் தம்முடைய திருவடி அவர்களுடைய உடல்களின் மேற் படும் வண்ணம் செய்தார். அவருடைய அடிப்பொடி தம் மேற்பட்டவுடன், அவர்கள் உயிர்பெற்றெழுந்தார்கள். அகளங்க அரசன் அதனைக்கண்டு அச்சமும் வியப்பும் கொண்டு, அம்மூவரிடத்தும் மிக்க மரியாதையையும் கௌரவத்தையும் பாராட்டித் தான் செய்தவற்றைப் பொறுத்தருள வேண்டும் என்று கேட்டுக்கொண்டான். பின்னும் அவன், இனிமேல் அவர்கள் தன்னிடம் தொழில் செய்ய வேண்டுவது இல்லை என்றும் ஆசாரியருடன் அவர்கள் ஸ்ரீரங்கத்திலேயே வாழ்ந்து கொண்டிருக்கலாம் என்றும் அவர்களுக்குச் சேர வேண்டிய மாத வருவாயைத் தவறாமல் தான் அனுப்பி விடுவதாகவும் கூறினான். அவ்வாறே அம்மூவரும் ஸ்ரீரங்கத்தில் தங்களாசாரியருக்குப் பணிவிடைகளைச் செய்து கொண்டிருக்கும் காலத்தில், அவர்களுக்குரிய மாதச் சம்பளத்தைச் சோழன் வரவிடுத்தனன். அவர்கள் அதனை ஸ்ரீராமாநுஜரிடம் கொண்டுபோய்ச் சேர்க்க, அவர் அதனை ஏற்றுக்கொள்ள மறுத்து அவர்களை நோக்கி, "அன்பர்களே, 'நும்மெய்வருந்திக் கைசெய்துய்மினோ' என்றவாறு,

இதற்கு முன் நீங்கள் கொணர்ந்த பொருள மெய்வருந்தித் தேடியதாகும். இதுவோ அங்ஙனமன்றி வந்தமையால் முன்போல் இது நம்மால் ஏற்றுக்கொள்ள முடியாது. நம்முடைய அடியார் குழாத்திற்கும் இதனை உபயோகப் படுத்தக்கூடாது. அதனால், அவர்களுடைய சாத்வீக குணம் மாறிவிடும். ஆதலால், இப் பொருள்களை அரசனிடமே திரும்பக் கொடுத்து வாருங்கள்'' என்று கட்டளையிட, அம்மூவரும் அவ்வாறே அரசனிடம் சென்று, அப்பொருள் களை எதிரில் வைத்துத் தங்களாசிரியர் உள்ளக்கருத்தை யுரைத்து, இனிமேல், அப்பொருள்கள் தங்களுக்கு வேண் டாம் என்றும் தெரிவித்தனர். அரசன் அவர்கள் கூறிய வற்றைக் கேட்டு, முன் அவர்கள் தன்னிடத்தில் வணக்க மாக நடந்துகொண்டதையும் இப்பொழுது மன உரத் துடன் நடந்து கொள்வதையும் ஒப்பிட்டு, 'இவர்களுக்கு மண் பொன் முதலியவற்றில் அவா இல்லாத காரணத்தால் இவ்வாறு கூறினர். இவர்களை இவ்வண்ணம் பயமற்றவர் களாகச் செய்தவர் ஸ்ரீவைஷ்ணவ சமயத்துப் பெரியோ ராகிய இராமாநுஜரே யாவார். அவரை யடைந்தால் நானும் இவ்வுலகத்தில் பயமற்றவனாகச் செய்யப்படலாம்' என்று தன்னுட் கருதி, அவர்களை நோக்கி "வில்லிகளே! நீங்கள் எவ்வாறு இந்த நிலைமையை யடைந்தீர்களோ, அவ் வாறே நானும் உங்கள் நிலைமையை யடைய விரும்புகின் றேன். என்னை நீங்களே அப்பெரியோரிடம் அழைத்துச் சென்று என்னையும் அவர் ஆட்கொண்டருளுமாறு செய்ய வேண்டும். இதுவே நீங்கள் எனக்குச் செய்யவிருக்கும் பெரிய நன்றியாகும்'' என்று வேண்டிக்கொண்டான்.

அம் மூவரும் அவனை அன்போடு இராமாநுஜரிடம் அழைத்து வந்து, "இவ்வரசன் சத்துவகுணம் மேலிட்டு நன்

மையை யடைய வேண்டும் என்று கருதி அதற்குத் தேவரீரே ஆசாரியராகத் தகுந்தவர் என்று தேவரீருடைய அருமை பெருமைகளை யெல்லாம் மனத்திற் கொண்டு வந்து நிற்கின்றான். ஆதலின், தேவரீர் இவனைக் கடைக்கணித்துக் கடைத்தேற்றி யருளவேண்டும் என அடியோங்கள் தேவரீரை மிகவும் மன்றாடி வேண்டிக் கொள்கிறோம்" என்று விண்ணப்பம் செய்தனர். அவர்களால் வேண்டப்பட்ட இராமாநுஜர், விக்கிரம சோழனாகிய அகளங்கனிடத்தில் இரக்கம் கொண்டவராய், அவ்வரசனைத் தமமருகே யழைத்து அவனுக்குப் பஞ்ச சம்ஸ்காரத்தைச் செய்து மந்திரத்தை உபதேசித்து ஆட்படுத்திக் கொண்டார். அவ்வாறு ஆட்கொள்ளப்பட்ட அவ்வரசனுக்கு அகளங்க நாட்டாழ்வான் என்ற பெயரையும் கொடுத்து அவனை நோக்கி, நீ அரசனாயினமையால், அறம் மறம் முதலியவற்றைப் பகுத்தறியும் தன்மை இயல்பாகவே உன்னிடம் அமைந்திருக்கும்; ஆதலின், நீ இன்று தொட்டுத் திருவரங்கம் கோயில் காரியங்களில் சிறிதும் குறைநேராமல், மேற்பார்வை செய்துகொண்டு வருவாயாக" என்று அவனுக்குக் கட்டளை யிட்டருளினார். அவ்வகளங்க நாட்டாழ்வானும் 'நானுய்ந்தேன்; உய்ந்தேன்' என்று பெருமகிழ்ச்சி கொண்டவனாய் இராமாநுஜரை நோக்கித் "தேவரீர் கட்டளையிட்டருளிய வண்ணமே அடியேன் நடந்து கொள்கிறேன்" என்று வணக்கத்துடன் கூறிக் கோயிலை மேற் பார்த்து வந்ததோடு திருவரங்கப் பெருநகருள் தன் பெயரால் இரண்டு பெரிய தெருக்களை யுண்டாக்கி, அவற்றுள் ஒன்றற்குத் திருவிக்கிரமன் திருவீதி என்றும், மற்றொன்றற்கு அகளங்கன் திருவீதி என்றும் பெயர் வழங்கி வருமாறு செய்தனன்.

## இராமாநுஜர் திருக்கோட்டியூர் நம்பியிடம் உபதேசம் பெற்றது.

இவ்வாறு, இராமாநுஜர் கோயிலைச் சீர்திருத்தியதுடன் பல சிஷ்யர்களைப் பெற்று, அவர்களால் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தையும் உலகில் பரவச் செய்துகொண் டிருக்கையில், ஒரு நாள், தம்முடைய ஆசாரியரான பெரிய நம்பியை யடைந்து வணங்கி எழுந்து நின்று "சுவாமி, அடியேன் ஆளவந்தார் திருவடிகளில் சிஷ்யனாகாத துக்கம், தேவரீரைக் குருவாக அடைந்தமையால் ஒருவாறு நீங்கப் பெற்றுள்ளேன். ஆதலால் தேவரீருக்கு ஆளவந்தா ருபதேசித்துள்ள மறை பொருள்களை (ரஹஸியார்த்தங்களை) யெல்லாம் அடியேனுக்கு உபதேசித்து வாழ்வித்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார். பெரிய நம்பியும் அவ்வாறே செய்கிறோம் என்று கூறி, இராமாநுஜரைத் தம்மருகே யழைத்து வீற்றிருக்கச் செய்து அவருடைய வலத்திருச்செவியில், பாவத்தைப போக்கிப் புண்ணியத்தை வளர்க்கக் கூடியதாய்ப் பிறவிப் பிணியறுத்துப் பெருவிசும்பருள வல்லதாய் எல்லாவுலகங்களையும் வசீகரிக்கும் தன்மை வாய்ந்ததாய்ச் சர்வ மங்களகரமாயுள்ள துவயம் என்னும் மந்திரத்தை முன்னர் உபதேசித்ததுபோலவே இப்பொழுதும் உபதேசித்து அதன் பொருளையும் நன்ருக மனத்திற் பதியும்படி விளக்கியருளினுர். பின்னும் அவர் "இராமாநுஜரே, ஸ்ரீஆளவந்தார், தம்முன்னோர் மொழிந்த பொருள்களை யெல்லாம் தம்முடைய சிஷ்யர்களிடம் கொடுத்துவைத்துப் பிற்காலத்தில் தாமே நேரில் உபதேசிப்பது போல உமக்கு அவற்றை உபதேசிக்கும்படி கூறித் திருநாடலங்கரித்தருளினுர். என்னிடத்தில் நீர் உபதேசம் பெற்றது போலவே அவர்களிடமும் சென்று உபதேசம் பெற்று, அப்பொருள்களை நீர் அடைந்து அதனுல்

உலகத்தை உய்யக்கொள்வீராக. அவ்வாறு ஆளவந்தாரிடமிருந்து உமக்கு உபதேசிக்குமாறு பெற்றுக் கொண்டவர்கள்—திருக்கோட்டியூர் நம்பி, திருமலை நம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருமாலை யாண்டான்—ஆகியவர்களாம். நீர் அவர்களிடம் சென்று அவ்வுண்மைப பொருள்களை யுணர்ந்தருளுவீராக" என்று கூறினார்.

இராமாநுஜர், அப்பொழுதே அப்பெரிய நம்பியிடம் விடைபெற்றுத் திருக்கோட்டியூருக்குப் புறப்பட்டனர். அவ்விடம் சென்று நம்பியுடைய திருமாளிகையைக் கேட்டுத் தெரிந்துகொண்டு அங்கே நம்பியைக்கண்டு அவருடைய திருவடிகளில் விழுந்து வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று "ஸ்வாமி, அடியேன் இலக்ஷ்மணன், பெரிய நம்பியின் சிஷ்யன்; ஸ்ரீ ஆளவந்தார் தேவரிரிடம் சில உண்மைப் பொருளை யுரைத்துச் சென்றனராம்; தேவரீர் அடியனேனுக்கு அவற்றை உபதேசித்து உய்யக் கொண்டருள வேண்டும்" என்று மிகவும் வணக்கமாகக் கூறினார். திருக்கோட்டியூர் நம்பி அவர் கூறியவற்றைத் தம்முடைய திருச்செவிகளில் வாங்கிக் கொள்ளாமலே யிருந்துவிட்டார். அதனால் மனந் தளர்ந்த இராமாநுஜர், திருவரங்க நகருக்குத் திரும்பிச் சென்று, தமக்கு அப்பொருள் கிடைக்கவில்லையே யென்று மனவருத்தத்துடனிருந்தார். அப்பொழுது, திருக்கோட்டியூர் நம்பி ஒருகாரியமாக ஸ்ரீரங்கம்வர, அங்கே, அறிதுயிலமர்ந்தமூர்த்தி, இராமாநுஜருக்கு ஆளவந்தார் உபதேசித்துள்ள பொருளைக் கூறுமாறு திருக்கோட்டி நம்பிக்குக் கட்டளையிட்டருளினார். அக்கட்டளையை மேற்கொண்ட நம்பி உடையவரை நோக்கி "நீர் நம்மூருககுவாரும், உமக்கு ஆளவந்தார் கூறியவற்றை உபதேசிக்கின்றேன்" என்று கூறிச்சென்றார். உடையவராம் இராமாநுஜரும் அவர்

கூறியவாறே திருக்கோட்டியூர் புறப்பட்டுச் செல்ல, அப்பொழுதும் நம்பி வாளாவிருந்திட்டனர். இவ்வாறே பதினெட்டுமுறை இராமாநுஜரை அலைக்கழித்து, இறுதியில்—குலந்தரும்; செல்வம் தந்திடும்; அடியார்படு துயராயினவெல்லாம் நிலந்தரம் செய்யும்; நீள்விசும்பருளும்; அருளொடு பெருநில மளிக்கும்; வலந்தரும்; மற்றும் தந்திடும்; பெற்றதாயினும் ஆயின செய்யும்; நலந்தருஞ்சொல்" ஆம் நாராயணா என்னும் நாமம் ஆகிய—திருவெட்டெழுத்தை உபதேசிக்க வேண்டிய முறைப்படி உபதேசித்தருளினார்.

திருக்கோட்டியூர் நம்பி, இத்திருமந்திரத்தை மிகவும் எளிதில் உபதேசிக்கக் கூடாது என்பதனாலும், சிஷ்யனைத் திருத்தவேண்டும் என்னும் உலகமரியாதையைக் கருதியும் ஸ்ரீராமாநுஜரைப் பதினெட்டுமுறை அலைக்கழித்தும் பட்டினி கிடக்கச்செய்தும் உபதேசித்தாராதல் வேண்டும். பதினெட்டாவது முறை, இராமாநுஜர் திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகைக்கு வரும்பொழுது ஸ்ரீஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவை என்னும் பிரபந்தத்தை ஓதிக்கொண்டே வந்தனர். கதவு சாத்தப்பட்டிருந்த நம்பி திருமாளிகையின் தலைவாசலை நெருங்கும் பொழுது, அவர் 'உந்துமதகளிற்றன்' என்னும் பாசுரத்திலுள்ள 'பந்தார் விரலியுன் மைத்துனன் பேர்பாடச், செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப,வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்' என்ற இடத்தை ஓதிக்கொண்டே வந்து கதவைத் தட்டினர். அப்பொழுது உள்ளே பந்துங்கையுமாக விளையாடிக்கொண்டிருந்த தேவகிநாச்சியார் என்ற அந்நம்பியின் திருமகளார், அத்திருக் கோலத்தோடே வந்து மணிக்கதவம் தாள் திறக்க, அப்பாசுரத்தில் கூறிய பொருளின்படியே அப்பெண், இராமாநுஜருடைய கண்களுக்கெதிரே பந்துங்கையு

மாக வந்து நப்பின்னைப் பிராட்டிபோலத் தோன்றியமை யால் அவர் அப்பெண்மணியைக் கீழே விழுந்து வணங்கி னர். அவ்வளவிலே அப்பெண்ணரசியார், ஓடியும் வந்து தனது தந்தையிடம், இராமாநுஜர் தன்னைக்கீழே விழுந்து வணங்கினமையைக்கூற, உடனே, நம்பி தம்மகள் பந்தும் விரலுமாக இருப்பதையும் இராமாநுஜர் ஏதோ கூறிக் கொண்டு நிற்பதையும், கண்டு நடந்ததைத் தம்முடைய ஞானத்தால் அறிந்து சடக்கெனத் தலைவாசலுக்கு வந் இராமாநுஜரை நோக்கி "நீர் 'உந்துமதகளிற்றன்' பாசுர தை ஓதிக்கொண்டு வந்தீரோ' என்று வினவ, அவரும் 'ஆ என்று கூறினர். அப்பொழுது திருக்கோட்டியூர் நம் அவரைத் திருப்பாவைஜீயரே என்றழைத்தனர். அதுமுத இராமாநுஜருக்கு அப்பெயர் வழங்கிவருவதாயிற்று.

## இராமாநுஜர் திருமந்திரதானம் செய்தல்.

இராமாநுஜர், தாம் திருமந்திரமாகிய இப் பெரிய யைப் பெறுவதற்குப் பட்ட முயற்சியும் துன்பமும் அளவி லடங்கா திருந்தமையை யறிந்து, "இதுபோலவே மற்றவர் களும் இம்மந்திர ரத்தினத்தையறிந்து நன்மையை நாட வேண்டும் என்றிருந்தால், அவ்வாறு [illegible]ர்கள் கோடி யில் ஒருவர் கூட இரார்களே. அங்ஙனமாக, [illegible] ஸ்ரீவைஷ் ணவ சமயம் இவ்வுலகத்தில் எவ்வாறு பரவி மேன்மையை யெய்தும்? இவ்வாறு நம்முடைய சமயம் குறுகிய நிலை மையில் இருக்கவேண்டும் என்று ஆளவந்தார் முதலான நம் முன்னோர்கள் கருதியிருப்பரோ? அங்ஙனம் கருதியிருக்க மாட்டார்கள் அல்லவா? நம் பெருமாளுக்குத்தான் அது திருவுள்ள மாகுமோ? எல்லா உயிரும் தன் திருவடி நீழலில்

வந்து இளைப்பாறவேண்டும் என்று கருதுகின்றவனுக்கு, இவ்வாறு தடைசெய்வது, தாயினிடத்திற் செல்லக் கூடாது என்று சிறுகுழந்தைகளைத் தடைசெய்வது போலாகுமல்லவா? இவ்வாறு உயர்ந்த பொருள்களைப் பெறுவதில் ஏதோ சிறிது மறைவு இருக்கவேண்டும் என்பது நியாயமே. அதற்காக இவ்வளவு கடுமை கூடாதல்லவா'' என்று தமமுட்கருதிப் பேரருளாளன் கிருபைக்கு இலக்கான அவர், எல்லா உயிர்களும் உய்யவேண்டும் என்னும் எண்ணத்தோடு, அருள் மாரியாய்க் கருணைக்கடலாய் அத்திவ்விய தேசத்திலுள்ள சௌமிய நாராயணன் கோயிலில், ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவோலக்கமாக வீற்றிருக்கும் வேளையில், தாம், திருக்கோட்டி நம்பியிடம் பெற்றுக் கொண்ட திருமந்திரத்தை அவ்வோலக்கத்துள்ளாரனைவரும கேட்குமாறு, அந்நம்பியின் திருவடிகளை மனத்துட்கொண்டு உரத்த குரலில் பிரசங்கம் செய்தருளினார். அங்கே இருந்தாரனைவரும் அவருடைய சொற்பொழிவைக்கேட்டு "இனி, நாமுய்ந்தோம்; இவரே, நம்மையும் வைஷ்ணவ சமயத்தையும் வாழ்விக்க வந்த மா பெருங்கடவுள். இவரே, ஓராசான் வழியாக வந்த இவ்வுபதேசப் பொருளைப் பலருமறியப் பகர்ந்த பரமகருணாநிதி யாவார். இனி, ஸ்ரீ வைஷ்ணவ சமயம் இவ்வுலகில் பரவிச் சிறப்புற்றோங்கும் என்பதில் ஐயமுண்டோ?'' என்று கூறி மகிழ்வெய்தினார். அவர்கள் மகிழ்ச்சியைக் கண்ட இராமாநுஜர்,—"ஈதுவக்குமின்ப மறியார்கொல் தாமுடைமை, வைத்திழக்கும் வன்கணவர்''—என்றவாறு தம்முடைமையாம் மந்திரரத்தினத்தை யாவருக்குமீந்து பேரின்பவெள்ளத்தே யிருந்தனர்.

திருக்கோயிலில் நடந்தவற்றையெல்லாம் கேட்டறிந்த திருக்கோட்டியூர் நம்பி, இராமாநுஜரை யழைத்து "நாம் உம்மைப் பலபடியாலும் பரிசோதித்து ஒருவருக்கும் சொல்ல

லாகாது என்று கட்டளையிட்டு உபதேசித்த பெரியதிருமந்திரத்தை, நீர் பெருமாள் திருவோலக்கத்திலே பெருந்திரளில் நின்று கொண்டு யாவர் செவியிலும் கேட்கும்படியாய் வெளியிட்டீர் என நாம் கேட்டோமே; அது உண்மைதானோ?" என்று கேட்டருள, இராமாநுஜர், "சுவாமி, அது உண்மைதான்; அடியேன் தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொல்லியிருக்கிறேன். தேவரீர் அதை ஒருவருக்கும் சொல்லலாகாது என்று கட்டளை யிட்டிருக்கவும், அடியேன், ஆசாரியனுடைய கட்டளையை மீறிச் சொல்லி விட்டேன். அதனால் அடியேன் ஒருவன் மாத்திரம் நரகத்திற்குச் செல்வேன். அம்மந்திரத்தைக் கேட்ட மற்ற யாவரும் வீடெய்தி வீறு பெறுவரன்றோ, என்பதனால் உரைத்துவிட்டேன்" என்று ஒப்புக்கொண்டார். திருக்கோட்டியூர் நம்பி அதனைக்கேட்டு இராமாநுஜரின் கருணைமிகுதிக்குக் களிகொண்டு கருணைக்கடலாகிய ஸ்ரீமந் நாராயணனே இராமாநுஜனாகவந்து அவதரித்துள்ளான் என்றுகருதி அவரை எம்பெருமானாரே என வாரியெடுத்துத் தம் மார்போடணைத்துக் கொண்டு "அப்பனே, இவ்வுலகத் துயிர்களெல்லாம் இத்தகைய அருட் பெருங்கொண்டலைக் காணாமையால், தவித்துக்கொண்டிருந்தன. இப்பொழுது நீ வாடு பயிர்க்கு வரும் மாமழை போல் வந்து தோன்றினாய்" என்று கூறித் தம் சிஷ்யர்களைப் பார்த்து, "அன்பர்களே, இதுவரை பரம வைதிக சித்தாந்த மாயிருந்த இந்த விஷ்ணு தர்சனம் இனி எம்பெருமானார் தர்சனம் என்று வழங்கக் கடவது" என்று கூறியருளினார்.

# இராமாநுஜர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சரம சுலோகம் பெறுதல்.

பிறகு, திருக்கோட்டியூர் நம்பி "இராமாநுஜரே, நீர் இப்பொழுது திருவரங்கம் சென்று பின்னர்த் திரும்பிவருக அப்பொழுது நான் உமக்கு மற்றும ஒரு இரஹஸியத்தை உபதேசிக்கின்றேன்" என்று கூறி ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பினார். அவ்வாறே, இராமாநுஜர் கூரத்தாழ்வான் முதலியாண்டான் முதலான சிஷ்யர்கள் உடன் வர, ஸ்ரீரங்கம சென்று அங்கே கோயில் பணிகளையெல்லாம் குறைவற ஆராய்ந்து தினந்தோறும் ஸ்ரீரங்க நாதனையும் ஸ்ரீரங்க நாயகியையும் வணங்கியிருந்தனர்.

பின்னர்ச் சிலநாட்கள் சென்றவாறே இராமாநுஜர் திருக்கோட்டியூர் நம்பி கூறியதை மனத்துட்கொண்டு அங்கே புறப்பட்டுச்சென்றார். சென்று நம்பியைக் கண்டு தாளுந் தடக்கையும் கூப்பி வணங்கி எழுந்து நின்றார். அங்கே சில நாட்கள் ஆசாரியனுடைய திருமாளிகையில் இராமாநுஜர், அவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டிருக்க, ஒருநாள், நம்பி இராமாநுஜரை ஏகாந்தமான ஓரிடத்திற்கு அழைத்துச் சென்று "நீர் மன ஒருமைப்பாட்டுடன இப்பொழுது உபதேசிப்பதைக் கேட்பீராக. இது அக்காலத்தில் அர்ஜுனனுக்கு மனத்தெளிவுண்டாகுமாறு கண்ணன் கருணையுடன் உரைத்தருளிய ஸ்ரீகீதையின்கண் ணுளளதாகும். இதுவே சரம சுலோகம் என்று அழைக்கப்படுவதாகும். அதனை நான் உமக்கு உபதேசிக்கின்றேன்" என்று 'ஸர்வ தர்மாந்' எனத் தொடங்கும் சுலோகத்தை உபதேசித்து அதன் பொருளையும் விளக்கி யருளினார். பின்னர், அவர், "நீர் இதனைப் பெருமாளிடம் மிகவும் பக்தியுள்ளவர்கட்கே

உபதேசிக்க வேண்டும்' என்று கட்டளையிட்டருளினார். இராமாநுஜர் அவ்வாறே செய்வதாக அவரிடம் கூறித் தமக்குப் பெரிய நம்பி திருக்கோட்டியூர் நம்பி முதலியவர்களால் கிடைத்த பொருள்களை நினைந்து நினைந்து தம்முள்ளே மகிழ்ச்சி கொண்டவராய் 'நாம் ஆளவந்தாரையடைந்து அவரிடம் உபதேசம் பெறவில்லையே என்று வருந்தினோமே அவ்வருத்தம் அவருடைய பின்னோர்களான இவ்விருவராலும் நீங்கப்பெற்றோம். மாயன் அன்று ஓதிய வாக்காம் இது ஈசுவரனையடையும் உபாயங்களில் சிறந்ததாயுள்ளது. இதுவே மேலானது. இது கிடைக்கப் பெற்ற நாமே புண்ணிய சாலி'' என்று கொண்டாடி இன்ப முற்றிருந்தார்.

பிறகு அவர் ஸ்ரீரங்கம் சென்று திருக்கோட்டி நம்பியின் அநுமதி பெற்றுக் கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் தாம் பெற்றவற்றை உபதேசித்து வாழ்வித்தருளினார். அவ்வாறு இராமாநுஜர், பெரிய நம்பியிடமும திருக்கோட்டியூர் நம்பியிடமும் உபதேசம் பெற்ற திரு எட்டெழுத்தாம் பெரிய திருமந்திரமும் துவயம் என்பதும் சரம சுலோகம் என்பதும் ஆகிய இம்மூன்றுமே இப்பொழுது ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் உயிர் நிலையா யிருக்கின்றன. இவற்றிற்கே இரஹஸியத்திரயம் எனப்பெயரிட்டு வழங்குவார்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள். இராமாநுஜர் தம் சிஷ்யர்களில், எழுபத்து நால்வரைப் பொறுக்கி அவர்களுக்குச் சிம்மாசனாதிபதிகள் என்று பெயர் வைத்து அவர்களாலும் அவர்களுடைய சிஷ்யர்களாலும் இரஹஸியத்திரயமானது இவ்வுலகத்தில் பரவும் வண்ணம் செய்து அதனால் யாவரையும் ஈடேறுமாறு செய்தருளினார்.

## இராமாநுஜர் திருமாலையாண்டானிடம் திருவாய் மொழிப் பொருள் கேட்டது.

இராமாநுஜர், ஸ்ரீரங்கத்தில் கோயிலையும் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தையும் செவ்வை செய்துகொண்டு வீற்றிருக்கும் காலத்தில், திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீரங்கத்திற்கு வந்து, நம்பெருமாளையும் ஸ்ரீரங்க நாயகியையும் வணங்கித் தம்மைப் போலவே ஆளவந்தார் சிஷ்யராகிய திருமாலை யாண்டானைக் கண்டு அவரையும் தம்மோடு இராமாநுஜருடைய மடத்திற்கு அழைத்துச் சென்று "இராமாநுஜரே, நீர் திருமாலையாண்டானிடம் மாறன் பணித்த மறைத் தமிழாம் திருவாய்மொழிக்குப பொருள் கேட்டருளுவீராக" என்று சொல்லித் திருமாலையாண்டானை நோக்கி "நீர் ஆளவந்தாரிடம் கேட்ட திருவாய் மொழிப் பொருளை இவருக்கு விளங்க விரித்துரையும்" என்று கூறிவிட்டுத் தம்மூருக்குச் சென்றனர்.

திருமாலையாண்டான், திருக்கோட்டி நம்பி கூறியவாறே திருவாய் மொழியின் பொருளைத் தாம் ஆளவந்தாரிடம் கேட்டபடியே, இராமாநுஜருக்குக் கூறிவந்தார். அங்ஙனம் அவர் கூறிவரும்பொழுது, இராமாநுஜர், சிற்சில பாசுரங்களுக்குச சில விசேடப் பொருள்களை யுரைத்து வருவாராயினர். அப்பொழுது, திருமாலையாண்டான் ஸ்ரீ ஆளவந்தார் இப்படிப் பொருளுரைக்க நாம் கேட்டறியோம் என்று கூறுவர். இவ்வாறாக, "அறியாக் காலத்துள்ளே' என்று தொடங்கும் பாசுரத்திற்குத் திருமாலையாண்டான் பொருள் கூற, இராமாநுஜர் அதற்கு வேறு பொருள் கூறினர். அதனால் மன வெறுப்புக் கொண்ட திருமாலையாண்டான், "ஸ்ரீ ஆளவந்தார் இப்படிப் பொருள் கூறியதை நாம் கேட்டதில்லை. நீர் உம் மனம்போன வாறெல்லாம் பொருள் கூறுகின்றீர்.

இனி, நாம் உமக்குப் பொருளுரைக்க மாட்டோம்'' என்று திருவாய்மொழிக்குப் பொருளுரைப்பதைத் தவிர்ந்தனர்.

திருக்கோட்டியூர் நம்பிக்கு இச்செய்தி தெரியவர, அவர் ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டுவந்து, திருமாலையாண்டானிடம் சென்று 'திருவாய் மொழிக்குப் பொருள் நடந்து வருகிறதோ' என்று கேட்க, ஆண்டான், 'அடியேன் ஆளவந்தாரிடம் கேட்டபொருள் ஒருபுறமிருக்க, இராமாநுஜர் வேறு சில பொருள்களைத் தாமே படைத்துப் பாசுரங்களுக்குக் கூறிவருகிறார். அதனால், இப்பொழுது பொருளைத் தொடர்ந்து கூறிவரவில்லை' என்று தெரிவித்துக் கொள்ளத் திருக்கோட்டியூர் நம்பி, 'அவர் தாமே கூறிய பொருள்தான் என்ன?' என்று வினவ, ஆண்டான், 'அறியாக்காலத்துள்ளே' என்னும் பாசுரத்திற்குத் தாம்கூறிய பொருளையும் இராமாநுஜர் கூறியதையும சொல்லத் திருக்கோட்டியூர் நம்பி அதனைக்கேட்டு மிக்க மகிழ்ச்சியால் ஆண்டானைத் தழுவிக் கொண்டு 'இப்பொருளை ஆளவந்தார் கூற நாம் கேட்டதுண்டு ; ஆதலால் ஆளவந்தாருள்ளத்திலுள்ளது எதுவோ, அதுவேதான் இராமாநுஜருக்குத் தோன்றும் என்றுகருதுவீர். நீர் அவருக்குத் தெரியாதனவற்றைத் தெரிவிப்பதாக நினைத்துக்கொள்ள வேண்டாம். நீரும் நானும் மற்றவர்களும் அவருக்கு ஆசாரியராக இருப்பது உலக மரியாதைக்கே யொழிய வேறன்று' என்று கூறி, அவரையும் பெரிய நம்பியையும் தம்முடன் இராமாநுஜரிருப்பிடமழைத்துச்சென்றார். அப்பொழுது இராமாநுஜர், வந்தவர்களுடைய திருவடிகளில் வணங்கி நிற்கத் திருக்கோட்டியூர் நம்பியும் பெரிய நம்பியும் ஆண்டானை நோக்கி 'இனி, நீர் திருவாய்மொழியில் விட்ட இடந் தொடங்கிப் பொருள் உரைத்துக்கொண்டு செல்லுக' என்று கூறினார்கள். அவரும் அங்

நனமே யாகுக என்று சொல்லித் திருவாய் மொழிக்கு மேலே பொருளுரைத்துக் கொண்டு சென்றார். திருக்கோட்டியூர் நம்பியும் தம்மூருக்குப் புறப்பட்டனர். திருமாலையாண்டான் பொருள் கூறிக்கொண்டு செல்லும் பொழுது, பின்னையும் இராமாநுஜர் வேறு சில பொருள்களைக் கூற, ஆண்டான், 'நான் ஆளவந்தாரிடம் கேளாதன வெல்லாம் உம்மிடம் கேட்கப் பெற்றேன்' என்று அவரைக் கொண்டாடினார். அவ்வாறு இராமாநுஜர் திருவாய் மொழிக்குப் பொருள் கேட்ட பின்னர்த் தெளியாத மறை நிலங்களெல்லாம் தெளியப்பெற்றுத் தர்சனத்தை இனிதே நடத்திக் கொண்டு சென்றார். இத்திருவாய் மொழிக்குப் பகவத் விஷயம் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுவார்கள். வியாச மஹரிஷியால் செய்யப்பட்ட பிரமசூத்திரம் முதலியன வடமொழி வேதாந்தம் என்றும் திருவாய்மொழி முதலியன தென்மொழி வேதாந்தம் என்றும் ஆகவே இவ்விரண்டு வேதாந்தங்களையும் உபயவேதாந்தம் என்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லுவார்கள். உபய வேதாந்தங்களிலேயும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உரிமையுண்டு.

அப்பால், இராமாநுஜர், பெரிய நம்பி கூறியவாறே திருவரங்கப் பெருமாளரையர் என்ற பெரியோருக்கு உகப்பான பணிவிடைகளைச் செய்து அவரை மகிழ்வித்து அவரிடத்திலிருந்தும், ரிமணங்கெடுத்தும் மருவித்தொழும் மனமே தந்தும் அறியாதன அறிவித்த ஆசாரியனையே தொழத் தக்க தெய்வம் என்றும் அடையப்படுகிற கதி என்றும் தேடத்தகுந்த நிதி யென்றும் கற்பதற்குரிய கல்வி யென்றும் விரும்பிப் பெறும் பொருள் என்றும் நம்பி ஆசாரியனுக்குப் பணிவிடை செய்தலாகிய ஆசாரிய பக்தியை உபதேசிக்கப் பெற்றார்.

---

## இராமாநுஜர் ஸ்ரீரங்கத்திலிருக்கும்பொழுது நடந்தவை.

இராமாநுஜர், உபய விபூதியையும் உடையவராய் மஹா வித்வான்களும் மற்றுமுள்ளார்களும் அரசனும் ஆண்டியும் தம்மைப் போற்றும்படி வாழ்ந்து வருகிற நாளில், துற வினர்க்குரிய தருமமாகிய பிக்ஷை எடுத்துண்ணுதலை மேற் கொண்டு, குறித்த சில இல்லங்களுக்குச் சென்று பிக்ஷை யேற்று உண்டுவந்தார். அப்பொழுது மேற்றிசைத் தேயங் களில் மழையின்றி மாநிலத்துயிர்களெல்லாம் வாட்டமுற் றன. அங்கே யுண்டாகிய கொடிய பஞ்சத்தை யாற்ற மாட் டாதவர்களாய், அந்நாட்டிலுள்ளவர்கள் பிழைப்பைக் கருதி வேற்றுத் தேசங்களுக்குச் சென்றார்கள். அவர்களுள் புருஷ னும் மனைவியுமேயுள்ள ஒரு குடும்பம் ஸ்ரீரங்கத்தை யடைந்து ஒருவீட்டின் மேல் மாடியில் தங்கியிருந்து ஏதோ தொழில் செய்து பிழைத்து வந்தது. அக்குடும்பத்துப் பெண்ணின் பெயர் சுமதி என்பது. அவர்கள் தங்கியிருக்கும் இல்லத்திற்கு இராமாநுஜர் பிக்ஷை யேற்கச் செல்லுவது வழக்கம். அத னைச் சுமதி என்னும் பெண்பிள்ளை கண்டு, 'பிச்சையேற் றுண்ணும் சந்நியாசி யாகிய இவரை, அரசர் முதலான அனை வரும் வந்து வணங்குகின்றனரே; இது என்னே! இவரிடம் அதற்கு ஏதோ மஹிமை இருக்கவேண்டும்' என்று கருதி, ஒருநாள் அவர் அவ்வீட்டிற்குப் பிச்சையேற்க வரும் பொழுது மேலேயிருந்து இறங்கிவந்து அவரெதிரில் போய் நின்று, "சுவாமி, தினந்தோறும் பிச்சையேற்றுண்ணுமொ ருவருக்கு அரசன் முதலான அனைவரும் ஒற்றுமையாய் அடங்கியொடுங்கி யடிக்கீழமர்ந்து புகுந்திருப்பதைப் பார்க் கையில், ஏதோ ஒன்று தேவரீரிடம் இருக்கின்றது எனத் தோன்றுகிறது; அதனை அடியேனுக்கும் அறிவிக்க வேண்டு

கிறேன்" என்று கூற, அவர், "அம்மையே, என்னிடத்தில் பகவான் விஷயமான நல்ல வார்த்தைகள் என்னுடைய ஆசாரியர்கள் அருளால் இருக்கின்றன. அவற்றுள் ஒரு வார்த்தையை உணர்ந்தப புக்காலும் கேட்பவன் அரசனே யாகிலும் அயிராணி கேள்வனேயாகிலும் மற்றும் யாவரே யாகிலும் செவிசாய்த்து முடிவணங்காநிரார். இதுவே என்னிடத்துள்ளது" என்று கூற, அவ்வம்மையார், உடனே இராமாநுஜர் பாதங்களில் வணங்கிச், "சுவாமி, தேவரீர் அடியேனையும் அவர்களைபபோலவே வாழ்வித்தருள வேண்டும்" என்று மிகவும் கெஞ்சிக் கேட்டுக்கொள்ள, இராமாநுஜர் அப்பெண்ணிடம் இரக்கம் கொண்டு, முதலில் குருபரம்பரையை உபதேசித்துப் பின்னர், துவயம் என்னும் மந்திரத்தை உபதேசித்தருளினர். அபபால், அவர் அப்பெண்ணை நோக்கி "நீர் கொங்கு தேசத்திலிருந்து வந்துள்ளமையால் உமக்குக் கோங்கு பிராட்டி என்கிற பெயர் இருக்கட்டும். அக் கொங்கு தேசம் 'கொங்கர் கோன் குலசேகரன்' என்று அருளிச் செய்த நம்மை யாளாகவுடைய பெரியோர்களில் ஒருவருடைய தேசமாகும். உம்மால் அம்முன்னோருடைய தொடர்பும் நமக்கு ஏற்பட்டதாயிற்று" என்று கூறினர்.

அப்பால் மேல் நாட்டில் பஞ்சம் நீங்கியவாறே அவ்வம்மை இராமாநுஜரைக் கண்டு வணங்கித் தான் தன்னுடைய ஊருக்குப் போவதற்கு விடைதந்தருள வேண்டும் என விடைபெற்றுக் கொண்டதோடு பின்னும் அம்மந்திரத்தையும் உபதேசிக்கப் பெற்று அடையாளமாக அவருடைய பாதுகை (திருவடிநிலை) யையும் பெற்றுக்கொண்டு அவரைப் பலமுறை வணங்கி வாழ்த்தித் தன்கணவனுடன் தன்னூர் சென்றெய்தினள்.

* * * * *

இராமாநுஜர், ஸ்ரீவைஷ்ணவ சமயத்தை விளங்கும்படி செய்துகொண்டு, கோயில் காரியங்களில் குறைவு நேரிடாவண்ணம் கோயிலில் வேலைசெய்யும் ஒவ்வொருவரையும், மிகவும் கண்டிப்பாக நடத்தத் தொடங்கிய பொழுது, தானத்தாரில் ஒருசிலர், இராமாநுஜரை முடித்தாலொழியத் தாம் தம்மனம் போனவாறு நடக்க முடியாது எனத் தம்முள் நிர்மானித்து, அவர் பிக்ஷையேற்க வரும் மனையொன்றில் சென்று, அவ்வீட்டிற்குடைய வைஷ்ணவனை மிகுதியான பொருள் கொடுத்துத் தம் கருத்திற் கிணங்குமாறு செய்து, அவனால் இராமாநுஜருக்கு அன்னத்துடன் விஷமும் கலந்து கொடுக்குமாறு செயதனர். பொருளால் அறிவு பறிகொடுத்த அபபேராசைப் பேயன், தன்மனைவியை மறுநாள் எவ்விதமாவது விஷத்தை அன்னத்துடன் கலந்து அவருக்கிடுமாறு பலவிதத்தாலும் வற்புறுத்தினன். அப்பெண்மணி, தன்கணவன் செய்வது தகுதியான செயலன்று என அவனுக்கு எவ்வளவு எடுத்துக் கூறியும், அவன் பொருளாசையால் அவள் கூறுவதைச் செவியில் வாங்காமலே, தன் மனைவியை விஷமிடுமாறு அடித்துத் துன்புறுத்தத் தொடங்கினன். அப்பெண்கள் நாயகம் அடிபொறுக்கமாட்டாமல் அவ்வாறே செய்வதாக ஒப்புக் கொண்டாள்.

மறுநாள் இராமாநுஜர் அவ்வில்லத்திற்குப் பிச்சையேற்க வந்தவுடன், அப்பெண்ணரசி தான் செய்யப் போகும் தகாச்செயலால், உடையவருக்குத் தீங்கு நேரிட்டு விடும் என்னும் அச்சத்தால் உடல் நடுங்கித் தட்டுத்தடுமாறி வாடிய முகத்துடன் விஷங்கலந்த அன்னத்தைக் கூடையில் ஒருபுறமாக இட்டு அவருடைய திருமுகமண்டலத்தை ஏற இறங்கப் பார்த்துத் திருவடியில் வணங்கிக் கண்ணீர் சிந்திக் கொண்டே வீட்டினுள்ளே நுழைந்தாள். இராமாநுஜர்

அவளுடைய இங்கிதம் செயல் முதலியவற்றால் இப்பெண் ணிட்ட அன்னத்தில் ஏதோ விஷமம் இருக்க வேண்டும் எனக் கருதியவராய்த் தாம் அவ்வன்னத்தை யுண்ணாமல் காவேரிக்கரையில் ஒருவரும வாராத ஓரிடத்தில் அதனைக் கொண்டுபோய்ச் சிதறிவிட்டனர். அப்பொழுது அங்கே சிதறிக் கிடந்த பருக்கைகளை ஒருகாக்கை கொத்தித் தின்று உடனே தலைசுற்றிக் கீழே விழுந்திறந்தது. அதனைக் கண் ணுற்ற இராமாநுஜர், அவ்வன்னத்தில் விஷங்கலந்துள்ளது என்பதைத் தெரிந்து கொண்டமையோடு தம்மைக் கொல் வதற்கு ஏதோ மறைவாகச் சூழ்ச்சி நடக்கிறது என்றும் அறிந்து அன்று முதல் பிக்ஷைக்குச் செல்லாமல் சில நாட் கள் வரையும் பட்டினியாகவே இருந்து வந்தார்.

திருக்கோட்டியூர் நம்பிக்கு இச்செய்தி தெரிய, அவர் பதைபதைத்து, உடனே திருவரங்கநகருக்குப் புறப்பட்டுச் சென்று தென் திருக்காவேரியில் வரும்பொழுது, இராமா நுஜர் அவர் வருவதைத் தெரிந்து, எதிர்கொள்ள அங்கே சென்றார். அப்பொழுது நடுப்பகல்; சூரியன் கிரணம் மிக வும் கடுமையாய்க் காய்ந்தது. ஆற்று மணல் மிகவும் கொதித்துக் கொண்டிருந்தது. இராமாநுஜர், தம்முடைய ஆசாரியரை நட்டாற்றங்கரையில் எதிர்ப்பட்டு அவருடைய திருவடிகளில் வணங்கினபடியே கீழேவிழுந்து கிடக்க, நம்பி அவரை எழுந்திரும் என்று நியமிக்காமலிருந்தார். அவ் வாறு சிறிது பொழுது செல்ல, அங்கே நின்ற இராமாநுஜ ரடியவர்களில் ஒருவர், கிடாம்பியாச்சான் என்பவர், மனம் பதறி, உடயவர் கீழே பொறுக்கமுடியாத வெப்பத்தில் கிடக்க, 'இவ்வாசாரியர் எழுந்திரும் என வாய்கூடத் திற வாமல் நிற்கிறாரே. இது தானோ சிஷ்ய ஆசாரிய முறைமை. வெகு நன்றாயிருக்கிறது. மல்லிகைப் பூவை நெருப்பிலிட்டு

மகிழ்வதுபோலிருக்கின்றதே இவருடைய செய்கை' என்று விரைந்து சென்று இராமாநுஜரைப் பரிந்து எடுத்தார். அப்போது திருக்கோட்டியூர் நம்பி மிகவும் மகிழ்ச்சி கொண்டு, கிடாம்பியாச்சானை அருகழைத்து "ஆச்சானே, இவ்விராமாநுஜருடைய சிஷ்யர்களில் அவரிடம் மிக்க பரிவுடையார் யாவர் என்பதை அறிந்துகொள்வதற்காகவே நாம் இந்த விஷப்பரீக்ஷை செய்தோம். இராமாநுஜர்மேல் ஈப்பறக்கவும் பொறுக்கமாட்டேன். அங்ஙனமாக அவரை வெயிலில் வறுப்பேனோ? நான் செய்த செய்கையால் உம்மைத் தெரிந்துகொண்டேன். அவரிடத்தில் பரிவுடையரான நீரே இன்று முதல் தளிகைபண்ணி அவருக்குப் பிக்ஷையிட்டுக்கொண்டு வாரும். இன்று முதல் அவர் பலவிடங்களில் பிக்ஷையேற்காமல் ஓரிடத்திலேயே பிக்ஷையேற்கட்டும்" என்று கூறி இராமாநுஜரையும் அவருடைய சிஷ்யர்களையும் அவருடைய மடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டுத் தம்மூருக்குத் திரும்பினர்.

அப்பால், இராமாநுஜர், கிடாம்பியாச்சானுக்குத் தம்மிடத்துள்ள அன்பைத் தம் சிஷ்யர்கள் எல்லோரும் கொண்டாடினர். அவர்கள் கிடாம்பியாச்சானைப் போலத் தங்களுக்குப் பக்குவம் உண்டாகவில்லையே எனத் தங்களைத் தாங்களே நொந்துகொண்டார்கள். அன்று முதல் இராமாநுஜருடைய மடைப்பள்ளித் தொண்டுகள் எல்லாம் கிடாம்பியாச்சானுடையதாயிற்று.

## இராமாநுஜர் எக்ஞமூர்த்தியை வென்றடிப்படுத்தியது.

இவ்வாறு, இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தில் வீற்றிருக்கும் காலத்தில், எக்ஞமூர்த்தி என்ற பிராமணன் ஒருவன், காசிக்குச்சென்று தன்னுடைய புலமையால் அங்கேயுள்ள வித்வான்களையெல்லாம் வென்று, மாயாவாதமாகிய தன்னுடைய மதமே மேலானது என்று நிலைநாட்டி நான்காவது ஆச்சிரமத்தை யடைந்து சிஷ்யர்களை மிகுதியும் பெற்று அகங்காரம் மிக்கவனாயிருந்தான். அவன், இராமாநுஜர் என்பவர் மஹாவித்வானாய் விசிஷ்டாத்வைதம் என்னும் வைஷ்ணவமதத்தை எங்கும் பரவச்செய்து பல சிஷ்யர்களையுடையவராய்த் திருவரங்கமாநகரில் வீற்றிருக்கின்றார் எனக் கேள்வியுற்று, அவருடைய தலைமைக்கும் சிறப்புக்கும் பொறாதவனாய் அவரை வெல்லவேண்டும் என்னும் எண்ணத்துடன் தன் சிஷ்யர்கள் புடைசூழத் தான் கற்றுள்ள சாஸ்திரங்களை யெல்லாம் சுமை சுமையாக வண்டியிலேற்றிக்கொண்டு பெரிய மதிப்புடனே மிகவும் விரைவாகத் திருவரங்க மாநகருக்கு வந்து அங்கே இராமாநுஜரைக் கண்டு தன்னோடு வாதப்போர் நிகழ்த்த வருமாறு அறைகூவி யழைத்தான்.

இராமாநுஜர் அவ்வாறே அவனோடு வாதப்போர் புரிவதாக உடன்பட்டு அவனை நோக்கி, நீ தோற்றால் செய்வது என்ன என்று கேட்க, அவன் 'நான் தோற்றால் உமக்கு அடியவனாகி உம் பெயரை வைத்துக்கொண்டு உம்முடைய மதத்தையும் தழுவி நடப்பேன்' என்று கூறி, நீர் தோற்றால் யாது செய்வீர் என்று வினவ, 'நான் தோற்றால் அவ்விதமே செய்வேன்' என்று இராமாநுஜர் கூறப் பின்னர்,

இருவரும் பதினெட்டு நாள் வாதப்போர் புரிவதாக உறுதி செய்துகொண்டு வாதம் நிகழ்த்தத் தொடங்கினார்கள். பதினாறு நாட்கள்வரை ஒருவருக்கும் வெற்றி தோல்விகள் தோற்றாவகை, யானையோடு யானை மோதிக்கொள்வது போலத் தர்க்கம் செய்யப் பதினேழாவது தினத்தின் பகலில், எக்ஞமூர்த்தி தான் கற்ற கல்விகளையெல்லாம் எடுத்துக் கூறித் தனக்கு வெற்றியே தோன்றும்படி சொற்போர் புரிந்து, இராமாநுஜரை நோக்கி "நீர் உமக்கு வல்லமையுண்டானால் நாளை வந்து என்னோடு சொற்போர் புரிந்து வெற்றிகொள்ளலாம்; இன்று நீர் செல்லுவீராக" என்று கூறியனுப்பினன்.

இராமாநுஜர், மிக்க மனவருத்தத்தோடு தம் மடத்திற்குச் சென்று, அங்கே தாம் ஆராதனை செய்து வருகிற பேரருளாளனைத் திருமஞ்சனம் முதலியன செய்து அமுது செய்யப்பண்ணி, அப்பெருமான் திருவடிகளில் வணங்கி எழுந்து நின்று "பேரருளாள, நம்மாழ்வார் முதல் ஆளவந்தார் காலம் வரை யாதோரிடையூறு மெய்தாமல் நிலைபெற்று வந்த இந்த ஸ்ரீவைஷ்ணவ தர்சனம் இப்பொழுது என்காலத்தில் நிலைகுலைய லாவதோ? இதை நிலைநிறுத்துபவரும் நீர்தாம்; நிலைகுலைப்பவரும் நீர்தாம். இதில் எனக்கொன்றும் சுவதந்திரம் இல்லை; தேவரீரே எல்லாவற்றையும் ஏற்று நடத்துகிறவர். நாளை அடியேன் வென்றாலும் தோற்றாலும் வரும் இசையும் வசையும் உம்முடையனவே" என்று கூறிவிட்டு அன்றிரவு தாம் உணவருந்தாமலே கண் வளர்ந்தருளினார். அப்பொழுது அருளாளன் இராமாநுஜர் கனவில் வந்து தோன்றி "உடையவரே, நீர் ஏன் திகைக்கின்றீர்? நீர் நாளை வெல்வது உறுதி. இனி அவன் உமக்குச் சிஷ்யனே. நீர் நாளை உம்முடைய ஆசாரியரான ஆளவந்தா

ளருளிச் செய்துள்ள அகண்ட மாயாவாத கண்டனத்தைச் சொல்லி அவனை வெல்வீராக" என்று கூறி மறைந்து போக, இராமாநுஜர், வைகறையில், ஹரி: ஹரி. என்று ஓதிக் கொண்டே துயிலெழுந்து தமக்குண்டாகிய கனவின் திறத்தில் கனக்க வியப்பெய்திப் பெருமான் அருளிருந்தபடியைக் கொண்டாடி நீராடி நித்தியவிதிகளைச் செய்துமுடித்துத் தம் கடவுளான பேரருளாளனை வணங்கித் தொழுது எக்ஞ மூர்த்தியுடன் வாதஞ்செய்யப் புறப்பட்டார்.

எக்ஞமூர்த்தி என்பவன், ஒருவருடைய நடையுடை பாவனைகளால் குறித்தது உணரவல்லானாகையால், இவர் தோற்றப் பொலிவுடன் எழுந்தருளிவருவதையும் முகத்தில் தோன்றும் மகிழ்ச்சிக் குறிப்பையுங் கண்டு உள்ளந் திடுக்கிட்டு, 'இன்று இவர் நம்மை வென்று விடுவார் என்பதில் ஐயம் சிறிதும் இல்லை. நேற்று இவர் மனம் மடிந்துசென்றதென்ன? இன்று வரும் கம்பீரத் தோற்றமென்ன? ஈசுவரன் செய்த அருளல்லவோ இவர் இவ்வாறு வருவதற்குக் காரணமாயிற்று. இவரை நாம் இனி வெல்லமாட்டோம்' என்று தன்னுட்கருதிச் சடக்கென எழுந்து தன்மேலுத்தரீயத்தை அரையிறகட்டி அவரெதிரே சென்று அவருடைய திருவடிகளில் வணங்கிச் "சுவாமி, நீரே வென்றவர்; நான் உமக்குத் தோற்றேன். தேவரீர் அடியேனுக்கு உண்மைப் பொருளையுபதேசித்து உய்யக்கொண் டருளவேண்டும்" என்று பிரார்த்தித்து நின்றான். இராமாநுஜர், அவன் குணம் செயல் முதலிய எல்லாவற்றிலும் திடீர் என முற்றிலும் மாறுதலடைந்ததைக் கண்டு வியப்பெய்தி, இதுவும் ஈசுவரன் அருளே என அவ்வருளைப் புகழ்ந்து, அவனை நோக்கி, "எக்ஞமூர்த்தி, நீ செய்வது என்ன? இன்றும் நாமிருவரும் சொற்போர் நிகழ்த்துவமே" என்று கூற,

அவன், "சுவாமி, வேண்டாம்; வேண்டாம். அடியேன் எல்லாவற்றையும் அறிந்துகொண்டேன். பெருமாளே தேவரீருடன் பேசி, அடியேனை வெல்லுமுபாயம் அருளிச் செய்யும்போது, அடியேன் செய்யக்கிடப்பது என்னுளது? ஆதலால், அடியேனை நல்வழிப் படுத்தியருள வேண்டுகிறேன்" என்று இரக்கமுண்டாகுமாறு கூறிநின்றான். இராமாநுஜரும் அவனை ஆட்கொள்ளக் கருதினார்.

அப்பால், இராமாநுஜர், அவனுடைய மாயாவாதக் கொள்கையில் சில விரோதங்களை யெடுத்துக் காட்டி அவனுடைய மதத்தைக் கண்டிக்க, அவன், அக்கண்டனமே தகும் என ஒப்புக்கொண்டான். பிறகு அவன் தன்னுடைய ஏகதண்டத்தை முறித்தெறிந்து தனக்கு மந்திரோபதேசம் செய்தருளவேண்டும் என்று இராமாநுஜரை வணங்கிக்கேட்டு நிற்க, அவர் எக்ஞமூர்த்தி சிகையும் எக்ஞோபவீதமும் இல்லாமலிருந்தமையால், அதற்குரிய பிராயச்சித்தத்தைச் செய்வித்துத் திரும்பவும் சிகை எக்ஞோபவீதம் முதலியவற்றைத் தரிக்கும்படி செய்து திரிதண்டம் காவியுடை முதலியவற்றைக் கொடுத்துத் திருமந்திரம் துவயம் சரம சுலோகம் ஆகியவற்றை உபதேசித்து அவன் தமக்கு அருளாளப் பெருமாளால் தரப்பட்டமையாலும் தம்முடைய பெயரை அவன் ஏற்றுக்கொள்வேன் என முதலில் சொல்லியிருந்ததனாலும் அவனுக்கு அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்று பெயரும் கொடுத்துத் தம்முடைய சிஷ்யர்களுள் ஒருவராகச் செய்துகொண்டு, அவருக்கு ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்வியப் பிரபந்தங்களை ஓதும்படி நியமித்துத் 'திருப்பல்லாண்டு' தொடங்கி நாலாயிரத்தையும் ஓதுவித்து மேலும் அறிவிக்க வேண்டிய தத்துவங்களையும் அறிவித்தருளினார்.

பின்னர், இராமாநுஜர், கூரத்தாழ்வான் முதலியாண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஆகிய மூன்று வித்வான்களையும் தம்முடைய தர்சனத்திற்குத் துணையாகப் பெற்று ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை உலகத்தில் பரவச் செய்துகொண்டிருக்கும் காலத்தில், அவருடைய திருவடிகளையடைந்து அவருடைய கோஷ்டியில் சேரவேண்டும் என்று கருதிவந்த அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர்நம்பி முதலானவர்களை அருளாளப்பெருமாளெம்பெருமானாரை யடைந்து உபதேசம் பெற்றுக்கொள்ளுமாறு செய்தார்.

## திருவேங்கடமலைக்குச் சென்று திருமலைநம்பிபால் இராமாயணப்பொருள் கேட்டது.

பிறகு, இராமாநுஜர், சிந்து பூ மகிழுந் திருவேங்கடத்தானையும் திருமலை நம்பியையும் கண்டு வணங்கவேண்டும் என்று கருதியவராய்க் கோயில் சென்று ஸ்ரீரங்கநாதனைத் தொழுது துதித்துத் திருவேங்கடமலைக்குப் போகவேண்டும் என்னும் தம்முடைய எண்ணத்தைத் தெரிவித்து விடைகொண்டு அரங்கமா நகரினின்றும் புறப்பட்டார். செல்லும் வழியில் ஸ்ரீமுஷ்ணம் திருவயிந்தை திருக்கோவல் திருக்காஞ்சி முதலான திவ்விய தேசங்களில் எம்பெருமானை வணங்கி வாயாரவாழ்த்திக்கொண்டு திருவேங்கட மலையையடைந்து அதனைத்தொழுது அம்மலையின் அடிவாரத்திலுள்ள ஊரில் அவர் தங்கியிருக்கும் பொழுது அவ்விடத்து * அரசன் இராமாநுஜர் திருவடிகளில் வந்து

* இவ்வரசனை விட்டலதேவன் என்பார்கள்.

வணங்கித் தன்னையும் சிஷ்யனாகச் செய்துகொள்ள வேண்டும் எனத் தன் எண்ணத்தைத் தெரியப்படுத்தினான். இராமாநுஜர் அவனையும் திருமந்திரம் முதலியவற்றை யுபதேசித்துச் சிஷ்யனாகச் செய்துகொள்ள, அவன் அவ்விடத்தில் இளமண்டியம் என்னும் கிராமத்தை இறையிலியாக அவருக்குத் தானம் செய்தான். இராமாநுஜர் அதனைத் தமது சிஷ்யர்களாயுள்ள நல்லான், அனந்தாழ்வான், எச்சம்பாடி ஜீயர் முதலான முப்பது ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குக் கொடுத்துக் குடியேற்றி அவர்களுக்கு அழகியசிங்கரைத் திருவாராதனம் செய்யும்படி அமைத்துக் கொடுத்தருளினார். அவர் இவர்களுக்கு அமைத்துக் கொடுத்ததுபோலவே மற்றுமுள்ள சிம்மாசனாதிபதிகளுக்கும் அழகிய சிங்கரையே திருவாராதனமாகக் கற்பித்தருளினார். அப்பால் அவர் அங்கே உபய வேதாந்தங்களையும் யாவருக்கும் விளங்க விரித்துரைத்துக் கொண்டிருந்தார்.

இராமாநுஜர், திருமலையின் அடிவாரத்தில் வந்து தங்கியிருப்பதை, இவருடைய சிஷ்யராய் முன்னமே இவரால் அனுப்பப்பெற்றுத் திருமலையில் நந்தவனமமைத்து அப்பனுக்குத் திருமாலை முதலியவற்றைக் கொண்டுபோய்க் கொடுத்துவருகிற அனந்தாழ்வான் முதலானவர்கள் கேள்விப்பட்டு இராமாநுஜர் இருக்குமிடத்திற்கு வந்து, "தேவரீர் மலைமேல் கோயில்கொண்டிருக்கின்ற அப்பனைச் சேவிக்க வரவேண்டும்" என்று பிரார்த்திக்க, முதலில், அவர், "அம்மலை தெய்வத்தன்மை பொருந்தியது. திருமாலுக்குச் சென்றால் குடையாம், இருந்தால் சிங்காதனமாம், நின்றால் மரவடியாம், நீள் கடலுள் என்றும் புணையாம், மணிவிளக்காம், பூம்பட்டாம், புல்கும் அணையாம் அரவாகிய ஆதிசேஷனே அம்மலையாக இருந்து ஸ்ரீநிவாசனைத் தாங்

கிக்கொண்டிருக்கின்றமையால், அம்மலைமேல் ஏறக்கூடாது'' என மலைமேல் ஏற மறுத்தனராயினும், அவர்கள் மிகவும் வற்புறுத்தி ஏறிவரவேண்டும் என்றமையால், "நாம் இம் மலைமேல் ஏறாதுபோனால் நம்மைப் பின்பற்றுகிற இவர் களும் இனி இம் மலைமேல் ஏறமாட்டார்கள். இவர்கள் இங்கே இல்லாதுபோனால் ஸ்ரீநிவாசனுக்கு வழுவிலா அடிமை செய்கிறவர்கள் இல்லாமற் போய்விடுவார்கள். ஆதலால், நாம் மலைமீது ஏறவேண்டும்'' எனத் தம்முள் தீர்மானித்து அவர்களுடன் மலையேறிச் சென்றார்.

இராமாநுஜர் மலைமேல் ஏறிவரும்பொழுது திருமலை நம்பி ஸ்ரீநிவாசனுடைய உடுத்துக் களைந்த பீதகவாடை முதலான பிரசாதங்களைக் கொண்டு வந்து எதிர்கொள்ள, அவர் வணங்கி அவற்றைப் பெற்றுக் கொண்டு தம்முடைய அம்மானாகிய திருமலை நம்பியை நோக்கிச் "சுவாமி, தேவரீரே இவற்றைக் கொண்டுவர வேண்டுமோ? வேறு சிறியா ரொருவரு மிங்கிலரோ?'' என்று உபசார வார்த்தைகள் கூறக் கேட்ட நம்பி, புன்முறுவல் கொண்டு, "அடியேன் சிறியேனல்லனோ? என்னிலும சிறியாரை யான் எங்கே காண் பேன்?'' என்று தம்மை மிகவும் தாழ்மையாகப் பேசிக் கொண்டார். பிறகு இராமாநுஜர் கோயிலினுள்ளே சென்று எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டே திருவணுக்கன் திரு வாசலினுள்ளே போய்க் குலசேகரன் படியைக் குறுகித் திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத் தெம்பெருமானும் ஸ்ரீநிவாசனைத் திருவடிதொழுது எழுந்து நின்று:—

"குலந்தா னெத்தனையும் பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
நலந்தா னொன்றுமிலேன் நல்லதோ ரறஞ் செய்துமிலேன்
நிலந்தோய் நீள்முகில்சேர் நெறியார்திரு வேங்கடவா
அலந்தேன் வந்தடைந்தேன் அடியேனை யாட் கொண்டருளே''

என்றும்

"வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ
சிந்தா மணியே திருவேங் கடம்மேய
எந்தாய் இனியான் உன்னையென்றும் விடேனே"

என்றும்

"அகல கில்லே னிறையுமென் றலர்மேல் மங்கை யுறைமார்பா
நிகரில் புகழா யுலகமூன் றுடையா யென்னை யாள்வானே
நிகரி லமரா முனிக் கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா வடியே னுன்னடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே"

என்றும் புகழ்ந்து துதித்து அப்பெருமானுடைய திருவடிகளை மனத்தில் பதித்துக்கொண்டு சிலநாளங்கிருந்து பிறகு மலையை விட்டுக் கீழே இறங்கித் திருமலை நம்பியின் திருமாளிகையை யடைந்து அங்கே படிகொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பண்பார் சரிதையின் பொருளை வால்மீகி முனிவரே இவர் எனக் கூறும்படியான அத்திருமலை நம்பியிடம் கேட்டுத் தெளிந்துகொண்டார். இராமாயணம் முழுதும் கேட்டு முடிந்தவுடன் இராமாநுஜர் அவரிடம் விடைபெற்று வழியில் திவ்விய தேசத்து எம்பெருமான்களை வணங்கிக் கொண்டு அரங்க நகரத்தை அடைந்து எப்பொழுதும் போல் தர்சனத்தை நடத்திக் கொண்டு எழுந்தருளி இருந்தார்.

இராமாநுஜர் திருவேங்கட மலையில் இருக்கும்பொழுது திருமலை நம்பியின் புதல்வரான பிள்ளான் என்பவரை அவர் இராமாநுஜருக்குச் சிஷ்யராகக் கொடுத்தார். பிள்ளானைச் சிஷ்யராகப் பெற்றுக் கொண்டமையோடு, இராமாநுஜர் தம்முடைய சிறியதாயார் புதல்வராய்த் தம்முடைய அம்மானாகிய திருமலை நம்பியால் சைவ மதத்தை நீங்கி ஸ்ரீவைஷ்ணவ மதத்தைச் சேர்ந்து அவரிடமே தத்துவப்

பொருள்களைக் கேட்டுக்கொண்டு அவருக்குச் சிஷ்யராயிருக்கிற கோவிந்தர் என்பவரை இராமாநுஜர் பெற்றுத் தம்முடன் ஸ்ரீரங்கம் அழைத்து வந்து அவருக்கு நான்காவது ஆச்சிரமத்தை அளித்துத் தம்முடைய திருநாமமாகிய எம்பெருமானார் என்பதன் அடிமுடியை ஒன்று சேர்த்து எம்பார் என்றாக்கி அதனை அவருடைய பெயராகச் செய்து அவருக்கு ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தைச் சிறக்க உபதேசித்தருளினார்.

—— Very bad book

## இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யம் செய்தது.

அப்பால், இராமாநுஜர் ஆளவந்தார் திருவுள்ளக் குறிப்புக்களில் ஒன்றாகிய வியாச சூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைத மதச் சார்பாக ஸ்ரீபாஷ்யம் செய்தலைத் தொடங்கித் தாம பாஷ்யத்தைச் சொல்லிக்கொண்டே வரக் கூரத்தாழ்வானை அதனை ஏட்டில் எழுதிவருமாறு செய்தனர். கூரத்தாழ்வான் சிற்சில இடங்களில் இராமாநுஜர் கூறிவரும் பாஷ்ய வாக்கியங்கள் விசிஷ்டாத்வைதமதக் கருத்துக்கு ஒத்துவாராதபோது, அவருக்காகத் தோன்றி அவர் வேறு விதமாகப் பாஷ்யம் உரைக்கும் வரையும் அதனை ஏட்டில் எழுதாதிருப்பது வழக்கம். பின்னர், அவர் நல்லுரை கூறிய விடத்து முன்போல எழுதிவருவார். இவ்வாறு, ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்தசாரம், வேதாந்த சங்கிரஹம், கீதாபாஷ்யம் முதலானவற்றை இராமாநுஜர் அருளிச் செய்து உலகை வாழ்வித்தருளினார். இங்ஙனம், அவர் ஸ்ரீபாஷ்யம் எழுதத் தொடங்குவதற்குமுன், ஆழ்வான் ஆண்டான், நடாதூராழ்வான், எம்பார், பிள்ளான் முதலானவர்களுடன் காச்மீர தேசத்து ஸ்ரீநகரக்குச் சென்று அங்கே

அரசனுடைய சரஸ்வதி பண்டாரத்தில் உள்ள ஸ்ரீபோதாயன மஹரிஷியால் வியாச சூத்திரத்திற்கு எழுதப்பட்ட விருத்தியென்ற உரையைப் பெற்று அதனைத் தம் சிஷ்யர்களுடன் ஒருமுறை பார்வையிட்டுக்கொண்டு அதன் ஆழ்ந்த கருத்துக்களைத் தழுவியே பிறகு எழுதினார் என்று சொல்லுவார்கள். அப்பொழுது அவர் எழுதின பாஷ்யம் மூன்றில் இரண்டு கூறேயாகும். மற்றொரு கூறு இவரால் பின்னர் எழுதப்பெற்றது. பின்னர் எழுதிய ஒருகூறும் சேர்ந்த பிறகே பாஷ்யம் முற்றுப்பெற்றதாக ஆயிற்று. அது அவர் திருநாராயணபுரம் சென்றுவந்தவுடன் எழுதப்பெற்றது.

உயிர்ப் பன்மைகளெல்லாம் அறிவின்மையாலும் ஒன்றற்கொன்று மாறுபாடான கொள்கைகளாலும் நானே பரம்பொருள், நானே மோக்ஷமார்க்கம் என்று கூறுகிற பல சமயப் படுகுழிகளில் வீழ்ந்து புத்தி தடுமாறி அறிவிழந்து கடைத்தேற மாட்டாமல் கிடப்பதையும்—மஹாவாக்கியங்களின் அர்த்தத்தை மனனம பண்ணுவதாலுண்டாகும் அறிவே மோக்ஷத்தைக் கொடுக்கும் என்கிற மாயாவாதத்தில் மயங்கி மனம் தடுமாறுவதையும—ஞானத்தோடு கூடிய கர்மமே மோக்ஷத்தைக் கொடுக்கக்கூடியது என மோகம் கொண்டிருப்பதையும் இராமாநுஜர் கண்டு, யாவருக்கும் நல்ல ஞானம் உண்டாக்கி அவர்களை நல்வழியில் செலுத்தவேண்டும் என்று கருதி, வேதம் சாஸ்திரம் முதலியவைகள் ஒன்றோடொன்று முரண்பாடின்றி நேரேயமைந்து கிடப்பதை எடுத்து விளக்கி—நித்ய கருமங்களையும் வருணாச்சிரம தருமங்களையும் அவற்றின் பலனைக் கருதாமல் ஈசுவரனையே ஆராதனம் புரிவதாகக் கருதிச்செய்து, வேத சாஸ்திரங்களாலும் நல்லாசிரியராலும் உபதேசிக்கப் பெற்ற ஞானத்தால் சித்து அசித்து என்னும் விசேஷணங்

களுடன் கூடிய பகவானுடைய தன்மையை யறிந்து பக்தி மார்க்கம் பிரபத்தி மார்க்கம் என்பனவற்றால் ஆப்பகவானுடைய உலகத்தை யடைந்து ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதே மோக்ஷம்—என்னும் விசிஷ்டாத்வைத மதக் கருத்து விளங்கும்படி வியாச சூத்திரத்திற்கு உரை கண்டருளினார்.

இவ்வாறு, இராமாநுஜர் வியாச சூத்திரத்திற்குக் கண்ட உரை, அவர் தாமே படைத்து மொழிந்ததன்று. இவருக்கு முன்னால் போதாயனர், திரமிடர், டங்கர் அல்லது பிரமானந்தர், குஹதேவர், பாருசி, ஸ்ரீவத்சாங்கமிசிரர், நாதமுனி, ஆளவந்தார் முதலானவர்கள் கண்ட பொருளையே இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யமாக விரித்துரைத்தார்.

## * இராமாநுஜர் திக்குவிஜயம்.

இராமாநுஜர் ஸ்ரீ பாஷ்யத்தை விளங்க உரைத்துக் கொண்டு அரங்க நகரில் அமர்ந்திருக்கும் நாட்களில், அவருடைய சிஷ்யர்கள் அனைவரும் அவரையடைந்து அவருடைய திருவடிகளில் வணங்கி நின்று "சுவாமி, தேவரீர் இவ்விடத்திலுள்ளவர்களைத் திருத்திப் பணிகொண்டருளியது போலவே மற்றெல்லாத் திவ்விய தேசங்களையும் அவற்றுள் வாழ்வாரையும் திருத்திப் பணிகொண்டருள வேண்டும். அதனால் இவ்விசிஷ்டாத்வைதமதம் உலகெங்கும் பரவி ஓங்கிநிற்கும். தேவரீர் திருவருள் பாலிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தனர். இராமாநுஜர் அவர்கள் கூறியது ஒக்கும் என்று உட்கொண்டு அப்பொழுதே கோயில் சென்று அரங்கனை வணங்கி விடைபெற்றுத் தம்முடைய

* இராமாநுஜர் திக்குவிஜயம் பலவாறு கூறப்படும்.

சிஷ்யர்களுடன் எல்லாத்திவ்விய தேசங்களுக்குஞ் சென்று வரப் புறப்பட்டார்.

முதலில், அவர் திருக்குடந்தை முதலான சோழ நாட்டுத் திருப்பதிகளில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற திருமாலைக் கோலத்திருமாமகளோடும் சேர்ந்திருக்கும் தன்மையைக் கொண்டாடி வணங்கிப் பின்னர்ப் பாண்டி நாட்டுத்திருப்பதிகளில் சிலவற்றை வணங்கிக்கொண்டே திருக்குறுங்குடி என்னும் திருப்பதியை அடைந்தனர். அங்கே, அவர் அவ்விடத்து எம்பெருமானை வணங்கிநிற்கும்பொழுது, அப்பெருமான் இராமாநுஜரை நோக்கி "இராமாநுஜரே, நாம் இவ்வுலகத்தில் எத்தனையோ பிறவிகள் எடுத்து இவ்வுலகினரைத் திருத்தப் பார்த்தவிடத்தும் அவர்கள் திருந்தாமல் தீ நரகுக்கே ஆளாகித் திரிந்தார்களே. அத்தன்மையோரை நீர் எவ்வாறு திருத்தியாளாக்கினீர்? இதனை எனக்குத் தெரிவிப்பீராக" என்றுகேட்க இராமாநுஜர், "பெருமானே, அடியேன் திருத்தியவகையைத் தெரிவிக்கின்றேன். ஆனால், தேவரீர் அதனைக் கேட்குமுறைப்படி கேட்க வேண்டுமே" என்றுகூற, உடனே அத் திருக்குறுங்குடி நம்பி, இராமாநுஜருக்கு உயர்ந்ததோர் ஆசனமிடுவித்துத் தாம் கீழே பரப்பியுள்ள அர்த்தன கம்பளத்தின் மீதிருந்து கேட்டருள, இராமாநுஜர், அவ்வாசனத்தின்மீது தம்முடைய ஆசாரியராகிய பெரிய நம்பியே இருந்து கூறுகின்றார் எனத் தம்மனத்துள் கருதிக்கொண்டு தாம் கீழே நின்று குறுங்குடி நம்பியினுடைய திருச்செவிகளில் திருமந்திரத்தை உச்சரித்துக் காட்டினார். காட்டித் தாம் இம்மந்திரத்தையே யாவருக்கும் உபதேசிக்கிறதாகவும் அதனால் யாவரும் ஈடேறுகிறார்கள் என்றும் கூறினார். அதனால் மிகவும் மகிழ்ச்சி

கொண்ட குறுங்குடி நம்பி இராமாநுஜரைக் கொண்டாடி வீதிவலம் செய்விக்குமாறு அர்ச்சகர் முதலானவர்களுக்குக் கட்டளையிட்டருளினர். திருக்குறுங்குடி நம்பி இராமாநுஜரிடம் மந்திரோபதேசம் பெற்றுக்கொண்ட காரணத்தால் ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்று அன்று முதலழைக்கப் பெறுவாராயினர்.

அப்பால், இராமாநுஜர் திருக் குருகூர் என்ற ஆழ்வார் திருநகரிக்குச் சென்று:—

"இதுவோ திருநகரி யீதோ பொருநல்
இதுவோ பரமபதத் தெல்லை—இதுவோதான்
வேதந் தமிழ்செய்து மெய்ப்பொருட்கு முட்பொருளாய்
ஓதுஞ் சடகோப னூர்"

எனனும பாடடால அவ வூரைப புகழ்ந்து கொண்டாடி, அங்கே, ஆழ்வாரையும் ஆதிநாதனுகிய பொலிந்து நின்ற பிரானையும் அடிவணங்கித்துதித்து ஆழ்வாருடைய திருவடி நிலையை ஸ்ரீராமாநுஜம் என்று தம்பெயரால் வழங்கும்படி செய்து, தெளியாத மறை நிலங்களெல்லாம் தெளியும்படி வேதந் தமிழ்செய்த மாறனிடத்துள்ள பக்தியினுலும், ஆளவந்தார் திருவுள்ளக் கருத்துள் ஒன்ருகிய சடகோபனிடத்துச் செய்ந்நன்றி யறிதலை நிறைவேற்றவேண்டும் என்பதனுலும் திருமலை நம்பியின் திருக்குமாரராய்த் தமக்கு உண்மையான சிஷ்யராய் எல்லாக் கலைகளையும் நன்குணர்ந்தவராயுள்ள பிள்ளான் என்பவரைத் தம்முடைய ஞான புத்திரராகக் கொண்டு அவரைக் குருகூர் நம்பியின் பெயரால் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்று அழைப்பாராயினர். இதனுல் இராமாநுஜர் ஆளவந்தாருடைய இரண்டாவது உள்ளக்கருத்தை நிறை வேற்றியவராயினர்.

அப்பால், அவர் திருமாலிருஞ்சோலைமலை சென்று அவ்விடத் தெம்பெருமானை வணங்கி வாழ்த்திச் சில நாட்கள் அங்கே தங்கியிருந்தார். அவர், அப்பொழுது, நாச்சியார் அருளிச்செய்த திருப்பாவையையும நாச்சியார் திருமொழியையும் ஓதிக்கொண்டுவரும்பொழுது திருமொழியில் "நாறு நறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்குநான், நூறுதடாவில் வெண்ணெய்வாய் நேர்ந்து பராவிவைத்தேன், ஆயிரம் தடாநிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்" என்ற பாசுரத்தையோதும்பொழுது, அதன் பொருளை அவர் சிந்தித்து, நாச்சியார் வாய்நேர்ந்து வைத்ததை நிறைவேற்ற எண்ணம்கொண்டு, நூறுதடா வெண்ணெயும் ஆயிரம் தடாநிறைந்த அக்காரவடிசிலும் குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழுகமலப் பூ அழகராம் சுந்தரத்தோளுடையானுக்குச் செய்தமைத்து வைத்தார்.

பிறகு, அவர் அங்கு நின்றும் புறப்பட்டுக் கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர் சோதிமணிமாடம் தோன்றுமூர் நீதியால் நல்லபக்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர் வேதக்கோனூர் ஆம் வில்லிபுத்தூரையடைந்து வடபத்திர சயனனை வணங்கி ஆலினிலையாய் அருள் எனத் துதித்துப் போற்றிப் பின்னர், ஆண்டாளையும் அரங்கமணவாளராம் மன்னனாரையும் புள்ளரையனும் கருடாழ்வாரையும் பரத்துவ நிர்ணயம் செய்து பரமனுக்குப் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாரையும் திருவடிகளில் வணங்கி:—

"மெல்லிய பஞ்சடி யுந்துவ ராடையு மேகலையும்
வல்லியை வென்ற மருங்குமுத் தார வனமுலையும்
சொல்லியல் வன்மையும் வில்லிபுத் தூரம்மை தோளழகும்
முல்லையை வென்ற நகையுமெல் லாமென்றன் முன்னிற்குமே"

என்றும்

"வாழி திருப்பாவை பாடும் மடப்பாவை
வாழி யரங்க மணவாளர்—வாழியவன்
மாடுநிற்கும் புள்ளரையன் வாழி பெரியாழ்வார்
பாடுநிற்கும் வேதாந்தப் பா"

என்றும் புகழ்ந்து துதித்தனர். அப்பொழுது, ஆண்டாள், தாம் தம் குலமுதல்வனுக்கு நேர்ந்து வைத்ததை இவர் நிறைவேற்றிவைத்தார் என்று மிக உகந்து நம் கோயிலண்ணரே என்று அழைத்து அவருக்கு மரியாதை செய்வதற்காகத் தம்மிடத்திலிருந்து நாலேந்தடி நடந்து வந்தனர். அதனால் இராமாநுஜர் கோயிலண்ணர் என்று வழங்கப் பெறுவாராயினர்.

அப்பால், இராமாநுஜர் திருக்கோட்டியூர் திருமெய்யம் முதலான திருப்பதிகள் சென்று திருமாலை வணங்கிப் பிறகு திருவனந்தபுரம் முதலான மலை நாட்டுத்திருப்பதிகளையும் வணங்கிக்கொண்டே வடநாடு சென்று அவ்விடத்துள்ள திவ்விய தேசங்களையும் வணங்கி அவ்விடங்களையெல்லாம் சீர்திருத்தி வேற்றுச்சமயத்தவர் கொள்கைகளையெல்லாம் வேரறுத்துத் தம்முடைய மதத்தை அங்கங்கே நிலைநாட்டி வரும்பொழுது * பட்டி மண்டபத்தேயுள்ள சரஸ்வதி பண்டாரத்தையடைந்த காலையில், அவ்விடத்துள்ள சொற்கிழத்தியாகிய சரஸ்வதிதேவி இராமாநுஜரை நோக்கிப் "பெரியோரே, நீர் மஹாவித்வானாகவும் வேதம் முதலியவற்றிற்கும் வியாச சூத்திரத்திற்கும் உரையெழுதிய மாண்பினராகவும் விளங்குகின்றீர்; ஆதலின், "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷிணீ" என்னும் வேத வாக்கியத்திற்குப் பொருள்கூறிக் காட்டீர்" என்று வினவ, அவர், "சூரிய மண்டலத்தின் நடுவில் விளங்

* இது எவ்வூரிலுள்ளது என்று தெரியவில்லை.

குகின்ற மஹாபுருஷனுடைய கண்கள் சூரியனால் அலர்த் தப்பெற்ற புண்டரீக மலர்போல விளங்குகின்றன" என்று பொருள் கூறிக்காட்ட, சரஸ்வதிதேவியானவள் அப் பொருளைக்கேட்டு மிகவும் கொண்டாடி "இதற்கு முன்னர் இங்குவந்த மஹாவித்வான்கள் அனைவரும் இந்த வாக் கியத்திற்கு இவ்வாறு நற்பொருள கூறாமல் வேறே இழி பொருள் கூறிவந்தார்கள். நீர் கூறிய பொருளே இதற்குத் தக்க பொருளாகும்; ஆதலின் நீரே பிரமசூத்திரத்திற்குப் பாடியம் செய்யத்தக்கவர். உமக்கே பாஷியகாரர் என்னும் பெயர் பொருந்துவதாகும். பாஷியகாரரே, நீர் இந்த ஹயக்கிரீவரை வைத்து ஆராதனம் பண்ணி வருவீராக. உம்மை அறிவினால் வெல்லும் ஆற்றலுடையார் ஒருவரும் இவ்வுலகில் இலர்" என்று கூறி ஹயக்கிரீவரையும் கொடுத் துப் பாஷ்யகாரர் என்னும் சிறப்புப் பெயரையும் ஈந்தரு ளினாள். பிறகு அவர் அங்கே அரசர்களையும் மற்றுமுள் ளவர்களையும் தமக்குச் சிஷ்யராகச் செய்துகொண்டு ஸ்ரீ புரு ஷோத்தமத்தில் ஜகந்நாதனையும் ஸ்ரீ கூர்மத்தில் கூர்மநாத னையும் அஹோபிலத்தில் ஸ்ரீலக்ஷ்மீநரஸிம்மனையும் தொழுது துதித்துப் பிறகு திருவேங்கடமலைக்குத் திரும்பவும் எழுந் தருளி வந்தார். அங்கே சில சைவர்கள், அவ்வூரிலுள்ள வைணவர்களுடன் "இம்மலையில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி எங்கள் சமயத்துக் கடவுளாகவேண்டும். ஆழ்வார் களில் ஒருவரும், "தாழ்சடையும் நீண்முடியும்" என்னும் பாசுரத்தினால் எங்கள் கடவுளையே அங்கே துதிக்கிறார். ஆதலின் இக்கடவுளும் இக்கோவிலும் எங்களுக்கே உரிய தாகும்" என்று வாது நிகழ்த்த, அப்பொழுது இராமாநுஜர் சைவரும் வைணவரும் ஆகிய இருபக்ஷத்தாரிலும் சிறந்த பெரியோர்களை யழைத்து "நாம் ஏன் வீணே பிணங்கிக் கொண்டிருக்க வேண்டும்? நாம் அவ்விருகடவுளர்களு

டைய சின்னங்களாகிய மான் மழு முதலியவற்றையும் திரு வாழி திருச்சங்கங்களையும் அம்மூர்த்தியின் திருமுன்னர் வைத்துச் 'சுவாமி, தேவரீர் இவற்றுள் ஏதாவது ஒரு கடவுளுக்குரிய சின்னங்களை யெடுத்தணிந்து கொண்டு எங்களுக்கு உண்மையை விளக்கி உய்யக்கொண்டருள வேண்டும்' என்று பிரார்த்திப்போம். அவர் அதற்குமேல் செய்வது கொண்டு தீர்மானிப்போம்" என்றுகூற, அவர்கள் அதற்கு இணங்கினார்கள். இராமாநுஜர் முன் கூறியவாறே கடவுளர் இருவருடைய சின்னங்களையும் கோயில் கர்ப்பக்கிரஹத்துள் சுவாமி அருகில்வைத்துக் கதவைச் சார்த்தித் தாளிட்டு நன்றாகப் பூட்டி இருபக்ஷத்தாரும் தங்கள் தங்களுடைய முத்திரைகளைப் பதித்து மறுநாள் வந்து திறந்து பார்ப்பதாகக் கூறிக்கொண்டு தத்தமிடம் சென்றனர்.

மறுநாள் பொழுது விடிந்தவாறே, ஸ்ரீ இராமாநுஜர் அவர்கள் யாவரையும் அழைத்துக்கொண்டு கோயிலுக்குப் போய் திருக்காப்பை நீக்கி உள்ளே சென்று பார்க்கும பொழுது, சங்கு சக்கரங்களை வேங்கடத்தப்பன் வேணவாவுடன் விரும்பித் தம் கைகளில் தரித்துக்கொண்டு மான் மழு முதலிய சிவசின்னங்களை அநாதரவுசெய்து பொலிந்து நிற்பதைக்கண்டு யாவரும் கோவிந்தா என்று கூறிக் குணலையிட்டுக் கூத்தாடினார்கள். பிறகு இராமாநுஜர் திருவேங்கடத்தப்பனிடம் விடைகொண்டு மலையின்றும் இறங்கிக் காஞ்சீபுரம் வீரநாராயணபுரம் முதலிய திவ்விய தேசங்கள் வழியாக ஆராமம் சூழ்ந்த அரங்கநகர் வந்தமர்ந்தருளினார். அப்பொழுது அரங்கனுக்கு அநனமர் தொண்டு செய்து கொண்டிருக்கும் அடியார்கள் அனைவரும் இராமாநுஜரிடம் வந்து அவர் திக்குவிஜயம் செய்து திரும்பியதைக் கொண்டாடி மகிழ்ந்தார்கள்.

---

## இராமாநுஜர் தொண்டனூர் சென்றதும் விஷ்ணுவர்த்தனனை ஆட்கொண்டதும்.

இராமாநுஜர் திக்குவிஜயம்செய்து வந்து ஸ்ரீரங்கத்தில் வீற்றிருக்கும்பொழுது, அவருக்கு, நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி என்னும் பிரபந்தத்திற்கு உரைகண்டருளவேண்டும் என்கிற எண்ணம் உண்டாயிற்று. உண்டாகவே, அவர், தாம் அவ்வாழ்வார் திருநாமத்தை வைத்துத் தமக்கு ஞானபுத்திரராகக் கொண்டருளிய திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்பவரை அக்காரியத்தைத் தலைக்கட்டுமாறு நியமித்தார். பிள்ளானும் அப்பேறு தமக்குக்கிடைத்ததே என்று மிக்க மகிழ்ச்சியுடன் திருவாய்மொழி ஆயிரத்திற்கும் ஓர் சிறந்த உரை இயற்றியருளினார். அதற்கு ஆறுயிரப்படி வியாக்கியானம் என்று பெயர். இவ்வாறு இராமாநுஜர் பிரமசூத்திரத்திற்குத் தாம் பாஷியம் செய்தும், நம்மாழ்வாரிடத்து நன்றியைப் பிள்ளானுக்கு ஆழ்வார் பெயர் வைத்து அவ்வாழ்வார்செய்த திருவாய் மொழிக்குப் பிள்ளானால் உரைசெய்வித்தும் ஆளவந்தாருடைய உள்ளக் கருத்துக்களுள் இரண்டை நிறைவேற்றிவைத்தார்.

அப்பொழுது இராமாநுஜருடைய சிறந்த சிஷ்யரான கூரத்தாழ்வானுக்கு, அவருடைய மனைவி ஆண்டாளிடம் ஸ்ரீரங்கநாதனுடைய திருவருளால் இரண்டு புதல்வர்கள் தோன்றினார்கள். இராமாநுஜர், ஸ்ரீ விஷ்ணுபுராணம் செய்தருளிய பராசரமஹரிஷியிடத்து நன்றி யறிவைக் காட்டுதலாகிய ஆளவந்தாருடைய மூன்றாவது திருவுள்ளக்கருத்தை நிறைவேற்றக்கருதி, அவர்களுள் முதற்பிறந்த புதல்வருக்குப் * பராசரர் என்று பெயர் வைத்தருளினார். மற்றவருக்கு

* பராசரபட்டர் என்றும் வேதவியாசபட்டர் என்றும் பெயர் வைத்ததாகச் சிலர் சொல்லுவர்.

ஸ்ரீராமபிள்ளை என்று பெயரிட்டார். அக்கூரத்தாழ்வானு டைய குமாரர்கள் இருவரையும் இராமநுஜர் எம்பாரிடம் ஒப்பித்து 'நீரே இவர்களுக்குக் கலையிற்றுவதற்கும் இவர் களுக்குத் திங்கு நேராமல் காப்பதற்கும் உரியவர்' என்று நியமித்தருளினார்: அவ்வாறே, எம்பார், பராசரபட்டரை யும் ஸ்ரீராமபிள்ளையையும் செய்து வந்தார்.

அக்காலத்தே சோழநாட்டை முதலாம் குலோத்துங்க சோழன் என்பவன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன், தாய் வழியில் சோழவரசன்; தந்தை வழியில் சளுக்கிய அரசன் ஆவான். அவனுக்கு இராஜதானி கங் கைகொண்ட சோழபுரமாகும். அவன் ஏதோ சிலருடைய துர்ப்போதனையால் *சிவனே மேலான தெய்வம்; அவ னுக்கு மேற்பட்ட தெய்வம் கிடையாது'' என்று எழுதப் பட்ட ஒரு செப்புப் பட்டயத்தில், எல்லா மதத்துப் பெரி யோர்களையும் கையெழுத்திடுமாறு கட்டளை யிட்டான். அவர்கள் அவனுடைய அதிகாரத்துக்கு அஞ்சியும் பொரு ளுக்குப் பொருந்தியும் அதில் அவ்வாறே கையெழுத்திட்ட னர். அதுபோலவே, ஸ்ரீவைஷ்ணவ சமயத்துப் பெரியோ ராகிய, இராமாநுஜரையும் அதில் கையெழுத்திடச் செய்ய வேண்டும் என்று அவ்வரசனுடைய அமைச்சர்களில் ஒரு வனாகிய நாலூரான் என்பவன் அரசனைத் தூண்டினான். அரசனும அதற்கு உடன்பட்டு இராமாநுஜரைத் தன் னவைக் களத்திற்கு அழைத்து வருமாறு ஏவலாளர் சிலரை யனுப்பினான்.

அவர்கள் அவ்வாறே ஸ்ரீரங்கம் சென்று இராமாநுஜ ருடைய மடத்தை யடைந்து அங்கு நின்றாரிடம் இராமாநு

* 'சிவாத பரதரம நாஸ்தி' என்பது இதற்கு வடமொழி வாக்கியம்.

ஜரை அரசன் அழைத்துவரச் சொன்னான்; அவர் யார்? எங்குளார்? என்று வினவ, அவர்கள் அத்தூதர்களுடன் வார்த்தையாடி அரசன் அழைத்து வரச் சொன்ன காரியம் இன்னது என்பதை யறிந்து கொண்டு உள்ளே சென்று அங்கே இருந்த கூரத்தாழ்வானிடம் அரசன் தூதர் வந்திருப்பதை யறிவித்தார்கள். கூரத்தாழ்வான் முற்று முணரவல்ல அறிவுடையராதலினால், மேல் நடக்க இருப்பது இன்னது என்று அறிந்தவராய்த் தம்முடைய ஆசாரியர் அரசனவைக்குச் சென்றால் நேருவது தீங்கே யென்று தெரிந்து தம் ஆசிரியருக்காகத் தாமே செல்வதாகக் கருதித் தம் உடை முதலியவற்றைக் களைந்து வைத்துவிட்டுத் தம் ஆசிரியர் படிகளைந்து வைத்துள்ள திரிதண்டம் காவியுடை முதலிய துறவிகளுக் குரியவற்றைத் தாம் எடுத்தணிந்தவராய்த் தம்முடன் வந்த பெரிய நம்பியையும் கூட்டிக் கொண்டு அரச னவைக்களத்தை யடைந்தார்.

அரசனுடைய தூதர் வந்த வேளையில் இராமாநுஜர் நீராடிக் கொண்டிருந்தார். அதனால்தான் அவர் தம் உடை முதலியவற்றைக் களைந்து வைத்திருந்தார். அவற்றை அப்பொழுது கூரத்தாழ்வான் அணிந்து கொண்டு புறப்படுவதற்கு எளிதாக இருந்தது. இராமாநுஜர் நீராடிய பிறகு உடுத்துக் கொள்வதற்குக் காவியுடை முதலியவற்றைத் தருக எனத் தம்முழையரைக் கேட்க, அவர்கள் கூரத்தாழ்வான் எடுத்து அணிந்துகொண்டு அரசவைக்குச் சென்றுள்ள வரலாற்றைக் கூற, அவர் கேட்டு, ஆழ்வானுக்கும் நம்பிக்கும் அரசனால் யாது தீங்கு நேருமோ என்றஞ்சி நடுங்கி உள்கரைந்து வருந்தினர். அப்பொழுது முதலியாண்டான் முதலானவர்கள் இராமாநுஜரை வணங்கிச் "சுவாமி! இவ்வரசன் நம் மதத்தை மிகவும் வெறுப்பவன்.

ீ தேவரீர் இங்கிருப்பின் அவனால் தீங்கு நேருவது திண்ணம். தேவரீருக்காக ஆழ்வானும் நம்பியும் சென்றதே சரி. தேவரீருக்கு வரும் தீங்கை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள். தேவரீருக்குத் தீங்கு வந்தால் ஸ்ரீவைஷ்ணவ சமயமே அடியுடன் தொலைவது திண்ணம். ஆதலின் தேவரீர் இவ்விடத்தில் இனி இராமல் எங்கேயாவது சென்று வாழ்வதே செய்யத்தக்க உபாயமாம்" என்று அவரை ஸ்ரீரங்கத்தைவிட்டு வெளியேறுமாறு வேண்டிக் கொண்டார்கள். இராமாநுஜரும் அப்பொழுது அவர்கள் கூறிய காரியமே செய்யத் தக்கது என்று கருதிக் காவியுடைக்கு மாறாக வெள்ளையாடைகளை உடுத்துக்கொண்டு தம் வேடம் மாறிக் கோயிலில் சென்று "அரங்க நகரப்பனே! இப்பொழுது அரசன் கொடியோனாயிருத்தலின், அடியேன் இங்கிருத்தல் கூடாது. நீரே உம்மையும் உம்முடைய தர்சனத்தையும் இப்பொழுது காப்பாற்றிக் கொள்ள வேண்டும்" என்று கூறி வணங்கிவிட்டு அங்கு நின்றும் மேற்றிசை நோக்கித் தம்முடைய சிஷ்யர்கள் சிலருடன் புறப்பட்டுச் சென்றார்.

இராமாநுஜர் மேற்கே சென்றவுடன் ஆழ்வானையும் நம்பியையும் கூட்டிச் சென்ற தூதுவர்கள் அவ்விருவருள் இராமாநுஜர் இல்லை என்பதை யறிந்து, அவரை யழைத்து வருமாறு திரும்பவும் அவர் மடத்திற்கு வந்து பார்க்க, அவரைக் காணாமையால், அவர் மேற்றிசையிற் சென்றார் என்பது கேட்டு அவர் சென்ற வழியே பின் தொடர்ந்து சென்றார்கள். இராஜதூதர் தம்மைப் பின் தொடர்ந்து வருவது தெரிந்த இராமாநுஜர், அவர்கள் வரும் வழியில் திருமாலை நினைத்துச் சிறிது மணலைத் தூவி 'அவர்கள் வழி தெரியாமல் திகைக்கவேண்டும்' என்று கூறினார். இராஜதூதர்கள் அவர் தூவிய மணலை மிதித்தவுடன் மதிமயங்கித்

திகைத்து மேற்போகத் தெரியாமல் தவித்து மீண்டு தம் மூர் போய்ச் சேர்ந்தார்கள்.

அவர்கள் மீண்டு சென்ற பிறகு, இராமாநுஜர், தாம் போகும் வழியே அச்சமற்றவராய் மேலே தொடர்ந்து செல்ல, அங்கே சில வேடர்களுடைய குடிசைகளுக்கு அருகில் வந்த பொழுது எங்கும் இருள் சூழ்ந்து மழையும் பெய்ய அதனால் நனைந்தும் வழி தெரியாமலும் நிற்குங் கால் சிறிது தூரத்தில் நெருப்பின் ஒளியைக் கண்டு அவ்விடம் நோக்கிப் போக அங்கே வேடர்களையும் அவர்களுடைய குடிசைகளையும் கண்டு அவர்களை நெருங்கிப் பக்கத்திலுள்ள ஊருக்கு வழி எது என்று வினவ, அவ் வேடர்கள் அவர்களை நெருங்கி வெளிச்சம் செய்து அவர்களை நன்றாய் உற்று நோக்கி அவர்கள் பெரியோர்கள்; வழிப்போக்கர்கள் என்பது தெரிந்து அவர்களைத் தம் குடிசைகளுக்கு அழைத்துச் சென்று நெருப்பு மூட்டி அதில் குளிர்காய வைத்து ஈர உடைகளையும் நன்றாயுலர்த்தி உடுத்துக்கொள்ளக் கொடுத்தனர். அப்பால் அவர்கள் வந்தவர்களை நோக்கி, நீங்கள் எவ்விடத்தினின்றும் வருகின்றீர்கள்? என்று வினவ, அவர்கள் தாங்கள் ஸ்ரீரங்க நகரத்திலிருந்து வருவதாகக் கூறினார்கள். "அங்ஙனமாயின், அங்கே இராமாநுஜர் இனிதே வீற்றிருக்கின்றாரோ?" என்று வேடர்கள் வினவ, இராமாநுஜ சிஷ்யர்கள், "வேடர்களே, நீங்கள் இராமாநுஜரைப் பற்றி வினவுகின்றீர்களே! நீங்கள் யாவர்? நீங்கள் இராமாநுஜரையறிந்தவாறு எப்படி? என்று கேட்க, அவர்கள், "ஐயன்மீர், அடியோங்கள் திருமலை நல்லான் சக்கரவர்த்தியின் அடிமைகள்; அவர் எங்களுக்கு உறுதிப் பொருளை உபதேசிக்கும்பொழுது ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் சிறந்த ஆசாரியர் ஸ்ரீஇராமாநு

ஜரே; ஆதலினால் நீங்கள் 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்றிருங்கள் என உபதேசித்துள்ளார். நாங்களும் அன்று தொட்டு எம்பெருமானாரையே எல்லாமாக நினைத்துக் கொண்டிருக்கின்றோம். அங்ஙனமாக, ஐந்தாறு நாட்களுக்கு முன் ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவர் ஒருவர் இங்கே எழுந்தருள அவரிடத்தில் ஸ்ரீ இராமாநுஜராம் எம்பெருமானாருடைய தன்மையை நாங்கள் வினவ, அவர்கள் 'சோழவரசன் செய்த இடையூற்றால், அவர் இங்கே மேற்றிசைக்கு வந்து விட்டார்; நாங்கள் அவரைத் தேடிக் கொண்டு வருகிறோம். அவரைக் காணவில்லை' எனக் கூறினார்கள். அதனைக்கேட்ட நாங்கள் திடுக்கிட்டு இராமாநுஜருக்கு யாது தீங்கு வந்து விட்டதோ என்னும் வருத்தத்தினால் அன்றுமுதல் இன்றளவும் உணவும் உட்கொள்ள மனமில்லாமல் தவிக்கின்றோம்; இப்பொழுது நீங்கள் அங்கேயிருந்து வருவதாகக் கூறினமையால் உங்களிடத்தில் அவரைப்பற்றி உசாவினோம்'' என்று கூறினார்கள்.

அப்பொழுது இராமாநுஜருடைய சிஷ்யர்கள், "வேடர்களே, இவர் தாம இராமாநுஜர் என்னும் ஆசிரியர்'' எனக் காட்டக் கண்ட அவ் வேடர்கள் இராமாநுஜருடைய திருவடிகளின்மிசை விழுந்து தொழுது விம்மி விம்மி அழுது, 'சுவாமி, அடியோங்களை உய்யக் கொண்டருள வேண்டும். தேவரீரை நேரே தரிசிக்கும்படியான பெரும்பேறு எங்களுடைய ஆசாரியரருளால் அடியோங்களுக்குக் கிடைத்துள்ளது' எனப் புகழ்ந்து கூறித் தேனையும தினையையும் கொணர்ந்து வைத்து அவற்றை உணவேற்றருள வேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். இராமாநுஜருடைய அடியார்கள், அவற்றை முறைப்படி உணவாக்கியுண்டு உட்களித்திருந்தனர். அப்பால் இராமாநுஜர் அவ்வேடர்களில் ஒருவனை

யும் தம்முடைய சிஷ்யர்களில் ஒருவரையும் தம்முடைய க்ஷேமத்தை ஸ்ரீரங்கத்திலுள்ளார்களுக்குத் தெரிவித்தும் ஆழ்வான் நம்பி ஆகிய இவ்விருவருடைய க்ஷேமத்தைத தெரிந்து கொண்டும் வருமாறு கூறி அனுப்பினர்.

அவ்வாறு, இராமாநுஜர் அவர்களை அனுப்பிவிட்டுச் சில வேடர்களை வழிக்காட்ட அழைத்துக் கொண்டு கொள்ளைக்களம் (கொள்ளே காலம்) என்னும் ஊருக்கு அருகிலுள்ள ஒரு வேடனுடைய இருப்பிடத்தை வந்தடைந்தார். அவ்விடத்திற்குடைய வேடன் மாலை வேளையில் வீட்டிற்கு வந்து, பட்டினி கிடக்கின்ற அவர்களுக்கு உணவளிக்க வேண்டுமே என்று கருதிப் பக்கத்திலுள்ள கொள்ளைக்களம் என்னும் ஊரில் தனக்குப் பழக்கமுள்ள ஒரு பிராமணன் வீட்டிற்கு அவர்களை உபசாரத்துடன் அனுப்ப, அவர்களும் அவ்விடத்தில் சென்றிருந்தார்கள். அவ் வீட்டிற்குரிய பிராமணப் பெண், வந்திருக்கின்றவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களாக இருக்கக் கண்டு மகிழ்கொண்டு தன்னுடைய வீட்டில் அவர்கள் உணவருந்த வேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். முதலில் அவர்கள் தங்களுக்கு உணவு வேண்டாம் என்று கூறி மறுக்க, அப் பெண்மணி மிகவும் தாழ்மையுடன் அவர்களை நோக்கி, "அன்புடையவர்களே, நீங்கள் ஸ்ரீவைஷ்ணவர்களாக இருப்பதால் வரன்முறை யறியப்படாத இவள் வீட்டில் எவ்வாறு உணவருந்தலாம் என்று நினைக்கலாம். தேவரீர்களைப் போலவே அடியேனும ஒரு வைஷ்ணவப் பெண் பிள்ளை யாவேன். எனக்கு ஆசாரியர் ஸ்ரீ இராமாநுஜரே யாவார். அடியேன் சில்லாண்டுகளுக்கு முன்னர், இவ்விடத்தில் ஒரு பெரிய வற்கடம் உண்டான பொழுது, பிழைப்பிற்காக என் கணவருடன் ஸ்ரீரங்கம் சென்றிருந்தேன். அங்கே இராமாநுஜருடைய பெருமை

யைக் கண்டு அவர் திருவடிகளில் வீழ்ந்து அடியேனுக்கு மந்திர உபதேசம்செய்து வாழ்வித்தருளுவீர் என்று வேண்டிக் கொண்டேன். அப்பெரியார் எளியேனுடைய வேண்டுகோளை நிறைவேற்றி அடையாளமாக அவருடைய ஸ்ரீ பாதுகைகளையும் சிறக்கவருளிச் சிறியேனுக்குக் கொங்கு பிராட்டி என்று பெயரும் இட்டருளினார். ஆதலின் தேவரீர்கள் சிறிதும் ஐயம் கொள்ளாமல் எளியேன் சிறுகுடிலில், உணவேற்றருள வேண்டும். வேறு நினைத்தல் கூடாது'' என்று விவரமாகக் கூற, அவர்கள் அதனை இராமாநுஜருக்கு அறிவிக்க, அவர், "இவள் கூறுவது உண்மையே; ஆயினும் நெடுநாட்களாயினமையானும், வேறு தேசமாக இருத்தலானும் அவளுடைய ஒழுக்கத்தையும் ஆராய்வாம். எல்லாவற்றிற்கும் நீங்கள் அப்பெண்ணை உணவமைக்குமாறு கூறி அதன்மேல் அவளுடைய நடத்தையை ஆய்ந்து வந்துரைப்பீர். பின்னர்ச் செய்யத்தக்கதைத் தெரிவிக்கின்றேன்.'' என்று உரைத்தருள, அவர்களும் அவளிடம் உணவமைக்குமாறு உரைத்திட்டார்கள்.

அப் பெண் தன் வீட்டினுள்ளே சென்று உணவமைத்து இராமாநுஜருடைய பாதுகைகளுக்கு அதனை நிவேதித்து அவர்களை உணவருந்த வந்தழைத்தனள். அப்பொழுது அவள் செய்தவற்றை யெல்லாம் மறைவாக இருந்து பார்த்த ஒருவர், இராமாநுஜரிடத்தில், "சுவாமி, அப் பெண் செய்தனவெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவ மரபிற்கொத்தனவாயிருந்தன. ஆனால் ஏதோவொன்றை வைத்து வணங்கினாள். அது இன்னது என்றறியேன். மற்றவைகள் எல்லாம் ஒத்தேயிருந்தன.'' என்று தெரிவிக்க, இராமாநுஜர் அவ்வம்மையை யழைத்து "நீ செய்தது என்? என்று கேட்க, அவள் தான் உணவாக்கியதும், அதனை இராமாநு

ஜர் பாதுகைகளுக்கு நிவேதித்ததும் ஆகியவற்றைக் கூற, இராமாநுஜர் பாதுகையை வரவழைத்துப் பார்த்து, அது தம்முடையது என்றறிந்து அவ்வம்மையை நோக்கி நீ இக்கூட்டத்தில் இராமாநுஜர் இருந்தால் காட்டுக என்று கூற, அவளும் ஒவ்வொருவராகப் பார்த்து இராமாநுஜரைச் சுட்டி "இவர்தாம் இராமாநுஜராக இருக்க வேண்டும்; இவரிடத்தில் காவியுடை முதலியவற்றைக் காணவில்லை; மற்றெல்லாவற்றிலும் இவர்தாம் இராமாநுஜர்" எனக் கூறினாள். இராமாநுஜர் அவள் கூறியவற்றில் மகிழ்ந்து தம் சிஷ்யர்கள் யாவரையும் அங்கே உணவு கொள்ளச் செய்து தாம் பாலும் பழமும் கொண்டு உணவு செய்தருளினார்.

அப்பால், இராமாநுஜர் அவ்வம்மையினுடைய கணவனையும் தமக்குச் சிஷ்யனாக்கிக்கொண்டு * சாளக்கிராமம் என்னும் ஊரைச் சேர்ந்தார். அங்கேயுள்ளார் சைவம் முதலிய மதத்தைத் தழுவியவர்களாய் ஸ்ரீ வைஷ்ணவர்களை அநாதரவு பண்ணியிருந்தார்கள். ஆதலினால் அவர்களுக்கு நல்லறிவு உண்டாகுமாறு செய்வதற்கு அவ்வூரார் நீரெடுக்கும் துறையில் முதலியாண்டானுடைய பாதத்தைக் கழுவிவருமாறு அவர் செய்தனர். அதனால் திருந்திய அறிவுபெற்ற அவ்வூரார் இராமாநுஜரையடைந்து நல்லுபதேசம் பெற்று யாவரிடத்தும் பொது நோக்குடையவர்களாயினர். அப்பால் இராமாநுஜர் அங்கே தம்மை வந்தடைந்த வடுகநம்பியை அடிமைகொண்டு அவருக்கு தர்சனார்த்தங்களை யெல்லாம் தெளிய விரித்துரைத்தார். இவ்வூரிலேதான் இராமாநுஜர் முக்கோலும் காவியுடையும் திரும்பவும் அணிந்து கொண்டதாகக் கூறுவார்கள். இராமாநுஜர் தம்மை ஊரைவிட்டுத் துரத்திய சோழவரசன்

* இவ்வூரைக் கோவை என்பார்கள்.

நசித்துப்போகும்படி திருவேங்கட முடையானைக் குறித்து இவ்வூரில் தான் அர்க்கியம் கொடுத்தருளினார் என்பார்கள்.

பிறகு இராமாநுஜர் தொண்டனூர் போய்ச் சேர்ந்தனர். அவ்வூர் அக்காலத்தில் போசள இராஜ்ஜியத்திற்கு இராஜதானி. அங்கே அந்நாட்டிற்கரசனாக இருந்தவன், விட்டல தேவராயன் என்பவனாவான். அவன் போசள மரபைச்சேர்ந்தவன். அவன் சமணமதத்தைத் தழுவியவனாய்ப் பல்லாயிரக்கணக்கான சமணர்களைத் தன் ஆதினத்தில் வைத்து ஆதரித்து வந்தான். அவனுக்கு மகள் ஒருத்தியுண்டு. அவளைப் பேய்பிடித்து அலைத்து மிகவும் வருத்திற்று. அவள் பேய்க்கோட்பட்டமையால் தன் அரையாடை முதலியவற்றை அவிழ்த்து எறிந்துவிட்டு ஓ வென்றலறி ஓலமிட்டுக்கொண்டு தெருவுகளில் ஓடுவாள்; விழுவாள்; எழுவாள் தொழுவாள்; செய்யாதன வெல்லாம் செய்வாள். இவ்வாறிருக்கும் தன் மகளைக்கண்டு மிகவும் வருந்தினவனாய் அவ்விட்டலன், தன்னாட்டிலும் வேற்று நாடுகளிலுமுள்ள மாந்திரீகர்களை வரவழைத்துத் தன் மகளுக்குண்டான பேய்க்கோளை நீக்கப் பெரிதும் முயன்று பார்த்தான். அது ஒன்றினாலும் தீராமல் முன்போலவே இருந்தது. அதனால் அவ்வரசனுடைய கோயிலில் மகிழ்ச்சியே யில்லாமல் மாறியிருந்தது. அப்பொழுது, அங்கே தொண்டனூர் நம்பியென்னும் பெரியார், இராமாநுஜருடைய சிஷ்யர்களில் ஒருவர், அரமனைக்கு உபாதானத்துக்காகச் சென்றவர் அரமனைமுற்றும் பொலிவிழந்து தோன்றக்கண்டு அரசன் மனைவியிடம் அதன் காரணத்தை வினவ, அவள், "பெரியோரே, இப்பெண்ணைப் பாரும்; இவ்வாறு இவள் பேய்வயப்பட்டு வருந்துகையில், எங்களுக்கு மகிழ்ச்சியெங்கிருந்து வரும்? இதனைத் தீர்ப்பதற்கு

வழிதெரியாமல் தவிக்கின்றோம்" என்று உள்ளவற்றைக் கூறினாள்

தொண்டனூர் நம்பி, அதனைக்கேட்டுத் "தாயே, இவ் வூருக்குப் பெரியார் ஒருவர் வந்துள்ளார். அவர் எங்களுக்கு ஆசாரியர். அவர் பெயர் இராமாநுஜர் என்பதாம். அவர் தம் இளவயசில், இவ்வாறு ஓரரசன் பெண்ணைப் பிடித்திருந்த பிரமராக்ஷஸைப்போக்கி வாழ்வித்தருளினர். அவரால் முடியாததொன்றில்லை. அவரை நீங்கள் வரவழைத்து இப்பேயைத் துரத்தும்படி கேட்டுக்கொண்டால் அவர் அவ்வாறே செய்து உங்கள் துன்பத்தைப் போக்கியருளுவார்" என்றுகூற, அவள், தன் கணவன் விட்டல தேவனை யழைத்து வந்து, தொண்டனூர் நம்பியெதிரில் வைத்துக்கொண்டு, அவர் கூறியவற்றைத் தெரிவித்துக் கொள்ளக் கேட்ட விட்டல தேவனும் அரசன் "நம்பியே, உங்கள் ஆசாரியர் என் மகளுடைய பேயைப் போக்கியருளுவரேயாமாகில், எனக்கும் அவரே ஆசாரியராவார். நான் அவருடைய திருவடிகளை யடைந்துய்வேன். அன்றியும், யான் அனுசரித்து வந்த சமண சமயத்துத் தலைவர்கள், என்னையொரு பொருட்டாக மதியாமல் என் வீட்டிலமைத்த விருந்திற்கும் வர மறுத்துவிட்டார்கள். அவர்களால் என் மகளின்துன்பத்தைப்போக்க முடியவில்லை. ஆதலால், உங்களுடைய ஆசாரியர் இந்த வேளையில் வந்து என்னையாட் கொண்டருளும்படி நீர் செய்யவேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

தொண்டனூர் நம்பி இராமாநுஜரை யடைந்து "ஆசிரியரே, அடியேன் விட்டல தேவனுடைய அரமனைக்கு உபாதானத்தின் பொருட்டுச் சென்றேன். அங்கேயுள்ள அலங்கோலத்தைக் கண்டு காரணம் கேட்க, அரசன் மகள்

பேய்க்கோட்பட்டுள்ளாள் என்று அவர்கள் கூற, அது எங்க ளாசிரியரால் தீரும் என்றேன். அங்ஙனமாயின், உங்களா சிரியரை இங்கே யழைத்துவந்து என் மகள் பிணியையும் என் பிறவி நோயையும் போக்கியருள வேண்டும் என அரசன் மிகவும் வேண்டிக் கொண்டான். அவனும் இப் பொழுது இங்கே நேரில் தேவரீரை வேண்டிக் கொள்வ தற்கு வரலாம்” என்று கூறுகையிலே, அரசனும் தன் பரி வாரங்களுடன் அங்கே வந்து இராமாநுஜரடி வீழ்ந்து வணங்கி “அன்புடையோரே, தேவரீர் அடியேனிடத்தும் அடியேன் மகளிடத்தும் இரங்கியருள வேண்டும். இரா மாநுஜ முனிவரே, ஆட்கொண்டருள வேண்டும்” என்று கூறி எழுந்து நின்றான்.

அப்பொழுது, இராமாநுஜர், அரமனையுட்புகுதல், தவக்கோலம் பூண்டுள்ளவர்களுக்குத் தகாததொன்றா யிற்றே என்று சிறிது சிந்தித்தருள, அதனையறிந்த தொண் டனூர் நம்பி முதலியாண்டான் முதலானவர்கள், “அருள் கொண்டாடும பெரியோரே, திருமால் சமயத்தைப் பரப்பு தல், அவனுடைய திருக்கோயில்களில் பழுது நீக்கிச் செவ்வை செய்தல் என்று தேவரீர் மேற்கொண்டுள்ள வழுவிலா அடிமைகளுக்கு இவ்வரசனைத் திருத்திப் பணி கொள்வதும் இன்றியமையாததாம்; ஆதலால், தேவரீர் மேற்கொண்டுள்ளவற்றைக் கருதி இவன் அரமனை செல் வதும் தகுதியேயாம். திருநாராயணபுரம் என்னும் கோயில், இவ்வரசனதீனமாய் இருக்கின்றது. ஸ்ரீவைஷ்ணவ தர் சனத்தை மேற்றிசையில் நிலை நிறுத்துவதற்கு அதனைப் பழுது நீக்கி நன்னிலைக்குக் கொண்டு வருவது சிறந்ததாம். ஆதலால் தேவரீர் இவ்வரசன் வேண்டிக்கொள்கிறவாறே செய்தருளவேண்டும் என அடியோங்கள் தேவரீரை மிகவும்

பிரார்த்திக்கின்றோம்" என்று கூற, அவரும் உடன்பட்டு விட்டல தேவனுடைய அரமனைக்கு எழுந்தருளினார்.

அப்பெரியோர் தன்னரமனைக்கு வந்தமையால் அவரை அன்போடுபசரித்து அரசன் தானும் தன் மனைவியுமாய் அவர் திருவடிகளில் வணங்கி எழுந்து நின்றார்கள். அப்பொழுது அவருடைய சிஷ்யர்கள், அவருடைய பாததீர்த்தத்தை அவ்வரசன் மகள் தலையிற்றெளித்துப் பருகவும் கொடுத்தார்கள். அவற்றால் அப் பெண்ணைப் பற்றிக் கொண்டு நின்ற பேய் நீங்கிற்று. அதனைக்கண்ட அரசன் மிகவும் வியந்து புகழ்ந்து கொண்டாடித் தன்னை அவர் திருவடிகளுக்கு ஆளாக்கிக் கொண்டருள வேண்டும் என்று பிரார்த்தித்தான். அவ்வாறு தம்மை வணங்கிக்கேட்டுக்கொண்ட அவ்வரசனுக்குப் பஞ்சசம்ஸ்காரமும் மந்திரோபதேசமும் செய்து அவனுக்கு விஷ்ணு வர்த்தனன் என்னும்பெயரையும் ஈந்து ஆட்கொண்டருளினார்.

அப்பொழுது அவ்வரசனால் ஆதரிக்கப்பட்டுவந்த முன்னைச்சமயமாம் சமணசமயத் தலைவர்கள் யாவரும், ஒன்று கூடி இராமாநுஜரிடம் வந்து, நீர் எங்களை வெல்லாமல் எவ்வாறு எங்களரசனை உங்கள் சமயத்துக்கு இழுத்துக்கொள்ளலாம்? எங்களை வென்றல்லவோ அக்காரியத்தை நீர் செய்திருக்கவேண்டும். வாரும் நீர் எங்களுடன் வாதுக்கு" என்று அவரை அறைகூவி யழைத்தனர். இவ்வாறு இராமானுஜரை வாதுக்கழைத்த சமணர்கள் ஆயிரக்கணக்கானவர்கள் அவர்கள் யாவரும் நன்றாகக் கற்றறிந்தவர்கள். அதனை நன்றாயறிந்த இராமாநுஜர், "இவர்களோ மிகப் பலராயிருக்கின்றனர். நாம் இவர்களனைவரையும் ஒரே காலத்தில் 'வாது செய்து வெல்லாமல் ஒவ்வொருவருடனும் தனித் தனி வாதப்போர் நிகழ்த்துவதென்றால், எவ்வளவு காலம் அது நீட்

டிக்கும்? அதற்கு நமக்குள்ள வாழ்நாள் போதுமோ? இதற்குயாது செய்யலாம்?" என்று கருதும்பொழுது, அவருடைய சிஷ்யர்கள் "சுவாமி, திருவுள்ளம் திகைக்குமாறு என்? இவர்கள் விஷயத்தில் எது செய்யத்தக்கது என்று தேவரீருக்குத் தோன்றுகின்றதோ அதனைச்செய்து தேவரீருடைய பெருமையை யாவருக்கும் வெளியிட்டு அவர்களை வெல்லுமாறு பிரார்த்திக்கின்றோம்" என்று வணங்கிக் கூறக் கேட்ட இராமாநுஜர், அங்கே யொருமண்டபத்தில் திரையிடுவித்து அத்திரைக்குள் தாம் வீற்றிருந்து தம்முடன் வாதுக்குவந்த சமணர்களைத் திரையைச் சுற்றிலும் இருக்கும்படிசெய்து, தாம், தம்முடைய ஆதியஞ்சோதியுருவமாம் ஆயிரம் பணா மகுடங்களையுடைய திருவனந்தனாக ஆகி அவர்கள் ஒவ்வொருவரையும் நோக்கி நீங்கள் புரியக்கூடிய வாதத்தை நிகழ்த்துங்கள் என்று கூறினார். உடனே அச்சமணர்கள், தங்கள் தங்களுக்குத் தோன்றிய கேள்விகளைக் கேட்கத் திருவனந்தனாகிற இராமாநுஜர், தம்முடைய ஆயிரம் முகங்களினாலும் அவரவர்களுக்குத்தக்க விடைகூறியதோடு, அவர்கள் சமயத்துள்ள குற்றங்களையும் எடுத்துக் காட்ட, அவர்கள் கேட்டுத் தம் வாய்மூடி நாங்கள் தோற்றோம்; நீரே வென்றவர் என்று அவருடைய அளவற்ற ஆற்றலை வியந்து புகழ்ந்தார்கள். அவ்வாறு தோற்ற அவர்களில் பெரும்பாலார், இராமாநுஜருடைய திருவடியையடைந்து ஸ்ரீவைஷ்ணவசமயத்தை மேற்கொண்டொழுகத் தொடங்கினார்கள். அதனாலும், விஷ்ணுவர்த்தன அரசனுக்கு இராமாநுஜரிடத்தில் அளவுகடந்த மதிப்பு உண்டாயிற்று.

இவ்வாறு, இராமாநுஜர் பெருமதிப்புடையவராய் அவ்விடத்தில் வேதாந்தத்திற்கு யாவருமறியுமாறு பொருளுரைத்து வீற்றிருக்கும்பொழுது, அவர் தினந்தோறும்

நெற்றி முதலான இடங்களில் அணிந்துகொள்ளும் திருமண் அவரிடத்துள்ளது செலவாகிவிட்டமையால், யாது செய்வது என்று கருதி ஒருநாள் இரவு அவர் கண்வளரும்பொழுது, பெருமாள் அவருடைய கனவில் தோன்றி 'நாம் இவ்விடத்திற்கு அணித்தான யதுகிரி என்ற திருநாரயண புரத்தில் இருக்கின்றோம்; அங்கே உமக்குவேண்டிய திருமண் மிகுதியாக உண்டு. அன்றியும், அங்கே நம்மைப் பிரதிஷ்டித்து நம்முடைய கோயிலையும் பழுதகற்றி, நமக்கு நித்திய பூஜை முதலியன செவ்வே நடைபெறும்படி செய்வதற்கு நீர் அங்கே விரைவாக வரவேண்டும்'' என்றுகூற, இராமாநுஜர் துயிலுணர்ந்து எழுந்து விடியற்காலையில் தாம் கண்ட கனவைத் தம்முடைய சிஷ்யர்களுக்கும் விஷ்ணு வர்த்தன அரசனுக்கும் கூற, அவர்கள் யாவரும் மிக்க வியப்படைந்தனர்.

அப்போது, விஷ்ணு வர்த்தனன் இராமாநுஜருடைய கட்டளையின்படியே திருநாராயண புரத்திற்குச் செல்லும் வழியிலுள்ள காடுகளை யெல்லாம் வெட்டுவித்து நல்வழி காண, இராமாநுஜரும் அவர் சிஷ்யர்களும் அவ்வழியே திருநாராயணபுரம் செல்ல, விஷ்ணுவர்த்தனனும் அவர்களைத் தொடர்ந்து சென்றனன். இவ்வாறு அவர்களனைவரும் அங்கே சென்றபிறகு இராமாநுஜர், தமக்குப் பெருமாள் கனவில் கூறியருளியபடி அங்கே திருநாராயணன் எழுந்தருளி இருக்குமிடம் புலப்படாமையால் மிகவும் மனங் கலங்கி யாது செய்யலாம் என்று கவலைப்பட, அன்றிரவும் முன்போலவே திருநாராயணன் அவர் கனவில் வந்து "இராமாநுஜரே, என் கவலுகின்றீர்? இங்கேயுள்ள கல்யாண தடாகத்தின் தென்பக்கத்திலுள்ள சம்பகச்சோலையின் அருகே, மகிழமரத்திற்குத் தென்பக்கலில் ஒரு துளசிச் செடி பெரிதாக வளர்ந்திருக்கிறது. அதன் கீழேயுள்ள புற்

றிற்குள் நாம் இருக்கின்றோம். உமக்கு வேண்டிய திரு மண்ணும் அத்தடாகத்தின் வடபாலில் கருடனால் கொண ரப்பட்டுக் கீழே புதைந்துள்ளது. நாமிருக்குமிடத்திற்கடை யாளமாகத் துளசிக் கொழுந்துகளை நீரிருக்கிற இடங்தொ டங்கி நாமிருக்கும் புற்றளவாக இட்டுவைப்போம். அவற் றைப் பற்றிக்கொண்டு நீர் நம்மை வந்து காண்பீராக" என்று கூறி மறைந்தனன். இராமாநுஜர் உடனே துயிலு ணர்ந்தெழுந்து தாம் கண்டவாறே மற்றவர்களையும் கலி யாண தடாகத்தின் அருகே துளசியையே அடையாளமா கக்கொண்டு அழைத்துச் சென்று துளசிச் செடியின் கீழுள்ள புற்றைப்பிரிக்கச் செய்ய அங்கே கோயில்கொண் டிருக்கும் திருநாராயணப் பெருமாளைக் கண்டனர்.

அங்கே திருநாராயணப் பெருமாளை, இராமாநுஜர் விஷ்ணுவர்த்தனன் முதலானவர்கள் கண்டு ஆநந்தக் கூத் தாடி அகமகிழ்ந்து பாலாலே திருமஞ்சனம் பண்ணித் துதித்துப் புகழ்ந்தார்கள். இவ்வாறு இராமாநுஜர் நாரா யணப் பெருமாளைக் கண்டது (சகவர்ஷம் 1021) பஹு தானிய வருடம் *தை மாசம் சுகில பக்ஷம் சதுர்த்தசியும் வியாழக்கிழமையும் கூடிய புனர்வசு நக்ஷத்திரத்திலே என் பார்கள். அதுமுதல் மூன்று நாட்கள் இராமாநுஜர் தம் கையாலேயே அப்பெருமாளுக்கு ஆராதனம் செய்து சட கோபரால் அருளிச் செய்யப்பெற்ற திருவாய்மொழி ஆயி ரத்தில்:—

"ஒருநாயகமா யோட வுலகுட னாண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்
திருநா ரணன்தாள் காலம் பெறச சிந்தித் துய்ம்மினோ."

* பங்குனி மாசம் என்று சிலர் கூறுவார்கள்.

என்னும் பாசுரத்தை முதலாகவுடைய பத்துப்பாட்டுக்களை யும் அப்பெருமாள் விஷயமாகக் கூறப்பட்டன என்று அவ ருக்குச் சேர்த்தருளினார். பிறகு அவர் தமக்குவேண்டிய திருமண்ணையும் அப்பொய்கையின் வடபக்கத்திலிருந்து கண்டெடுத்து நெற்றியிலும் தம் திருமேனியில் அணிந்து கொள்ளவேண்டிய மற்றை இடங்களிலும் அணிந்து கொண்டு மகிழ்ச்சியுடையவராயினர்.

அப்பால் அவர் விஷ்ணுவர்த்தனனுடைய உதவியால் அக்கோயிலைச் சுற்றிலுமுள்ள காடுகளையெல்லாம் வெட்டித் திருத்தி நாடாக்கி மறையவர்களையும் மற்றையோர்களையும் குடியேற்றிக் கோயிலையும் பழுதறக்கட்டிப் புதிதாகச் செய்து, அப்பெருமாளுக்குப் பாஞ்சராத்திர ஆகமவிதிப்படி ஸ்ரீரங்கராஜபட்டர் என்பவரால் நித்திய நைமித்திகங்கள் நடைபெறுமாறு செய்தருளினார்.

பின்னர், அப்பெருமாளுக்குச் செய்யவேண்டிய திரு விழாவைச் சிறப்பாகச்செய்து முடிப்பதற்கு வீதியார வந்து யாவருக்கும் காட்சிகொடுக்க உத்ஸவ மூர்த்தி இல் லையே; அதற்கு யாதுசெய்யலாம்? என இராமாநுஜர் கருது கையில், ஒருநாள் இரவு முன்போலவே அவர்கனவில் திரு நாராயணன் தோன்றி "நம்முடைய உத்ஸவமூர்த்தி டில்லி யிலே துருக்க அரசன் அந்தப்புரத்தில் அவன் மகளுக்கு மனமகிழ்ச்சியை விளைத்துக் கொண்டுள்ளது; நீர் சென்று அம்மூர்த்தியை வாங்கிவருக" என்று கூறி மறைய, மறுநாள் விடிந்தவாறே, இராமாநுஜர் தம்முடைய சிஷ்யர்களிடத்தும் விஷ்ணுவர்த்தனனிடத்தும் தமக்குண்டாகிய கனவைக்கூறி உடனே விரைந்து எழுந்து டில்லிக்குப் புறப்பட்டுச் சென் றார். அவ்விடத்துள்ள துருக்க அரசன், இராமாநுஜர் சந்நி

யாசி என்னும் காரணத்தால் அவருக்கு மரியாதைகளைச் செய்து 'நீர்வந்த காரணம் என்?' என வினவ, இராமாநுஜர் "அரசனே, எங்கள் தெய்வமான இராமப்பிரியர் என்னும் திருநாராயணபுரத்து உத்ஸவ விக்கிரகம் இங்கேயிருக்கின்றது: அதனை எனக்குத் தரும்படி செய்யவேண்டும்" என்று கேட்க, அரசன், "உம்முடைய தெய்வ விக்கிரகம இங்கேயுண்டாயின், அதனை உம்முடைய சக்தியால் வரவழைத்துக் கொண்டு செல்லும்" என்று கூற, இராமாநுஜர் இராமப்பிரியரை மனத்தில் நினைத்துத் தம்மிடத்திற்கு எழுந்தருளி வரவேண்டும் எனப் பிரார்த்திக்கத் தன்னை எப்பொழுது இராமாநுஜர் வந்து அழைத்துக் கொண்டு போவார் எனக் கருதியிருந்த இராமப் பிரியரும், ஒருசிறு குழந்தை எல்லா அணிகலன்களையும் அணிந்து கொண்டு தளர் நடை நடந்து வந்து, பெற்றோர் மகிழ அவர்கள் மடியில் ஏறிவீற்றிருப்பதைப் போல, அணிகலன்கள் கலீர் கலீர் என ஒலிக்கக் குதித்தோடி வந்து இராமாநுஜருடைய மடியில் ஏறிவீற்றிருந்தனர். அப்பொழுது இராமாநுஜர் கொண்ட மகிழ்ச்சிக் கோரளவு முண்டோ? இராமாநுஜர் தம்மடி மீது வந்துட்கார்ந்த இராமப்பிரியரை என் செல்வப்பிள்ளையே என்றழைத்து அணைத்துக் கொண்டனர். அன்று முதல் அவ்வுத்ஸவ விக்கிரகத்திற்குச் செல்வப்பிள்ளை என்று பெயர் வழங்கலாயிற்று. இவற்றை யெல்லாம் கண்ட டில்லியரசன் மிகவும் வியப்புடையவனாய், இராமாநுஜரை நோக்கிப் "பெரியோரே, நீர் மிகவும் தெய்வபக்தியுள்ளவர் என்பதை இந்த விக்கிரகத்தினால் தெரிந்து கொண்டேன். நீர் இதனை உம் மனம் போல எடுத்துக் கொண்டு செல்லலாம்" என்று கூறினான். இராமாநுஜர் உடனே அந்த விக்கிரகத்தையும் மற்றும் அங்கேயிருந்த யதுகிரி நாச்சியாருடைய விக்கிரகத்தையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டு மிகவும் விரைவாக வந்து

திருநாராயண புரத்தைச் சேர்ந்தனர். அங்கே அவர் தாம் கொண்டு வந்த விக்கிரகங்களைத் திருநாராயணப் பெருமாள் கோவிலில் பிரதிஷ்டை செய்து அவ்விக்கிரகத்துக்குக் கொண்டாட வேண்டிய திருவிழாக்களை யெல்லாம் கொண்டாடி அவ்வூரில் தம்பெயரால் ஒருமடமும் கட்டிக் கோயில் காணியாட்சியாராக ஐம்பத்திருவரை ஏற்படுத்திச் சங்கு சக்கரங்களை அவர்கள் தோள்களில் பொறித்து அவர்களுக்குக் கூட்டப் பெயராக ஐம்பத்திருவர் என்று பெயரும் வைத்து அவர்களைக் கோயில் காரியங்களைச் செவ்வனே நடத்தி வருமாறு செய்தார். அவர் தாம் டில்லியிலிருந்து விக்கிரகத்தைக் கொண்டு வரும்பொழுது தமக்கும் விக்கிரகத்திற்கும் திருடர்களால் தீங்கு நேரிட்டபொழுது தம்மை அவர்களிடத்தினின்றும் காப்பாற்றிய பஞ்சமர்களுக்குத் திருக்குலத்தார் என்று பெயரளித்துத் திருநாராயணப்பெருமாள் திருவிழாவில் ஒருநாள் கோயிலுக்குள் நுழைந்து சுவாமி கும்பிடவும், அவர்களுக்குக் கோயிலார் மரியாதை பண்ணுமாறும் செய்தருளினார். அது இக்காலத்திலும் அவவிடத்தில் அவ்வாறே நடந்து வருகிறது.

இவவாறு, இராமாநுஜர் திருநாராயணபுரத்தில் இருந்து இருமொழி வேதாந்தப் பொருளையும் இருநிலத்தில் விளங்க உரைத்தும் பதுமகிரியிலுள்ள பௌத்தர்களை வாதில் வென்றும் தம்முடையதான ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தைத் திசையெங்கும் பரவச்செய்தும் வீற்றிருந்தார். அவ்வாறிருக்கும்பொழுது, ஸ்ரீரங்கத்திலிருந்து வைஷ்ணவர் ஒருவர் வந்து அவரை வணங்கியிருக்க, இராமாநுஜர் அவரை நோக்கி, 'அவ்விடத்தில் யாது விசேடம்?' என்று அவரை வினவ, அவர், "சுவாமி, தேவரீர் அங்கேயில்லாத குறையொன்று. அதுவுமன்றிப் பெரிய நம்பியோடு கூரத்தாழ்

வான் சோழன் அவைக்குச்செல்ல, அங்கே சோழன் சிவ னைப் பார்க்கிலும் மேலானதெய்வம் இல்லை என்று எழுதிய தாமரப்பட்டயத்தில் அவ்விருவரையும் கையெழுத்திடும் படிகூற, அவர்கள் பலவிதமான சுருதியுக்தி மேற்கோள் களை யெடுத்துக்காட்டிச் சிவனிலும் மேலானதெய்வம் திரு மாலே என்று கூறி அவனுடைய மனக்கோளை மறுக்க, அவன் பொறுதவனாய்த் தன்னுடைய ஏவலர்களைக் கொண்டு, கூரத்தாழ்வான் கண்ணைப்பிடுங்கவும் பெரிய நம்பியைப் பெரிதும் துன்புறுத்தவும் கூறினன். அதனைக் கேட்ட கூரத்தாழ்வான், அவர்கள் தம் கண்களைப் பறித் தெடுக்கும் முன்பே, அக்கொடிய அரசனைப்பார்த்த கண் கள் தமக்கிருத்தல் கூடாது என்று கருதியவர்போலத் தாமே தம் கண்களைக் களைந்தெறிந்து மிகவும் கம்பீரமாக இராஜசபையை விட்டு நீங்கினர். பெரிய நம்பியை ஏவலா ளர் அரசன் கூறியவாறே அவருக்கு மரணவேதனையுண் டாகுமாறு துன்புறுத்தி விட்டார்கள்.”

“அப்பொழுது பெரிய நம்பியின் திருமகள் அத்துழா யம்மை என்பவள் அவ்விருவரையும் ஓரிடத்தில் கொண்டு போய்வைத்து, அவர்களுடைய துன்பத்தைப் போக்குவ தற்குரிய உபாயங்களைச் செய்து பார்த்தாள். பார்த்தும் கூரத்தாழ்வான் கண்கள் போயின போயினவேயாயின. பெரிய நம்பியோ முதுமைப் பருவமுடையராயிருந்த மையால் அவ்வேதனை பொறுக்கமாட்டாமல் தம் உட லினை இவ்வுலகில் ஒழித்து நலமந்தமில்லதோர் நாடு புகுந் தனர். அப்பொழுது கூரத்தாழ்வான் அவ்விடத்துள்ள சில ஸ்ரீ வைஷ்ணவர்களுதவியால், அவரைப் பிரமமேத சம்ஸ் காரத்தால் பள்ளிப்படுத்திச் செய்ய வேண்டியவற்றை நிறைவேற்றினர். அப்பால் கூரத்தாழ்வான் சிலருடைய

உதவியால் ஸ்ரீரங்கம் வந்துள்ளார். அதுவும் அங்கேயுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் பெருங்குறையாயுள்ளது” என்று விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

இராமாநுஜர், இச்செவிசுடு வார்த்தைகளைக் கேட்டவுடன், அனலிடைப்பட்ட புழுப்போலத் துடிதுடித்துத் தள்ளிவிழுந்து நினைவற்றுக் கீழேகிடந்தார். அதனைக் கண்டு அவர் சிஷ்யர்கள் தண்ணீர்கொண்டு முகத்திற்றெளித்து அறிவுண்டாகும்படி தேற்றினார்கள். அதனால் தேறியிருந்த அவர், “ஆழ்வானே, உனக்கோ இக்கதி நேருவது? உன்னைப் போலறிவுள்ளார் இவ்வுலகத்துண்டோ? தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளன் நீயேயன்றோ? நீ ஸ்ரீ வைஷ்ணவ சமயம் நிலைநிற்பதன் பொருட்டு உன் கண்களை இழந்தாயன்றோ? கண்ணிற்சிறந்தவுறுப்பில்லை யாதலின், கண்களை இழந்த நீ உயிரை இழந்தவனைப்போலவே யாவாய். நீ கண்களையிழந்தமையால் யான் கண்ணற்றவனாயினேன். நீ யல்லவா பெரியோன.” என்று பிரலாபித்துப் பின்னரும், “ஆசாரியரே, உம்மை அடியேன் பெற்றமையால் அவ் ஆளவந்தாரையே காணப்பெற்றதுபோல மகிழ்ந்திருந்தேன். அடியேனுக்கு நன்மைப்பொருளை நாடியுரைத்த நல்லோரே, உம்மைப் பிரிந்து யான் எங்ஙனம் உயிர்வாழ்வேன்? உத்தம குணமுடைய உயர்ந்தோரே, எனக்கு இனியார் இந்நீணிலத்தில் இருமைக்கும் துணையாயிருப்பார்? பிறாகுற்றம் நினையாப் பெருந்தகையீர், பெரியோர்களின் முன்னணியில் இனியாரை வைத்து உலகம் எண்ணும்?” என்று பலவாறு புலம்பித் தேம்பித் தேம்பிச் சிறுபிள்ளைகள்போல் அழத்தொடங்கினார். பக்கத்தில் நின்றார்கள் ஒன்றும் செய்யத் தோன்றாதவர்களாய்ப் அங்ஙனமே பிரமித்து நின்றார்கள்.

அப்பொழுது, இராமாநுஜர் தாமே ஒருவாறு தேறித் தம் பக்கலில் நின்ற மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டானை நோக்கி, 'நீ ஸ்ரீரங்கம் சென்று கூரத்தாழ்வானிடம் நடந்த வற்றை நேரில் தெரிந்துவா' எனக் கூறி யனுப்பிவிட்டுத் தமக்குச் சோழனிடமுள்ள கோபம் அடக்கியும் அடங்காமையால் திருவேங்கடமுடையானை மனத்தில் நினைத்து, "அப்பனே, உன்னுடையடியார்களுக்கும் உன் சமயத்திற்கும் தீங்கிழைக்கும் கொடியோனாகிய குலோத்துங்க சோழனை நீ ஒறுத்தருள வேண்டாவோ?" என்று விண்ணப்பித்துக் கொண்டார். அவ்வாறு இராமாநுஜருடைய விண்ணப்பம பெற்ற திருவேங்கடமுடையான், அன்று இரவு அச்சோழன் கனவில் அவன் அஞ்சத்தக்க வடிவோடு தோன்றித் தம் சக்கரப் படையால் அவன் கழுத்தில் பல் வேறிடங்களிலும் குத்திவிட்டு மறைந்தனர். மறுநாட் காலையில் உறங்கி விழித்த சோழன், மிகவும் அச்சம் கொண்டு தனக்கு என்ன தீங்கு நேருமோ எனக் கருதலானான். ஆனால், அவன் தான் ஸ்ரீ வைஷ்ணவப் பெரியோர்களிடத்தில் பிழைபட நடந்ததனால் இவ்வாறு உத்பாதம் உண்டாயிற்று என்று கருதினானில்லை. நிற்க,

மாருதிச் சிறியாண்டான் இராமாநுஜர் நியமனப் படியே புறப்பட்டு ஸ்ரீரங்கம் சென்று கூரத்தாழ்வானை அடைந்து, இராமாநுஜர் தம்மை அனுப்பின செய்தியைச் சொல்லக் கேட்ட கூரத்தாழ்வான் தம்முடைய ஆசாரியராகிய இராமாநுஜரைக் கண்டது போலவே மிக்க மகிழ்ச்சி கொண்டவராய்ப் பெரிய நம்பிக்கும் தமக்கும் நேர்ந்த வற்றை விரிவாக எடுத்துரைத்து விட்டுத் திருமாலிருஞ் சோலைமலை சென்றனர்.

பிறகு, சில நாளைக்கெல்லாம் குலோத்துங்க சோழன், தன் கழுத்தைச் சுற்றிலும் கண்டமாலை வரப் பெற்றவனாய், அது புண்ணாய் அழுகிப் புழுத்து அதில் நின்றும் தீ நாற்றமும் புழுவும் புறப்படச் சிச்சீ என்று யாவரும் தன்னை இகழ்ந்து நெருங்குவதற்கும் அருவருப் புண்டாகுமாறு இருந்து மிக்க துன்ப மெய்திச் சில நாட்களிலெல்லாம் இறந்து பட்டான். அதனால், அவன் கிருமிகண்ட சோழன் எனப் பின்னர் வழங்கப் பெறுவானாயினன். அச்செய்தி அவன் இராச்சியம் எங்கும் பரவிற்று. மாருதியாண்டானும அச் செய்தியைக் கேட்டுத் தாம் நேரே கங்கை கொண்ட சோழபுரம் சென்று, அவ்வார்த்தை உண்மை தான் என்பதை யுணர்ந்து கொண்டு திருநாராயணபுரம் நோக்கிப் புறப்பட்டுச் செல்கையில், வழியில், அம்மங்கியம்மாள் என்ற இராமாநுஜருடைய சிஷ்யரும் இச் செய்திகளை யெல்லாம் தாமும் அறிந்து வந்து இவருடன் சேர இருவருமாய்த் திருநாராயணபுரம் சென்று சேர்ந்தனர். இராமாநுஜர் அங்கே கல்யாண தடாகத்தில் அநுட்டானம் செய்து கொண்டிருக்கும் பொழுது அவ்விருவரும் அவரையடைந்து வணங்கி யெழுந்து, "ஆழ்வானுக்கும் நம்பிக்கும் தீமை யிழைத்த சோழவரசன் கழுத்தில் புழுச் சொரிய யாவராலும் அருவருக்கத்தக்க தீநாற்ற மெடுக்கப் பெற்று நம
ன்" என்று கூறினார்.

கேட்ட இராமாநுஜர், ஆழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் தீமை இழைக்கப்பட்ட காலத்து எவ்வளவு மனங்கலங்கினாரோ, அவ்வளவு மனமகிழ்ச்சி இப்பொழுது அடைந்து, இதுவே கல்யாண தடாகம் என வியந்து தமக்கு நற்செய்தி கூறிய அவ்விருவருக்கும் துவயம் என்னும் மந்திரத்தைத் திரும்பவும் உபதேசித்து அவர்கள் கொணர்ந்த நல்வார்த்தைக்குப் பரிசில் நல்கியவராக ஆயினர்.

அப்பால், இராமாநுஜர், திருநாராயண புரத்தில் நாட்கள் வசித்திருந்து, திருநாராயணப் பெருமானுக்கும் செல்வப்பிள்ளைக்கும் திருவாராதனம் முதலியன செவ்வை யாய் நடந்து வருமாறு மேற்பார்த்திருந்து, கோயில் காணி யாளர் முதலானவர்களையும் அவ்விடத்துள்ள தம் சிஷ்யர் களையும் ஒரு நாள் தம் எதிரில் வரவழைத்து அவர்களை நோக்கி "அன்புடையவர்களே, நான் ஸ்ரீரங்கம் விட்டு இங்கே வந்து *இருபது வருடங்கள் ஆயின. நான் அங்கே செல்வதற்கு இடையூறாயிருந்த காரணம் திருவேங்கட முடையானுடைய திருவருளால் ஒழிந்து விட்டது. ஆத லால் நான் இப்பொழுது அங்கே சென்று, நம்பெருமாளாம அரங்கநாதனை அடிபணிய ஆவலுள்ளவனா யிருக்கின்றேன். நான் இங்கே இருக்கும் பொழுது திருநாராயணனையும் செல்வபபிள்ளையையும எவ்வாறு ஆராதித்து வந்தீர்களோ அதுபோலவே, நான் இல்லாத பொழுதும் அவ்வாறே நடத்தி வருவீர்கள் என்று நம்பியே உங்களிடம் ஒப்பிக்கின் றேன். ஆதலால் எல்லாவற்றையும் நன்றாகப் பேணிக் கொண்டு நம்முடைய தர்சனத்திற்கு என்றும் பழுதுவாரா மல் பார்த்துக் கொள்வீர்களாக; எனக்கும் விடை கொடுங் கள்" என்று கூற, அப்பொழுது, அவர்கள் யாவரும் மிகக் கலக்க மெய்தி, "ஆசிரியரே, தேவரீரை நாங்கள் பிரிந்து தரிக்ககில்லேம்; அடியோங்கள் ஒன்றுமறியாப் பேதைகள்; இன்னும் தேவரீரிடத்தில் அடியோங்கள் அறிந்துகொள்ள வேண்டுவன பலவுள. அடியோங்களை இந்த நிலைமையில் கைவிட்டகலல் கூடாது. ஆயினும் தேவரீருடைய திரு வுள்ளத்தை மறுத்துக்கூற அடியோங்களுக்கு ஆற்றலில்லை. இனிச் சிறியேங்கள் நிலைமையையும் தேவரீர் நிலைமையையும

*பன்னிரண்டு வருடம் என்று பெரும்பாலோர் கூறுவர்.

சீர்தூக்கிச் செய்யத்தக்கது எது என்று எளியோங்களுக்கு நியமித்தருளுவீரேயாயின் அவ்வாறே நடந்துகொள்ளு வோம்" என்று கூற இராமாநுஜர், அவர்கள் எண்ணத்தின் வண்ணமே ஒரு சிற்பியால் தம் வடிவத்தோடு ஒத்ததொரு விக்கிரகத்தை வார்க்கும்படி செய்து அதனை ஐம்பத்திருவர் முதலியவர்களிடம் கொடுத்து "இதனை நீங்கள், நாமுங்க ளுடனிருப்பது போலவே வைத்துப் பாவித்து வாருங்கள். உங்களுக்கு எல்லா நன்மையு முண்டாகும்" என்று அருளிச் செய்தார். அதனை அவர்கள் பெற்றுப் பிரதிட்டை செய்து, அதனை இராமாநுஜராகவே மதித்து அவருக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளை அதனிடத்து ஆற்றிவருவா ராயினர். இராமாநுஜரும் அவ் விக்கிரகத்தில் தமது சக்தி யைப் பதித்தனர்.

இராமாநுஜர் தாம் திருநாராயண புரத்தில் இருக்கும் காலத்தில், விஷ்ணுவர்த்தனனுடைய உதவியால், அவனு டைய போசள இராச்சியத்தில் முதலியாண்டானைக் கொண்டு கோயில்களில் நாராயணனைப் பிரதிட்டை செய் யுமபடி நியமித்தார். அவர் நியமனப்படியே ஆண்டான் ஐந்து நாராயணர்களை அவ்விராச்சியத்தில் பிரதிட்டை செய்து வைத்தார். அவர்களுக்குப் பஞ்சநாராயணர் என்று பெயராகும். அந்த ஐந்தையும் ஒரே முகூர்த்தத்தில் பிரதிட் டை செய்து வைத்தார் என்பர். தழைக்காட்டில் கீர்த்தி நாராயணனையும், தொண்டனூரில் இலக்ஷ்மீகாந்தன் என்னும் ஸ்ரீமந்நாராயணனையும், கதுகலத்தில் வீரநாராயணனையும், விஜயாபுரத்தில் விஜயநாராயணனையும், வேலூரில் கேசவ நாராயணனையும் முதலியாண்டான் பிரதிட்டை செய்து வைத்தனர் என்பார்கள். அரசன் விஷ்ணுவர்த்தனன் தான் முன்னளில் சமணர்களுக்கு ஆக்கிக்கொடுத்திருந்த பள்ளி

முதலியவற்றை இடித்து இக்கோயில்களைக் கட்டிவைத்தான் என்பர். அன்றியும் அவ்வரசன் இராமாநுஜருடைய அநுமதியின்மேல் தொண்டனூருக்கருகில் திருமலை சாகரம் என்ற ஒரு பெரும் ஏரியை உண்டாக்கினான். சமணர்களுக்கு விட்டிருந்த மானியங்களையெல்லாம் எடுத்து மேற்கூறிய கோயில் முதலியவைகளுக்கு ஆக்கி அவற்றில் நித்தியங்களும் திருவிழாக்களும் நடந்து வருமாறு செய்தான்.

பிறகு, இராமாநுஜர் திருநாராயணப் பெருமாளையும் செல்வப்பிள்ளையையும திருமண் குவைகளையும் விட்டுப்பிரிய மனமில்லாதவராயிருந்தாலும் அரங்க நகராளியிடத்துள்ள அன்பானது அவரை ஈர்த்துச்செல்ல, அவர் திருவரங்கப் பெருநகரை நோக்கிப் புறப்பட்டனர். விஷ்ணுவர்த்தனன் வெகுதூரம் வரையிலும் சென்று அவரை வழிவிட்டுத் திரும்ப மனமில்லாமல் திரும்பினன். இராமாநுஜர் தாம் ஸ்ரீரங்கம் செல்லவேண்டும் என்னும் ஆசையால் வழிகளையெல்லாம் மிக்க விரைவாகக்கடந்து ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார்.* அவர் வந்ததைக் கேள்வியுற்ற அந்நகரத்தாரனை வரும் பெருமகிழ்ச்சி கொண்டு கோயில் மரியாதைகளுடன் புறப்பட்டு அவரை எதிர்கொண்டுவணங்கி:—

"வையங் குருடன்றோ மாமறையும் பொய்யன்றோ
ஐய னுரைத்ததமி ழாரறிவார்—வையத்துக்(கு)
ஊன்றுகோ லெனதை யெதிராச ராதரித்த
மூன்றுகோல் காண்பதற்கு முன்"

என்று புகழ்ந்து கூறி அவருடைய வருகையைக் கொண்டாடினார்கள்.

---

* இராமாநுஜர் தொண்டனூரினின்றும் வேங்கடமலைக்குச சென்று சோழனால பாழ்படுததப்பட்ட தில்லைக் கோவிந்தராஜனைத் திருவேங்கடமலையின அடிவாரததில் பிரதிட்டை செய்துவிட்டுச

அவர், நேரே, கோயில் சென்று பிரணவ வடிவமான விமானத்துள் 'குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கிக், கடல்நிறக் கடவுள் எந்தை யரவணை துயிலுமா கண்டு' ஆனந்த பரவசராய் உடலம் நெக்குருகித் தம்மையும் மறந்து நெடுநேரம் படிமீது கிடந்து எழுந்து இருமொழியிலுமுள்ள வேதாந்தங்களை இயலோடு கூறித் துதித்துப் பராயினர். அவருக்குக் கொயிலர்ச்சகர், தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் சடகோபம் முதலிய மரியாதைகளைச் செய்து மகிழ்வித்தனர்.

அப்பால், இராமாநுஜர் கோயில் முழுவதையும் சுற்றிப் பார்த்துவிட்டுத் தம்முடைய மடத்தை நோக்கி எழுந்தருளும் பொழுது, திருமாலிருஞ்சோலை மலையிலிருந்து அவ்விடத்திற்கு அப்பொழுதுதான் வந்த கூரத்தாழ்வானுடைய திருமாளிகைக்கு எழுந்தருளி, அவரை அன்போடிறுக அணைத்துக்கொண்டு ஒன்றும் பேசத்தோன்றாதவராய் விம்மி விம்மி அழத்தொடங்கினார். ஆழ்வான் தமமுடைய உடலினை ஆசாரியருடைய திருமேனி தீண்டப் பெற்றமையால், மயிர்க்கூச்செறிந்து வேறொன்றும் செய்யத் தோன்றாமல் தாமும் அவர்போலவே அழத்தொடங்கினார். அப்பொழுது பக்கத்தில் நின்றார் திகைத்தார்கள். பின்னர், வெகு நாழிகை யானவாறே, ஒருவாறு மனம் தேறிய இராமாநுஜர் ஆழ்வானை நோக்கி "ஐயனே, என்பொருட்டு, நீ எதனாலும் நீக்க இயலாத துன்பத்தை எய்தினையன்றோ? உன்னை நான் என் தெய்வம் என்றே கருதுவதன்றி வேறு

---

சோழநாடு கடந்து பாண்டிநாட்டுத் திருமாலிருஞ் சோலைமலையை அடைந்து கூரத்தாழ்வானையும் கூட்டிக்கொண்டு திருவரங்கமாநகர் வந்து சேர்ந்தனர் எனச் சிலர் சொல்லுவார்கள்.

நினைப்பதுண்டோ?" என்று பலவாறு கூற, ஆழ்வானும், தம் தீவினையே அதற்குக் காரணமாகும் என்று தம்மையே நொந்து கொண்டனர். இராமாநுஜர் அவருடைய பெருந் தன்மையைக் கொண்டாடிவிட்டுப் பெரிய நம்பியின் திரு மாளிகை சென்று, அவர் குமாரர் புண்டரிக ரிடத்தும் மகள் அத்துழாயிடத்தும் பெரிய நம்பி திருநாடலங்கரித்த தைக் குறித்து மிகவும் வருந்திப் பின்னர் வருந்திய அவ்விரு வரையும் தேற்றித் தம் மடம் சென்று எழுந்தருளியிருந்தார்.

இராமாநுஜர், திருநாராயண புரத்தில் எழுந்தருளியிருக் கும் காலத்தில் அவருக்கு ஆசிரியர்களாயிருந்த திருக்கோட் டியூர் நம்பி, திருமலை நம்பி, திருமாலை யாண்டான், திருவ ரங்கப் பெருமாளரையர், திருக்கச்சி நம்பி முதலான பெரி யோர்கள் ஈண்டுவாரா நெறியினை எய்தினராதல் வேண்டும்.

## இராமாநுஜருடைய பிற்கால நிகழ்ச்சிகள்.

இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தில் இருக்கும் காலத்தில், சிலர் வந்து 'தில்லை என்ற சிதம்பரத்திலுள்ள கோவிந்தராஜன் சந்நிதி அச்சோழவரசனாலே இடித்துத் தகர்க்கப்பட அங்கே இருந்த உத்ஸவ மூலவிக்கிரகங்கள் சில அடியவர்களால் திருப்பதி கொண்டுபோய்ச் சேர்க்கப் பெற்றுள்ளன' எனக் கூறக்கேட்டு மிகவும் வருந்தி உடனே அடியார் குழாங்களு டன் புறப்பட்டுத் திருப்பதி சென்று, அவற்றை, மலையடி வாரத்தில் கோயில் கட்டி அதில் பிரதிட்டை செய்தருளி வேங்கட மலையேறி ஸ்ரீநிவாசனையும் திருவடி தொழுது வரும் வழியிலுள்ள திருப்பதிகளில் திருமாலை வணங்கிக் கொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார்.

* * * * *

பிறகு இராமாநுஜர் முன் தாம் பாஷ்யத்தில் மூன்றில் இரண்டு கூறே செய்திருந்தாராதலினால், மற்றுமுள்ள ஒரு

கூற்றையும் இப்பொழுது செய்து முடித்து ஸ்ரீபாஷியத்தைத் தலைக்கட்டி யருளினார்.

* * * * *

அப்பொழுது, திருவரங்கத் தமுதனார் என்னும் பெரியார், இராமாநுஜ ரிடத்துள்ள பக்திப் பெருக்கால் இராமாநுஜ நூற்றந்தாதி என்னும் பிரபந்தத்தைச் செய்து, அவர் முன்னிலையில் கொண்டுபோய் அரங்கேற்றினார். அது நூற்றெட்டுப் பாட்டுக்கள் பொருந்தியது. காயத்திரி என்னும் மந்திரம் நூற்றெட்டுத் தடவை ஜபிக்கப் படுதல் போலவே இந் நூற்றெட்டுப் பாட்டுக்களிலுமாக "இராமாஜ" என்னும் ஸ்ரீவைஷ்ணவ ஆசிரியருடைய திருப்பெயர், நூற்றெட்டு முறை ஓதப்படுவதால் அப்பிரபந்தம் ஸ்ரீ வைஷ்ணவர்களாகிய பிரபன்னர்களுக்குக் காயத்திரியாக இருக்கும் காரணத்தால் அதற்குப் பிரபன்ன காயத்திரி எனப் பெயராயிற்று. அப் பிரபந்தம், பொய்கை யாழ்வார் முதலானவர்கள் பாடியருளிய இயற்பா வரிசையில் அதன் முடிவில் சேர்க்கப்பெற்று ஸ்ரீவைஷ்ணவர்களால் ஓதப்பெற்று வருகின்றது.

* * * * *

இராமாநுஜர், கூரத்தாழ்வானுக்குக் கண்போய் விட்டனவே என்று மிகவும கவன்று, ஒருநாள் அவர் ஆழ்வானை நோக்கி "அன்பனே, நீ கண்களின்றி யிருப்பது என் மனத்தை மிகவும் வருத்துகின்றது; ஆதலால், நீ கண்பெற வேண்டும். அதன் பொருட்டுப் பேரருளாளராம் வரதராஜப் பெருமானைத் தோத்திரம் செய்து வேண்டிக்கொள். அவர், தம் அடியவர்களுக்கு வேண்டும் வரங்களைக் கொடுத்தருளும் இயல்புள்ளவர். அவர் மறுமல் உனக்குக் கண்களை ஈந்தருளுவர். அப்பொழுதுதான் என்னுடைய மனத்திற்கு ஆறுதல் உண்டாகும்" என்று கூறியருளினார். ஆழ்வான், தமக்

குக் கண்கள் வேண்டுவதில்லை என்னும் எண்ணமுள்ளவரா யிருந்தாலும், தம் ஆசிரியருடைய திருவுள்ளத்திற்கு மாறு கச் செல்லுவதற்குக் கருத்தற்றவராய் அவர் கூறியவாறே வரதராஜப் பெருமான்மேல் வரதராஜஸ்தவம் என்று பெயர் வாய்ந்த தோத்திரத்தைச் செய்து முடித்தனர். அந்தத் தோத்திரத்தில் ஓரிடத்தில், தமக்குப் பெருமாளை எப்பொ ழுதும் நோக்கிய கண்ணிமையால நோக்குவதற்குரிய பிர கிருதித் தொடர்பற்ற திவ்விய நேத்திரம் வேண்டும என்று கேட்டிருந்தனர். அவ்வாறு அந்தத தோத்திரத்தைச் செய்து முடித்த அன்றிரவு பெருமாள் அவர் கனவில் தோன்றி "ஆழ்வானே, நீ கேட்டவாறே உனக்குக் கண்க ளைத் தந்தோம்" என்றருளி மறைந்து விட்டனர்.

மறுநாள் பொழுது விடிந்தவுடன், ஆழ்வான் இராமா நுஜரிடம் சென்று தாம் இயற்றியுள்ள வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம் செய்துகொள்ள இராமாநுஜரும் கேட்டு மகிழ்ந்து "பெருமாள் இதனைக் கேட்டும் ஏன் இன்னும் கண்களை அருளவில்லை" என, ஆழ்வான், "சுவாமி, அடியே னுக்கு நேற்று இரவு கனவில், பெருமாள் தம்மை எப்பொ ழுதும் அடியேன் நோக்கி மகிழ்வதற்குப் பிரகிருதி சம்பந்த மற்ற திவ்விய நேத்திரம் கொடுத்தருளினர்; அதுவே அடி யேனுக்குப் போதும்" என்று தெரிவிக்க, இராமாநுஜர், அதில் திருப்தி கொள்ளாமல் அவரையும் அழைத்துக் கொண்டு காஞ்சிபுரம் சென்று வரதராஜப் பெருமாள் எதிரில் நின்று கூரத்தாழ்வான் செய்த வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம் செய்யும்படி கூறினர். கூரத்தாழ்வான் தம் ஆசாரியருடைய நியமனப்படியே அதனை வரதராஜர் திருமுன்பு விண்ணப் பித்து வந்தார். அப்பொழுது இராமாநுஜர் ஏதோ வேறு காரியமாகச் சற்று வெளியில் சென்றபொழுது கூரத்தாழ்

வான் தாம் செய்த தோத்திரத்தை விண்ணப்பம் செய்து முடித்து நிற்கப் பெருமாளும் மகிழ்ந்து "பக்தனே, உனக்கு வேண்டுவது யாதாயினும் கொடுப்பதற்கு நாம் சித்தமா யுள்ளோம். உம்முடைய தோத்திரத்தைக் கேட்டபின்னர் மகிழ்ச்சி கொண்டு வரம் கொடாமலிருப்பதற்கு எவரால் முடியும்? ஆதலால் உனக்கு வேண்டுவதைக் கேட்டுக் கொள்க" என்றனர். கூரத்தாழ்வான் பெருமாளை வணங்கி நின்று தமக்கு ஞானக்கண் பெருமாள் அருளியிருக்கையில், இவ்வூனக்கண் வேண்டாம் என்னும் எண்ணத்தால், "அப்பனே, உபய விபூதியையும் உடையவராகிய இராமாநுஜருடைய திருவடிகளை யடைந்த பிறகு, அடியேனுக்குக் கிடைத்தற்கரியது ஒன்று மில்லை; நித்திய விபூதியாகிய மோக்ஷமே அடியேனுக்குக் கிடைத்ததாக ஆயிற்று. ஆகவே, நான் பெற்ற பேறு நாலூரானும் பெறுக. எனக்குப் பகைவர் என்றும் நண்பர் என்றும் இல்லை. யாவரும் நன்மை யெய்த வேண்டும். என்னிடத்தில் பிழைபட்ட காரணத்தால் அவன் தீமை எய்துவது கூடாது. அடியேன் வேண்டுவது ஈதே" என்று கூறி நிற்கப் பெருமாளும் "அன்பனே, உனக்கும் உன்மாட்டுத் தொடர்புடையார் யாவருக்கும் மோக்ஷ வீடு தந்தோம்; நாலூரானுக்கும அவ்வாறேயாகுக" என்று கூறியருளினார்.

அப்பொழுது, வேறுகாரியமாகச் சென்றிருந்த இராமாநுஜர் அங்கே வந்து அருளாளருக்கும் ஆழ்வானுக்கும் நடந்தவற்றைத்தெரிந்து அவ்விருவரையும் வெறுத்து இனிச் செய்யலாவது என் எனத் திகைத்து நிற்க, அருளாளர், இராமாநுஜருடைய எண்ணத்தையும் ஈடேற்றி வைகக வேண்டும் என்று திருவுள்ளம் பற்றி "இராமாநுஜரே, ஆழ்வான் தன்னுடைய வெளிக்கண்ணால் உம்மையும் நம்மையும் மட்

டும் பார்க்கட்டும்'' என்று கூறியருளினார். உடனே கூரத்தாழ்வான் கண்ணொளிபெற்றுப் பெருமாளுடைய திருமேனியிலுள்ள அணிகலன் இவை இவையென்று சொல்லிப் பிறகு இராமாநுஜருடைய திருவுடம்பின் சோபையையும் கண்குளிர நோக்கினார். அவர் பார்வை இவ்விருவர்மட்டிலே நின்றது. மற்ற உலகத்துப் பொருள்களைப் பார்ப்பதற்கு இல்லையாயிற்று. அதனை ஆழ்வானும் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. பிறகு இராமாநுஜர் ஆழ்வானுடன் கச்சிமாநகரினின்றும்புறப்பட்டுத்திருவரங்கமாநகர்வந்துசேர்ந்தனர்.

* * * * *

இவ்வாறு இருமொழி வேதாந்தங்களையும் இயல்புற யாவருக்கும் தெளிய உரைத்துக்கொண்டு எழுந்தருளியிருந்த இராமாநுஜருடைய திருவடிகளையடைந்து ஆசிரயித்தயர்கள் இருநூற்றுவருக்கும் மேற்பட்டவர்களாவார்.

இராமாநுஜர் தம்மை வந்து ஆசிரயித்த யாவரையும் வேறுபாடின்றி ஒப்பநோக்கி அருள் பாலித்து அவர்களுக்கு ஸ்ரீவைஷ்ணவ சமயத்துக் கொள்கைகளை விளங்க உபதேசித்து, அவர்களியற்பெயருடனோ அன்றி அவையில்லாமலோ ஆழ்வான், ஆண்டான், ஆச்சான், நம்பி, பட்டர், ஜீயர், அரையர், அம்மாள், பிள்ளான், தாசர், அம்மை முதலிய சிறப்புப் பெயர்களையும் நாடு, ஊர் முதலியன பற்றிய பெயர்களையும் ஈந்து வாழ்வித்தருளினது மன்றித் தம்முடைய தர்சனமாகிய இந்த விசிஷ்டாத்வைதமதம் பின்னதடாகமாகாமல் இவ்வுலகில் என்றென்றும் நீடித்திருக்க வேண்டும் என்பது கருதித் தம்முடைய சிஷ்யர்களில் எழுபத்துநால்வரைத் தெரிந்தெடுத்து அவர்களுக்குச் சிம்மாசனாதிபதிகள் என்ற சிறப்பைச் செய்து, அவர்கள், உலகத்தில் மற்றையாவருக்கும் பஞ்ச சம்ஸ்காரம் முதலானவற்

றைச் செய்து திருமந்திரம் முதலிய வற்றை உபதேசித்து அவர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாகச் செய்வதற்குரிய அதிகா ரத்தைக் கொடுத்தருளினர். அவ்வாறு அதிகாரம் பெற்ற சிம்மாசனாதிபதிகளாவார்:—

1 ஸ்ரீ ஆளவந்தார் குமாரர் சொட்டைநம்பி, அவர் குமாரர் என்னாச்சான், அவர் குமாரர் பிள்ளையப்பன்.
2 பெரிய நம்பி குமாரர் புண்டரீகர்
3 திருக்கோட்டியூர்நம்பி குமாரர் தெற்காழ்வான்.
4 திருமாலையாண்டான் குமாரர் சுந்தரத்தோளுடையார்.
5 பெரிய திருமலைநம்பி குமாரர் இராமாநுஜனும், பிள்ளை திருமலை நம்பியும.
6 கூரத்தாழ்வான் குமாரர் பட்டரும் சீராம பிள்ளையும்.
7 முதலியாண்டான் குமாரர் கந்தாடையாண்டான்.
8 நடுவிலாழவான்.
9 கோமடத்தாழ்வான்.
10 திருக்கோவலூராழ்வான்.
11 திருமோகூராழ்வான்.
12 பிள்ளை பிள்ளை யாழ்வான்.
13 நடாதூராழ்வான.
14 எங்களாழ்வான்.
1ட அநந்தாழ்வான்.
16 மிளகாழ்வான்.
17 நெய்யுண்டாழ்வான்.
18 சேட்டலூர்ச சிறியாழ்வான்.
19 வேதாந்தியாழ்வான்.
20 கோயிலாழவான்.
21 உக்கலாழ்வான்.
22 அரணபுரத்தாழ்வான்.
23 எம்பார்.
24 கிடாம்பியாச்சான்.
25 கணியனூர்ச் சிறியாச்சான்.
26 ஈச்சம்பாடியாச்சான்.
27 கொங்கிலாச்சான்.
28 ஈச்சம்பாடி ஜீயர்.
29 திருமலை நல்லான.
30 சட்டம்பள்ளிஜீயர்.
31 திருவெள்ளறைஜீயா.
32 ஆட்கொண்ட வில்லிஜீயர்.
33 திருநகரிப்பிள்ளை.
34 காராஞ்சி சோமயாஜியார்.
35 அலங்காரவேங்கடவர்.
36 நம்பிகருநதேவர்.
37 சிறுபள்ளி தேவராஜ பட்டா.
38 பிள்ளையுறந்தையுடையார்.
39 திருக்குருகைப்பிரான் பிள்ளான்.
40 பெரியகோயில்வள்ளலார்.
41 திருக்கண்ண புரத்தரையர்.
42 ஆசூரிப்பெருமாள்.
43 முனிப்பெருமாள்.
44 அம்மங்கிப்பெருமாள்.
45 மாருதிப்பெரியாண்டான்.
46 மாருதிச் சிறியாண்டான.
47 சோமாசியாண்டான்.
48 ஜீயராண்டான்.
49 ஈசுவராண்டான்.
50 ஈயுண்ணிப்பிள்ளையாண்டான்.
51 பெரியாண்டான்.
52 சிறியாண்டான்.
53 குறிஞ்சிபுரச்சிறியாண்டான்.

54 அம்மங்கியாண்டான்.
55 ஆளவந்தாராண்டான்.
56 அருளாளப் பெருமாளெம்பெருமானார்.
57 தொண்டனூர நம்பி.
58 மருதூர்நம்பி.
59 மழூவூர் நம்பி.
60 திருக்குறுங்குடிநம்பி.
61 குரவை நம்பி.
62 குடும்பை நம்பி.
63 வடுக நம்பி
64 வங்கிபுரத்து நம்பி.
65 ஸ்ரீபராங்குச நம்பி.
66 அம்மங்கியம்மாள்.
67 பருத்திக்கொல்லையம்மாள்.
68 உக்கலம்மாள்.
69 சொட்டையம்மாள்.
70 மடும்பையம்மாள்.
71 கோமாண்டூர் பிள்ளை.
72 கோமாண்டூர் இளையவல்லி.
73 கிடாம்பிப்பெருமாள்.
74 ஆற்காட்டுப்பிள்ளான்.

என்பவர்களாம்.

அப்பால், இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யசிம்மாசனத்தை நடாதூராழ்வானாகிய வரத விஷ்ணு ஆசாரியருக்கும் திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கும் கொடுத்து அனுக்கிரகித்தருளினார். பகவத்விஷயம் என்ற திருவாய் மொழி வியாக்கியானத்தையும் மற்றைப் பிரபந்தங்களை யெடுத்துரைப்பதையும் (பகவத் விஷய சிம்மாசனத்தையும்) திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கு அருளி, ஸ்ரீஸூக்தி சிம்மாசனத்தைப் பட்டருக்குக் கொடுத்தருளி, யாவரையும் நோக்கி, 'நீங்கள் அனைவரும் எனக்குப்பின்னர் இந்தத் தர்சனத்திற்குப் பட்டரைத் தலைவராகக்கொண்டு அவருக்குக் கீழ்ப்படிந்து நடவுங்கள்' என்று கட்டளையிட்டருளினார்.

---

## இராமாநுஜர் நித்திய விபூதிக்கு எழுந்தருளியது.

முடிவில், இராமாநுஜர், முதலியாண்டானுடைய குமாரர் கந்தாடை யாண்டானுடைய வேண்டுகோளுக்கிணங்கித் தம்மைப் போலவே ஒரு விக்கிரகத்தைச் செய்வித்து அதனை அவருக்கீந்து, அதனைத் தம்முடைய பிறந்த தலமாயுள்ள ஸ்ரீ பெரும்பூதூரில் பிரதிஷ்டை பண்ணச்

சொல்லியருளினார். கந்தாடையாண்டானும் அதனைப் பெற்று ஸ்ரீ பெரும்பூதூர் சென்று, அங்கே இராமாநுஜர் குறித்துக் கொடுத்த நாளில் பிரதிஷ்டை செய்தனர். அங்கே பிரதிஷ்டை செய்யும்பொழுது இராமாநுஜருடைய சக்தி அவ்விக்கிரகத்தில் நுழைந்துகொண்ட தன்மையினால் இங்கே அவருடைய திருமேனி தளர்ச்சியுற்று நோவுண்டாக, அப்பொழுது அவர் தமக்கு நோவுண்டான காரணம், கந்தாடையாண்டான் தம் விக்கிரகத்தை அன்று பிரதிஷ்டை செய்ததே என்று கண்டுகொண்டார். உடனே, அவர் கந்தாடையாண்டானைத் தம்மிடத்திற்கு வருமாறு திருமுக மனுப்ப, அவரும் அப்பொழுதே புறப்பட்டுவந்து இராமாநுஜரைத் தண்டம் சமர்ப்பித்து அவருடைய திருவடிக்கீழ்க் குற்றேவல்களைச் செய்து கொண்டிருந்தனர்.

அப்பொழுது, இராமாநுஜர் மிகவும் தள்ளாமையுடன் ஒரு நாள் கோயிலுக்குச் சென்று அரங்கத்தமர்ந்த பிரானை அடிதொழுது தமக்கு இவ்வுலகத்தில் வெறுப்புப் பிறந்து விட்டது என்றும் மேலுலகம ஈந்தருளவேண்டும் என்றும் விண்ணப்பம் செய்து நிற்கப் பெரிய பெருமாள், 'உடையவரே, நாம் உம்மைக்கொண்டு இன்னும் இவ்வுலகைத் திருத்த நினைத்துள்ளோமே; நீர் அறப்பதறினீரே' என்று மனவருத்தத்துடன் கூற, இராமாநுஜர், "ஐயனே, அடியேன் மேவியமர்கின்றவமுதே, இமையோரதிபதியே, அடியேனுக்குப் பிராயங்கள் நூறும் சென்றன; மேலும் இருபதும் ஆயின. இனிமேல் இவ்வுலகத்தில் எவ்வாறு இருக்க முடியும். ஆதலால், அடியேனுக்கு இப்பொழுதே அடிசேர்வண்ணம் அருளவேண்டும். பூவார்கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே" என்று விண்ணப்பித்துக்கொள்ளப் பெருமாளும் "இன்றைக்கு ஏழாம் நாள்

அப்படியே செய்யக்கடவோம்'' என்று திருவுள்ளமாக, இராமாநுஜரும், "சுவாமி, அடியேனுடைய சம்பந்தசம்பந்திகள் எல்லாரும் நான் பெற்ற உலகம் பெறவேண்டும்'' என்று கேட்டுக்கொள்ள எம்பெருமானும் 'அவ்வாறேயாகுக' என்றருளி அவருக்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் சடகோபம் முதலிய மரியாதைகளைச் செய்வித்து விடைகொடுத்தருளினார். பிறகு இராமாநுஜர் தம் மடத்தையடைந்து அங்கே யாவரையும் அழைப்பித்து அவர்களுக்கு இதற்குமுன் கூறாத அர்த்த விசேஷங்களையெல்லாம் அன்போடு கூறியருளித் தாம் திருநாடலங்கரிக்கப் போவதை அவர்களுக்குத் தெரிவித்தருளினார். அதனைக்கேட்ட அவருடைய சிஷ்யர்கள் யாவரும ஆறாராய் இவருக்குப் பிறகு நாம் உயிர் தரிக்ககில்லோம் என்று துக்கித்து நிற்க, இராமாநுஜரும் அவர்களுக்குப் பற்பல வார்த்தைகள் கூறித் தமக்குப்பின் அவர்கள் உயிர் நீக்கக் கருதக்கூடாது என்று கூறித் தேற்றினர். அப்பால் அவர் பட்டருடன் கோயிலுக்குச் சென்று பெருமாள் திருமுன்பு தம் சிஷ்யர்களனைவரையும் நோக்கி, "இனி, நமக்குப்பின் தர்சனத்தைப் பட்டர் நடத்திக்கொண்டு செல்லுவார்; நீங்கள் அவருக்கு இனியராயிருங்கள்'' என்று கூறிப் பட்டரை நோக்கிப் "பட்டரே, மேற்றிசை நாட்டில் வேதாந்தி என்று ஒரு பெரிய வித்வான் இருக்கின்றான் எனக் கேட்டுள்ளோம். நீர் அங்கே சென்று அவனை நம் தர்சனத்தில் சேரும்படி திருத்துக'' என்று கூறி, யாவருடனும் மடத்துக்குச் சென்று, கந்தாடையாண்டான், அருளாளப்பெருமா ளெம்பெருமானார், எம்பார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், நடுவிலாழ்வான் முதலானவர்களைத் தம்முடைய சிஷ்யர்களுள் முதல்வராகக்கண்டு அவரிடம் மற்ற சிஷ்யர்களைப் பகுந்து கொடுத்துத்தாம் செய்வனவற்றையெலாம் செவ்வனே செய்து முடித்துக் கொண்டார்.

இவ்வாறு எல்லாவற்றையும் செய்து முடித்துக்கொண்ட இராமாநுஜர் திருநாடலங்கரிக்கப் போகின்றார் என்ற செய்தி நாடெங்கும் பரவ, யாவரும் அவரை வணங்குவதற்கு அம் மடத்தில் வந்து கூடியிருந்தனர். பல்வகை வாத்தியங்கள் ஒலித்துக்கொண் டிருந்தன. இராமாநுஜர் தள்ளாமை யுடையவராயிருந்தும் அன்று வைகறையில் துயிலுணர்ந்து எழுந்து தாம் செய்ய வேண்டிய நித்தியக்கடமைகளை நிறை வேற்றித் தம்முடைய ஆராதனமான பேரருளாளருக்குத் திருவாராதனம் முதலியவற்றைச் செய்து வெளியிந்திரியங் களை யுள்ளேயடக்கி மனத்துடன் கூட்டி வேறு செயல்களில் நினைவற்றவராய்த் தம் ஆசிரியரைத் தியானம செய்து, தமது பக்தியை, ஸ்ரீவைகுண்டலோகத்திலே திவ்விய மணிமண்ட பத்திலே அழகிய பொற் சிம்மாசனத்தில் நித்ய சூரிகள், ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவில்லா அடிமை செய்து மகிழ, அகல கில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கை மகிழ்ந்துறை மார்பினனாய் விளங்குகின்ற பரம் பொருளாகிய ஸ்ரீ வாசுதேவனிடத்தில் செலுத்தித் தமது உடலில் ஆசையற்று, அடியார்கள் குழாங்கள் உபநிஷத்து வாக்கியங்களையும் 'சூழ்விசும் பணிமுகில்' என்று தொடங் கும் திருவாய் மொழியையும் உரத்த தொனியுடன் உத் கோஷிக்கக் கேட்டுமகிழ்ந்து இவ்வுடலை விட்டுப் பிரிந்து பிரமரந்திரத்தின் வழியாக மிக்க ஒளிமயமாய்க் கிளம்பித் தேவர்கள் மலர்மழை பொழியக் கந்தருவர் கானம்பாட அப்சரசுகள் நடனமாட வசு ருத்திர ஆதித்திய மருத்துக் களும் சித்தர் உரகர் கருடர் யக்ஷர் கின்னரர் கிம்புருடர் வித் யாதரர் இருடிகணங்கள் முதலியோர்களும கூட்டங் கூட்ட மாய் ஆகாசவீதியில் நின்று கொண்டாட, ஆதிவாஹிகர் என்ற புருடர்கள் கைபிடித்து அழைத்துச்செல்லத் தேவ யான மார்க்கம் (அர்ச்சிராதி) என்று சொல்லப்பட்ட சூரிய

கிரணங்கள், பகல், பூர்வபக்ஷம், உத்தராயணம், சம்வத்ஸரம் என்ற ஆண்டு, சூரியன், சந்திரன், வித்யுதம், வருணன், இந்திரன், பிரஜாபதி முதலியவர்களுடைய உலகங்களின் வழியே அத்தேவர்கள் வழிகாட்டச் சென்று விரஜா நதியில் நீராடிச் சுத்த சத்துவமயமான தேகத்துடன் அமாநவ புருஷனால் பரமபதநாதனுடைய சந்நிதிக்கு அழைத்துக்கொண்டு போகப்பட்டார். அங்கே பரபதநாதன் முதல் கூரத்தாழ்வான் வரையுள்ள நித்ய சூரிகளும் பூர்வாசாரியர்களும் இராமாநுஜருடைய வருகையை நல்வரவாகக்கொண்டாட, அவ்வாறு சென்ற அவர், ஆயிரம் சுடர்வா யரவணையோடே, நம்பி மூத்தபிரானைப் போலே கூடியருளினார்.

அப்பால், அருளாளப்பெருமாளெம்பெருமானார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், எம்பார், வடுகநம்பி, கந்தாடையாண்டான் முதலானவர்கள் தம் ஆசிரியருடைய பிரிவிற்கு ஆற்றாராய், ஐயோ கண்ணபிரான் அறையோ! என்றும், முறையோ அரவணைமேற் பள்ளிகொண்ட முகில்வண்ணனே! என்றும் பலவாறு பெருமிடறு செய்து, பின்னர் ஒருவரோடொருவர் தேற்றத் தேறி, அவர்கள், ஸ்ரீரங்கநாதன் சந்நிதியிலிருந்து வரவிட்ட சிறப்புக்களை அவ்விராமாநுஜருக்குச் சார்த்தி அலங்கரித்துத் திருக்குருகைப்பிரான் பிள்ளானைக் கொண்டு பிரமமேத சம்ஸ்காரத்தாலே செய்ய வேண்டிய கிரியைகளை யெல்லாம் செய்து முடித்து யதி சம்ஸ்கார விதிப்படி திருக்குழி தோண்டி அதில் அவருடைய உடம்பைத் திருப்பள்ளிப் படுத்தினார்கள்.

பின்னர்க் கந்தாடையாண்டான் பட்டர் முதலானவர்கள் ஸ்ரீரங்கநாதனுடைய கட்டளையின் வண்ணமே, இராமாநுஜரைப் பள்ளிப் படுத்தின இடத்தில் ஓர் அர்ச்சா விக்கிரகத்தைச் செய்வித்துப் பிரதிஷ்டைபண்ணி, அவருக்கு

வருஷம் முடியச் செய்யவேண்டிய காரியங்களையும் செய்து முடித்து, வருடந்தோறும் சித்திரையில் ஆதிரை நாளை மிகவும் சிறப்பான திருவிழாவாக யாவரும் கொண்டாடும்படி செய்து, திங்கள்தோறும் வருவதான திருவாதிரை நாளையும் சிறப்பித்துக்கொண்டு வரும் வண்ணம் செய்தார்கள். திருக்குருகைப்பிரான் பிள்ளானால் திருவேங்கடமலையில் இராமாநுஜருடைய விக்கிரகம் பிரதிஷ்டை பண்ணப்பட்டு வருடந்தோறும் திருவிழா நடந்தேறப்பெற்று வருகின்றது.

இராமாநுஜர் நித்திய விபூதிக்கு எழுந்தளின செய்தி நாடெங்கும் பரவ, அவருடைய திருவடியை அடைந்துய்ந்த அவ்வவ்விடங்களிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவரும் திருவரங்கப் பெருநகருக்கு எழுந்தருளிவந்து பட்டர் முதலானவர்களிடத்தில் உடையவர் திருநாடலங்கரித்தமையை உசாவி ஒருவாறு தேறி அவருடைய அர்ச்சா விக்கிரகத்தை வணங்கி வழிபட்டுத் தத்தம் ஊர்கள் சென்றிருந்தார்கள்.

இராமாநுஜருக்கு இப்பால் பராசரபட்டர் ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தை நிர்வஹித்து நடத்தினர்.

(முற்பகுதி முற்றிற்று.)



ஸ்ரீ:

# ஸ்ரீ இராமாநுஜர் சரித்திரம்.

## (பிற்பகுதி)

---

1. *இராமாநுஜர் திருவனந்தனாகிய ஆதிசேஷனுடைய அவதாரமாகச் சொல்லப்பட்டிருந்தாலும்,*

"அடையார் கமலத்தலர்மகள் கேள்வன்கை யாழியென்னும்
பாடையோடு நாந்தகமும்படர் தண்டுமொண் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங் கமுமிப் பூதலங் காப்பதற்கென்று
இடையே யிராமா நுஜமுனி யாயின விந்நிலத்தே"

என்னும் இராமாநுஜ நூற்றந்தாதிச் (33) செய்யுளில் திருமாலினுடைய ஐம்படைகளும் இராமாநுஜ முனிவராக வந்தவதரித்தன என்று கூறியிருப்பதால் அவ்வனந்தன் அவதாரத்தில் ஐம்படைகளின் அம்சமும் பொருந்தியிருந்தன என்பதே கருத்தாகக் கொள்க. அன்றியும் சிறு குழந்தைகளுக்குப் பகையாகப் பேய், பூதம், பிசாசு, குறள் முதலியன அணுகாமலும் அரிஷ்டம் முதலியன நேராமலும் இருப்பதற்காகத் திருமாலின் பஞ்சாயுதங்களின் வடிவமாகச் செய்யப்படுவதான ஐம்படைத்தாலி என்னும் ஆபரணம் அச்சிறுவர்களைக் காப்பதைப்போல, இவரும் இந்தப் பூதலம் காப்பதற் கென்று தோன்றியவராதலின், அவ்வைம்படையி னம்சமாகக் கூறப்பட்டனராதல் வேண்டும்.

* * * * *

2. *இராமாநுஜர் அரசன் மகளுடைய பிரமரக்ஷஸை ஓட்டினார் என்று கூறப்பட்டுள்ள விஷயம்; அவர் இளமை*

யாக இருக்கும் பொழுது காஞ்சீபுரத்தில் எந்த அரசன் இருந்தான் என்பதும் அவனுடைய மகளுக்குப் பிரம ரக்ஷஸை அவர் ஓட்டியிருந்தால் அவன் இராமாநுஜரைக் கொண்டாடி அவரைப் பின்பற்றாமலிருந்திருப்பானா என்ப தும் அவனால் இராமாநுஜருக்குப் பலம் ஏற்படாதிருந்திருக் குமா என்பதும்

* * * * *

3. யாதவப் பிரகாசனுடைய கொள்கைகளை மறுத் துத் தம் கொள்கைகளை நிலைநிறுத்தினர் என்பதை:—

"பேதையர் வேதப் பொருளிதென் றுன்னிப் பிரமநன்றென்(று)
ஓதிமற் றெல்லா வுயிருமஃதென் றுயிர்கள்மெய்விட்(டு)
ஆதிப்பரனொடொன் றாமென்று சொல்லுமவ் வல்லலெல்லாம
வாதில் வென்றானெம் மிராமாநுசன்" (இரா-நூற்-58)

"கட்டப் பொருளை மறைப்பொரு ளென்று கயவர் சொல்லும்
பெட்டைகெடுக்கும் பிரான்" (இரா-நூற்-93.)

"பொய்யைச சுரக்கும் பொருளைத துரந்திந்தப் பூதலததே
மெய்யைப் புரக்கு மிராமா நுசன் (இரா-நூற்-79)

என்று வந்துள்ள பாட்டுக்களில், அமுதனார் யாதவப் பிரகாசனுடைய கொள்கைகளை யெடுத்துக்கூறி அதனை இராமாநுஜர் மறுத்துள்ளமையையும் கூறியதனாலறியலாம். யாதவன், 'கப்யாசம்' என்னும் மறைக்குக் கட்டப்பட்டுப் பொருள் கூறினான் என்பதைக் 'கட்டப் பொருளை' என்று தொடங்கும் அடிகளில் ஊகிக்கலாம்.

* * * * *

4. இராமாநுஜருடைய குடும்பத்தில், அவர் இளமை யாக இருக்கும காலத்திலேயே அவர் தந்தை விண்ணுல கெய்தினர். அவருடைய தந்தையிருக்கும் பொழுதே இரா

மாநுஜருக்கு உடன்பிறந்தவர்களான பெண்மணிகளிரு வரையும் அவர் தந்தை வாழ்க்கைப்படுத்திப் புக்ககத்திற்கும் அனுப்பியதனால் இராமாநுஜருக்கு அவ்விஷயத்தில் மனக் கவலை இல்லையாயிற்று. அவ்விருவரில் ஒரு பெண்மணியினு டைய குமாரர் முதலியாண்டானவார். மற்றொரு பெண் ணரசியின புதல்வர் நடாதுராழ்வானவார். இராமாநுஜருக் கும் தந்தை யிருக்கும் காலத்திலேயே விவாகம் நடந்துவிட் டது. ஆதலால் அவருக்குக் குடும்பக்கவலை மிகுதியாக இல்லையென்றே கூறலாம்.

அவர் தாய் சொற்றுறவாது காஞ்சிபுரத்திலிருந்து கலை பயின்று வந்தனர். அங்கே யாதவப்பிரகாசனுக்கும் அவருக் கும் பகைமை உண்டாயிற்று. அவனைத் துறந்தார். பெரு மாளைப்பற்றி அவருக்குத் தொண்டு பூண்டார். அக் காலத் தில் அவருடைய தாயார் இவவுலகினைத் துறந்திருக்க வேண்டும். அதன் பின்னரே இராமாநுஜர் துறவு பூண்ட வராதல் வேண்டும். மனைவியினுடைய பிழைகண்டு இல் லறத்தைத் துறந்தவர் மாதா இருந்திருந்தால் அவரைக் கருதித் துறவாமலிருந்திருப்பார். துறவிகளும் துறவாமல் செய்யவேண்டிய மாதாவின் ஈமக்கடனை இராமாநுஜர் துறவுபூண்ட பிறகு செய்ததாக எவ்விடத்தும் கூறப்பட வில்லை; ஆதலால், அவர் துறவுக்கு முன்னரே அக் கடமை களை நிறைவேற்றும்படி நேர்ந்திருக்க வேண்டும்.

இராமாநுஜருடைய இல்வாழ்க்கை அவருக்கு இன்பம் தாவில்லை என்பது அவருடைய சரிதப் போக்கால் நன்கு விளங்குகின்றது. அவருக்குவாய்த்த மனைவி சில பல விஷ யங்களில் அவருடைய கருத்திற்கு இசைந்து வாராமையே அவர் துறவு பூண்பதற்குக் காரணமாயிருந்தது எனத் தெரி கின்றது.

"பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம—சற்றேனும்
ஏறுமா றாக இருப்பாளே யாமாகில்
கூறுமற சந்நியாசம் கொள்"

என்றவாறு அவர் தம்மனைவியிடத்தில் இல்லறத்தை நடத்துவதற்குரிய குணங்கள் இல்லை என்று கண்டவுடன் இராமாநுஜர் துறவறத்தை மேற்கொண்டனராவார்.

5. இராமாநுஜர் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தின் உண்மைப்பொருளை நாடியறிய வேண்டும் என்று மிக்க அவாவுள்ளவராயிருந்தார். ஆதலின் அவர் அப்பொருளை எவரிடத்திலிருந்து பெறலாம் என்று கருதும்பொழுது, பெரிய நம்பி முன்னமேயே அவருக்குத் துவயத்தையும் அதன் பொருளையும் தாம் உபதேசித்திருந்தாலும் இன்னும் சில பொருள்கள் ஆளவந்தார் திருக்கோட்டிநம்பிக்கு உபதேசித்திருபபதால் அவற்றையும் இராமாநுஜர் பெறுவது நன்று என்று கருதி அவரைத் திருக்கோட்டி நம்பியிடத்திற்கு ஆற்றுப்படுத்தினர். இராமாநுஜர் திருக்கோட்டி நம்பியிடத்திலிருந்து பெரிய திருமந்திரத்தையும் சரமசுலோகத்தையும் அவற்றின் பொருள்களையும்பெறுவதறகுப்பட்டினிகிடந்தும பலமுறை நடந்தும் அலுத்துப் பட்டசிரமம் எண்ணத்தொலையா; எழுத எட்டிலடங்கா. அவ்வாறு அவர் சிரமப்பட்டதனாலேயே அவருக்கு மற்ற மனிதர்களிடத்துக் கருணை மிகுதியாக உண்டாயிற்று என்று கூறலாம். இராமாநுஜருடைய கருணை முழுவதும் வெளிப்பட்ட இடம் இஃதேயாகும். மோக்ஷத்தையே கொடுக்கக் கூடிய நல்ல பொருள்களைப் பெறுவதற்கு ஒவ்வொருமானிடரும் இவ்வாறு சிரமத்திற்கு உள்ளாவார்களோ? ஆகார். அவர்கள்

கதியாதாவது? நிரகுக்கே செல்வதோ? யாவரும் தன்னால் விதிக்கப்பட்ட நல்வழியில் சென்று தன்னைவந்து கூட வேண்டும் என்பது கருணைக் கடலாகிய பரம்பொருளின் எண்ண மன்றோ? அதன் பொருட்டே அப்பரம்பொருள், "நீ எல்லாப் பொருள்களிலும் பற்றை விட்டு, என் ஒருவனு டைய திருவடிகளையே சரணமாகப் பற்று, நான் உன்னை மோக்ஷத்தை யடைவதற்குத் தடையாயினவற்றைப் போக்கி மோக்ஷத்தை யடைவிக்கின்றேன்" என்று மோக்ஷ வாசலில் நின்று கொண்டு எல்லாவுயிர்களையும் கூவியழைக் கின்றானன்றோ? அதனால் பரம் பொருளினுடைய எண்ணம் என்ன? யாவரும் தடையின்றித் தன்னைவந்து கூடவேண்டு மென்பதலலவோ? ஆகவே அவனை யடையும் வழிக்குத் தடைசெய்ய லாகுமோ? ஆயினும் அவ்வாறு அவன் கூவு வதை எவ்வுயிர் பொருட்படுத்திற்று. இராமாநுஜர் வந்து தோன்றிப் பரம்பொருளுடைய வார்த்தையை யாவருக்கும் எடுத்து விளக்கி மோக்ஷத்தை யடைவது அருமையன்று; எளிமையிலும் எளிமை என்று கூறக்கண்டல்லவோ உயிர் கள் நன்மை யடைவதற்கு ஏதுவாயிற்று. ஆதலின் இதனைப் பார்க்கிலும் கருணாவதாரம் வேறு எதுவுண்டு. தாம் ஆசாரி யனுடைய ஆணையை மீறித் தீக்கதிக்கட் சென்றாலும் செல்லலாம்; உயிர்கள் அனைத்தும் உய்ய வேண்டும் என்று நினைப்பவர் யார்? அவர் இராமாநுஜரேயல்லரோ?

"அடல்கொண்ட நேமிய னாருயிர் நாதனன் றாரணசொல்
கடல்கொண்டவொண்பொருள் கண்டளிப்பப்பின்னுங்காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத்தானுமவ்வொண்பொருள்கொண்டவர்பின்
படரும் குணனெம் மிராமாநுஜன்" (இரா-நூற்-36)

"* * * மாயனன் றைவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்
பாரினில் சொன்ன இராமாநுஜன்" (இரா-நூற்-68)

என்னும் செய்யுள்களால் மேலே கூறிய உண்மை புலப்படு மன்றோ. இராமாநுஜர் பெரிய திருவெட்டெழுத்தின் பொருளையோ சரம சுலோகத்தின் பொருளையோ தம் ஆசிரியரிடத்திலிருந்து பெற்றுப்போய், ஸ்ரீவைஷ்ணவர்களுடைய கோஷ்டியில் யாவருக்கும் தெரிய உரைத்த கருணையை அவருடைய ஆசிரியரே பாராட்டி நீரே எம் கடவுள் என்பதாக எம்பெருமானார் என்று கூறியதால் கடவுளுக்குள்ள கருணை இராமாநுஜரிடத்திலிருந்தது என்பது விளங்கவில்லையா?

* * * * *

6. இராமாநுஜர் ஸ்ரீ வியாசபகவானுலருளிச் செய்யப் பெற்ற பிரம சூத்திரத்திற்குப் பாஷியம் செய்தருளினார். இவ்வியாசர், பொருளறிய முடியாமல் ஒன்றோடொன்று கலந்து குவித்திருந்த வேதங்களை யெல்லாம் ஓரிடத்தில் திரட்டித் தமது சிஷியர்களால் அவை உலகத்தில் பரவுமாறு, தாம் இருக்கு, யஜுசு, சாமம், அதர்வணம் என நான்காக வகுத்தமையால் வியாசர் என்ற காரணப்பெயரை யுடையவரானார். இவருக்கு ஆதியில் பெற்றோர்களால் இடப்பட்ட பெயர் கிருஷ்ணன் என்பதாம். இவர் தீவில் பிறந்த காரணத்தால் த்வைபாயனர் எனவும் பெயர் பெற்றார். வேதத்தின் பூர்வ பாகத்திற்குக் கர்மகாண்டம் என்று பெயர். அக்கர்ம காண்டத்திலுள்ள விஷயங்களை யெல்லாம் அடக்கி மிகவும் சுருக்கமாகிய சொற்களால் பொருள் விளங்குமாறு சூத்திர வடிவத்தாலாகிய நூல் ஒன்றை ஜைமினி முனிவர் செய்துள்ளார். அவர் வியாசருடைய சிஷ்யர்; வியாசருடைய கட்டளையின் வண்ணமே ஜைமினி முனிவர் அவ்வாறு செய்தனர் என்பர். அதற்குப் பூருவ மீமாம்சை என்று பெயர். வேதத்தில் தேவதா காண்டத்தை

விளக்குவதான சூத்திர வடிவமுள்ள ஒரு நூலை வியாச ருடைய கட்டளையின் வண்ணம் காசகிருத்ஸ்ன முனிவர் செய் தினர் என்பர். பின்னர், வியாசர் தாமே, பிரமமாகிய பரம் பொருளைப்பற்றிக் கூறும் வேதத்தின் உத்தரபாகத்தை (வேதமுடிவை) ஐந்நூற்று நாற்பத்தைந்து சூத்திரங்களடங் கிய ஒரு நூலாகச் செய்தருளினர். அதற்குப் பிரம சூத்திரம் என்றும் உத்தர மீம்சை என்றும் பெயர். அவ்விரண்டு மீமாம்சைகளும் சேர்ந்து ஒரே சாஸ்திரமாக, மீமாம்சாசாஸ் திரம் என்று உலகில் வழங்குகின்றது. பொருளை விளக்குவ தில் அவை ஒன்றற் கொன்று உதவியாயுள்ளன.

உத்தர மீம்மாசையாகிய பிரம சூத்திரத்திற்கு வியாச ருடைய கருத்தைத் தழுவிப் போதாயனர் என்று பெயர் வாய்ந்த முனிவர் ஒரு விருத்தி செய்துள்ளார். அவரன்றி மற்றும் பலரும் அதற்குப் பாஷியம் வகுத்துள்ளார்கள். போதாயனரும் பாஷியம் செய்தவர்களில் பெரும்பாலாரும் விசிஷ்டாத்வைதமதக் கொள்கையை அனுசரித்தே உரை யெழுதியுள்ளார்கள். இராமாநுஜருக்குச் சில நூற்றாண்டு களுக்கு முன்னர், ஸ்ரீமத் சங்கரர் என்பவர் சூத்திரத்திற்கு அத்வைதமதச் சார்பாக ஒருபாஷியம் செய்துள்ளார். இரா மாநுஜர் அவருடைய கொள்கைகளையெல்லாம் தம்முடைய பாஷியத்தில் எடுத்து மறுத்து, அச்சங்கரர் சிற்சில இடங் களில் வேதத்தையே ஒப்புக் கொள்ளாமலும் எழுதியிருக்கி றார் என்று கூறியுள்ளார்.

இராமாநுஜர், வியாசசூத்திரத்திற்குப் போதாயனரால் செய்யப் பெற்றுள்ள விருத்தி என்னும் உரை, காஸ்மீர தேசத்து அரசனுடைய புத்தகசாலையி லுள்ளது என்று கேள்விப்பட்டு அங்கே தம் சிஷ்யர்களுடன் சென்று அப் புத்தகத்தைத் தாம் பார்வையிடவேண்டும் என்று அவ்வரச

னிடம் கேட்டனர். அவ்வரசனுக்கு அதனை இராமாநுஜரிடம் கொடுப்பதற்கு மனமிருந்தாலும் அவனுடைய சமஸ்தானத்துப் பண்டிதர்கள், அதனை அவருக்குக் கொடுக்க உடன்படவில்லை. ஆயினும் அவர்கள் அதனை அவ்விடத்திலேயே ஒரு முறை இராமாநுஜர் பார்ப்பதற்கு இடங்கொடுத்தனர். அதனை இராமாநுஜர் பெற்றுத் தாமும் கூரத்தாழ்வானும் ஒருமுறை பார்த்த மாத்திரத்திலே தம்மனத்தில் தேக்கிக்கொண்டு, பின்னர் ஸ்ரீபாஷியத்தை அதனைத் தழுவியே எழுதினர் என்ப. இராமாநுஜர் பாஷியம் எழுதுவதற்குக் கூரத்தாழ்வான் உதவி மிகுதியும் உண்டு என்னலாம். பாஷியமானது, சுருதி, ஸ்மிருதி, இதிஹாஸம், புராணம், ஆகமம் முதலியவற்றின் கருத்துக்களை உட்கொண்டு செய்யப் பெற்றதாயிருப்பினும் அப்பாஷியத்திற்குப் பெரிய வழி காட்டியாயமைந்தது சடகோபராலருளிச் செய்யப் பெற்ற தமிழ் மறைகளாயிரமுமாகும். இது கருதியன்றே:—

"வான்திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற தமிழ்மறைக ளாயிரமும்—ஈன்ற
முதற்றாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த
இதத்தா யிராமா நுசன்"

என்று பெரியோர்கள் அருளிச்செய்ததும் என்க. தெளியாத மறை நிலங்களெல்லாம் தெளியும்படி செய்யப் பெற்ற தமிழ் மறையின் உதவியானது இராமாநுஜரை வேதத்தின் பொருளை மாறுபட அறியாமலிருக்கும்படி செய்தது என்று கூறவேண்டும்.

இவ்வாறு இராமாநுஜரால் செய்யப்பெற்ற பாஷியத்தில் விளங்கிக் கொண்டிருக்கும் அவருடைய கொள்கையின் சுருக்கமான சாரம்:—

"தாளுெருருவே தனிவித்தாய் விளங்கும் அத்வைத மான ஈசுவரன், சித் என்ற ஆத்மாவும் அசித் என்ற பிரகிருதியும் தன்னை விட்டு நீங்காமல் தன்னில் பொருந்தி நிற்கத் தான் வேறு நிற்கும் தன்மையினையுடைய மதமே விசிஷ்டாத்வைதம் என்னும் இராமாநுஜருடைய மதமாம். விசிஷ்டம்- சித்தையும் அசித்தையும் விசேஷணமாக உடையது; அத்வைதம்- இரண்டு என்னும் தன்மையற்ற ஒருபொருள்; ஆகவே, சித்தையும் அசித்தையும் விசேஷணமாகவுடைய ஒரு பொருள், விசிஷ்டாத்வைதமாம்."

"அம்மதத்தில், ஈசுவரன், சித்து, அசித்து என்ற மூவகைப் பொருள்கள் உண்டு. இவை மூன்றும் எப்பொழுதும் உள்ள பொருள்களாம். இவற்றுள் சித்தும் அசித்தும் ஈசுவரனைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிலை பெற்றிருப்பன. ஈசுவரன் பற்றுக்கோடொன்றுமின்றிச் சுதந்திரமாக நிலை பெற்றிருப்பவன். ஈசுவரன் சத்தியம், ஞானம், அநந்தம், ஆநந்தம், அமலம் என்கிற குணங்களையுடையவன். அவன் ஸ்ரீயப்பதியாயுள்ளவன். (லக்ஷ்மிநாயகன்.) அன்றியும், அவன் - ஞானம், பலம், ஐசுவரியம், வீரியம், சக்தி, தேஜசு என்கிற ஆறு குணங்களையுமுடையவனு யிருப்பதால் பகவான் என்று சொல்லப்படுகிறான். இக்குணங்கள் அவனுக்கு இருப்பதால், அவனுக்கு மற்றெல்லாவற்றினும் மேன்மை உண்டாகின்றது. அவன் உயர்வற உயர்நலம் உடையவன்; அயர்வறு மமரர்களதிபதியாயுள்ளவன், ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையுமுடையவன். இவ்வாறு உயர்வுக்குக்காரணமாகிய குணங்களை யுடையவனு யிருந்தாலும் பத்துடையடியவர்க்கு எளியனுதற் குரிய வாத்ஸல்யம் ஸௌலப்யம் ஸௌசீல்யம் முதலாகிய குணங்களை யுடையவன்."

"அவ்வீசுவரனுடைய உருவங்கள் ஐந்து வகையாகப் பிரகாசிக்கும். அவைகள்:—பரம், வியூகம், விபவம், அர்ச்சை, அந்தர்யாமி என்பனவாம். அவற்றுள், பரரூபம் என்பது - பரமபதமாகிய ஸ்ரீவைகுண்ட லோகத்தில், தேவி, பூஷணம் ஆயுதம் முதலிய வற்றுடன் கூடினவனாய், அகிலஹேயப் பிரத்தியநீகனாய் அநந்த கல்யாணகுண மஹோததியாய் விளங்கிக்கொண் டிருக்கும் ஈசுவரனுடைய உருவமாகும். வியூகம் என்பது-பரரூபத்திலிருந்து பிரிந்து உலகத்தையாக்குமாறு அயனாகவும் ஆக்கிய உலகைக் காக்குமாறு செங்கண்ணிறை கருணையங்கடலாம் திருமாலாகவும் அவ்வுலகங்களை வீக்குமாறு அரனாகவும் முறையே பிரத்யும்நன் அநிருத்தன் சங்கர்ஷணன் என்னும் பெயர்களுடன் தோன்றி விளங்கும் உருவங்களாம். இனி, விபவம் என்பது-ஸ்ரீராமன் ஸ்ரீகிருஷ்ணன் முதலிய அவதாரங்களே யாகும். இவை, ஈசுவரன் தானே யவதரித்தல் தன்னுடைய அம்சத்தால் அவதரித்தல் என இருவகையாம். அர்ச்சையாவது - நம்மால் பார்க்கமுடியாத பர வியூக ரூபங்களையும் ஒவ்வோர் கால விசேஷத்தில் உண்டாகின்ற அவதாரங்களையும் யாவரும் எககாலத்தும் கண்டு வணங்கும்படி, பொன் முதலிய உலோகங்களாலும் கல் முதலிய வற்றாலும் உண்டாக்கப் பெற்ற உருவங்களைக் கோயில்களில் வைத்து அவற்றில் மந்திரம் முதலியவற்றால் ஈசுவரரூபம் சாந்நித்தியமாக இருக்கச் செய்வதாம். அந்தர்யாமி என்பது-எல்லாருடைய மனத்தாமரைகளிலும் இருந்து கொண்டு, தன்னை அவர்கள் நினைப்பதற்குத் தக்க வடிவத்துடன் விளங்கித் தோன்றும் ஈசுவரனுடைய உருவமாம்.

"வைகுந்தர் தாமரை போற்பாதர் நாகத்து மாதர்புட
வைகுந்த மேற்கொண் டிருந்தோர் வடிவைந்தின் வாழுமிடம்

வைகுந்தம் பாற்கடல் மாகீ ரயோத்திவண்பூந்துவரை
வைகுந்த மன்பா மனஞ்சீ ரரங்கம் வடமலையே"

என ஐயங்கார் விளக்கியிருப்பதையும் காண்க. பகவான் பரலோகத்திலிருந்தாலும் வியூகம் முதலிய உருவங்களை எடுத்தாலும் அப்பொழுதெல்லாம் ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் அவருக்கு அனுகுணமான உருவங்களை யெடுத்துக்கொண்டு அவரை விட்டுப் பிரியாமல் அவருடனே நித்தியவாசம் செய்து கொண்டிருப்பாள். பகவான் எடுக்கும் உருவங்க ளெல்லாம் கர்மத்தால் ஏற்படுவனவல்ல. பிரகிருதி சம்பந் தப்பட்டனவுமல்ல. அவனுடைய உருவம் சுத்தசத்துவம் என்ற பதார்த்தத்தால் அமைக்கப் பெற்றவையாம்."

சித்து என்றது ஆத்மாவையாம். அவ்வாத்மா, தேகம், இந்திரியம், மனம், பிராணன், புத்தி ஆகிய இவற் றில் வேறாய் அஜடமாய் ஆநந்த ரூபமாய் நித்யமாய் அணு வாய் அவ்வியக்தமாய் அசிந்தியமாய் நிரவயவமாய் நிர் விகாரமாய் ஞானாசிரயமாய் ஈசுவரனுக்கு நியாமியமாய்த் தாரியமாய்ச் சேஷமாயிருக்கும். இவ்வாத்ம சுவரூபம் பத்தர் முக்தர் நித்தியர் என்ற வேறுபாட்டால் மூவகைப்பட்டி ருக்கும். பத்தர் என்பவர் சம்சாரத்தில் கிடந்து உழலுப வர்களாம். முத்தர் என்பவர் சம்சார பந்தத்தில் நின்றும் விடுபட்டவர்களாய் மோக்ஷத்தை யடையக்கூடிய நிலை மையிலிருப்பவர்களாம். நித்தியராவார் ஒரு நாளும் சம் சாரபந்தத்தை யடையாத அனந்த கருட விஷ்வக்சேனர் முதலானவர்களாம். நீரானது நெருப்பின் சேர்க்கையால் சூடுகொள்வது போலச் சித்தும் அசித்தினுடைய சேர்க் கையால் அவித்யை கர்மம் வாசனை முதலியவற்றைப் பெறு கின்றது. அவ்வசித்தின் தொடர்பு நீங்கியவாறே சித்தி னுடைய அவித்யை முதலியனவும் நீங்கும்."

"இனி, அசித்து என்பது ஞானசூனியமாய் விகாரத்திற்கு இடமாய் இருக்கும். அது சுத்த சத்வம், மிசிர சத்துவம், சத்துவசூனியம் என மூன்று வகைப்படும். அவற்றுள் சுத்தசத்துவமாவது இராஜஸ தாமஸ குணங்கள் கலவாமல் சத்துவகுணம் மாத்திரமாய் இருந்து நித்தியமாய் ஞானம் ஆனந்தம் முதலியன பிறப்பதற்கு இடமாய்க் கர்மத்தாலல்லாமல் பகவானுடைய நினைப்பினால், விமானம், மண்டபம், கோபுரம் முதலியனவாகப் பரிணமிப்பதாய் அளவிறந்த ஒளிவடிவமாய் ஈசுவரன் முதலான யாவராலும் அளவிட வொண்ணாததாய் ஆச்சரியகரமா யிருக்கும். அதுவே, நித்தியவிபூதியாகிய பரமபதமாகும் என்பார்கள். மிசிரசத்துவமாவது, சத்துவம் இராஜஸம் தாமஸம் என்னும் மூன்று குணங்களோடும் கூடினதாய்ச் சம்சார வயப்பட்ட பத்தர்களுடைய ஞானம் ஆனந்தம் முதலியவற்றை மறைப்பதாய் ஆத்மாவல்லாத தேகத்தில் ஆத்மபுத்தியும், சுவதந்திரமற்ற ஆத்மவஸ்துவில் சுவதந்திரபுத்தியும், வேறொருவருக்கும் சேஷமாகாத (அநந்ய சேஷமான) ஆத்மாவில் வேறொருவருக்குச் சேஷம் (அந்ய சேஷம்) என்கிற எண்ணமும், ஈசுவரரல்லாதார் பக்கல் ஈசுவரர்கள் என்கிற நினைப்பும், உறுதிப்பொருளல்லாதனவாகிய பொருள் முதலியவற்றை உறுதிப் பொருள்களாக நினைப்பதும், உபாயங்க ளல்லாதனவற்றை ஈசுவரனை அடைவதற்கு உபாயமாகக் கருதுவதும் ஆகிய விபரீத ஞானத்தை யுண்டாக்குவதாய் நித்தியமாய்ச் சர்வேசுவரனுடைய ஜகத்தைச் சிருஷ்டித்தல் முதலாகிய அலகிலா விளையாட்டிற்குக் காரணமாய் இருக்கும். மஹான் முதலிய விகாரங்களை மேலே கூறிய மிசிரசத்துவம் தன்னிடத்தினின்றும் உண்டாக்குகையாலே பிரகிருதி யென்றும் ஞானவிரோதியாகையாலே

அவித்யை என்றும் ஒன்றுபோல் ஒன்றன்றிக்கே விசித்திர மான சிருஷ்டியைப் பண்ணுகையாலே மாயை என்றும் அது பெயர் பெறும். அம் மிசிரசத்துவம் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்ற தன் மாத்திரைகள் ஐந்தும் அவற்றின்கண் தோன்றிய வான், காற்று, எரி, நீர் நிலம் என்ற பூதங்கள் ஐந்தும் அவற்றின் கூறுகிய ஞானேந்திரி யங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் மூலப்பிரகிரு தியும் மஹத்தும் அகங்காரமும் மனமும் ஆக இருபத்து நான்கு தத்துவங்களாயிருக்கும். இவற்றை:—

"பொங்கைம் புலனும் பொறியைந்தும் கருமேந்திரிய மைம்பூதம்
இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களே" (திரு. 10-7-10)

எனவரும் அடிகளில் அறிக. மண்ணையும் மணலையும் நீரை யும் சேர்த்து ஒரு திரவியமாக்கிச் சுவரிடுவாரைப் போலே ஈசுவரன் இவற்றை யெல்லாம் தன்னிலே சேர்த்து ஓரண்ட மாக்கி அதுக்குள்ளே சதுர்முகனைச் சிருஷ்டித்தருளுவான். அண்டத்தையும் அண்டகாரணங்களையும் ஈசுவரன் தானே யுண்டாக்குவான். அவ் வண்டத்துக்குட்பட்ட வஸ்துக்களைச் சேதனர்க்கு அந்தர்யாமியாய் நின்று உண்டாக்குவான்."

ன கூறுபாடான சத்துவ சூனியமாவது காலமாம். அது எல்லாப் பொருள்களும் பரிணமிப்பதற்குக் காரணமாய்க் கலை, காஷ்டை, நிமிஷம், நாழிகை முதலிய வேறுபாடுடையதாய் நித்தியமாய் ஈசுவரனுடைய லீலை களுக்கு ஏற்றதாய் அவனுக்குச் சரீரபூதமா யிருக்கும்."

"மேலேகூறிய சித் என்ற ஆத்மா பரமபதத்தில் இச்சையுள்ளவனாய் நல்லாசிரியரை யடைந்து அவரருள் பெற்றுச சாஸ்திராப்பியாசம் செய்து பந்தமற்றுப் பக்தி பிரபத்தி என்னும் உபாயங்களில் ஏதாவது ஒன்றினால்

ஈசுவரனை யடைந்து அவனுக்கு மோக்ஷ உலகத்தில் 'ஒழி வில் காலமெல்லா முடனாய் மன்னி, வழுவில்லா அடிமை செய்'தலே பரம புருஷார்த்தமாகிய மோக்ஷம் என்று சொல்லப்படும். அவ்வுபாயங்களில் சரணாகதியாகிய பிர பத்தி யுபாயமே ஆத்மாக்களுக்குச் சாலச்சிறந்த உபாய மாகும்'' என்பதாம.

மேலே கூறிய சித்தாந்தத்தையே அடிப்படையாகக் கொண்டு இராமாநுஜர் ஸ்ரீபாஷியம் முதலான கிரந்தங்களை எழுதி உலகினர்க்கு உபகாரத்தைச் செய்தருளினார். இக் கொள்கைகளை விரிவாகப் பூர்வாசாரியர்கள் அருளிச்செய் துள்ள இரஹசியங்களில் பரக்கக் கண்டு தெளிவடைக.

இராமாநுஜர் காலத்தில் தமிழ் நாட்டில் பல மதங்கள் நிலவியிருந்தன. அவற்றுள் சிறந்தன:—சாருவாக மதம், ஆருகத மதம், வைபாஷிகன், சௌத்திராந்திகன், யோகா சாரன் மாத்யமிகன் என்ற பிரிவுகளுடன்கூடிய பௌத்த மதம், நையாயிக மதம், வைசேஷிக மதம், பாசுபத மதம், சாங்கிய மதம், மாயாவாத மதம் முதலாகியவைகளாம். இராமாநுஜர் தம் பாஷியத்தில் மேலேகூறிய மதங்களின் கொள்கைகளை யெல்லாம் தனித்தனியாக எடுத்துக்கூறி மறுத்திருக்கின்றார். அன்றியும் அக் காலங்களில் விளங்கிய அம்மதத் தலைவர்களுடனும் நேரில் வாதப்போர் நிகழ்த்தி அவர்களை யெல்லாம தம்மடிப் படுத்தியுள்ளார்.

இராமாநுஜர், 'எல்லாவுயிர்களும் ஒன்றே. அவைகள் எப்பிறவியை எடுத்திருந்தாலும் மோக்ஷத்தைப் பெறு வதற்கு உரிமையுடையனவே.' என்ற விரிவான கொள் கையை எடுத்துக்கூறித் தாம் யாதொரு பேதமும் பாராட்டா

மல் யாவருக்கும் நற்பொருளை உபதேசித்து மோக்ஷத்தை யடையும்படி செய்தருளினர். அவருக்குப் பிற்காலத்தில் அவருடைய மதத்தை அனுசரித்த ஆசாரியார்களுக்குள் சிற்சிலவேறுபாடுகள் தோன்ற அவைபற்றி அவர்கள் வடகலையார் என்றும் தென்கலையார் என்றும் இருபிரிவினராகப் பிரிவாராயினர். ஆயினும் அவர்களுக் கெல்லாம் மூலபுருஷர் இராமாநுஜரே யாவார்.

* * * * *

இனி, இராமாநுஜர் இந்நிலவுலகில் நிகழ்ந்த காலம் எது என்பதை ஆராய்வாம். இது விஷயமான அபிப்பிராயங்கள் பலவாருக இருக்கின்றன. ஆயினும் இராமாநுஜருடைய அவதாரமும் மோக்ஷமும் முறையே "தீர்லப்தா" "தர்மோ நஷ்ட:" என்னும் வாக்கியங்களால் இராமாநுஜார்ய திவ்ய சரிதை குருபரம்பரை முதலிய நூல்களில் குறிக்கப்பெற்றுள்ளன. அவ்வாக்கியங்கள் வருஷங்களைக் குறிப்பனவாம். இராமாநுஜார்ய திவ்யசரிதையில் சிற்சில பாட்டுக்கள் ஏதோ முன்னூல்களிலிருந்து எடுத்துக்காட்டாக வந்துள்ளன. அப்பாட்டுக்கள் இராமாநுஜருடைய செயல்கள் சில நிகழ்ந்த ஆண்டுகளைக் குறிப்பனவாக உள்ளன. இராமாநுஜர் விளங்கிய காலத்தில் அரசர்கள் சிலர்பலர் அவருடைய நிகழ்ச்சிகளுக்கு இடையூறுகவோ அவரைப் பின்பற்றுவோராகவோ இருந்தனர் என்று அவருடைய சரிதத்தால் விளங்குகின்றது. அவ்வரசர்களுடையகாலம் இவை என்று சரிதஆசிரியர்களால் நிறுவப்பெற்றுள்ளன. ஆக மேலேகூறிய சாதனங்கள் அனைத்தையும் ஒன்றுபடுத்தி ஆயப்புகுங்கால், இராமாநுஜருடைய காலத்தையும் ஒருவாறு நிலை நாட்டக்கூடும்.

முதலாவது, 'தீர்லப்தா' என்பதிலுள்ள அக்ஷரங்கள் (939) தொளாயிரத்து முப்பத்தோன்பதைக் குறிப்பதற்கு

அறிகுறியாக வழங்கப்பெற்ற எழுத்துக்களாம். அதனால் இராமாநுஜர் அவதாரம் சகவருடம 939 என்று கொள்ளப் படுவதாயிற்று. இராமாநுஜருடைய அவதாரம் சகவருடம் தொளாயிரத்து முப்பத்தொன்பது என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப் பெற்ற தொன்றாகும். சகவருடம் 939க்குக் கிறிஸ்து வருடம கி. பி. 1017 ஆகும். இவ்வாறு கி. பி. 1017ல் அவதரித்த இராமாநுஜர் 120 வருடங்கள் இந்நிலவு லகை அலங்கரித்தார் என்பதனால், சகவருடம் 1059 அல்லது கி. பி. 1137 வரை அவருடைய அவதார விசேஷம் நடந்தி ருக்கவேண்டும் என்பது விளக்கமாம். அவர் நித்திய விபூ திக்கு எழுந்தருளின தினத்தைத் 'தர்மோ நஷ்ட:*' என்பதி லுள்ள அக்ஷரங்களால் கணக்கிட்டுள்ளார்கள்.

அதற்குமேல், இராமாநுஜருடைய சரிதையில், இராமா நுஜருக்குச் சோழனொருவனுடைய உபத்திரவம் ஏற்பட அதனால் அவர் சோழநாட்டை நீத்து மேற்றிசைக்குச் சென் றனர் என்று கூறப்பெற்றுள்ளது. அப்பொழுது இராமாநு ஜருக்காக அவருடைய சிறந்த சிஷ்யரான கூரத்தாழ்வான் சோழனுடைய சபைக்குப் பெரியநம்பி என்னும் ஆசிரியரு டன் செல்லச் சோழன், அவர்கள் தன் கருத்திற்கு ஒத்து வாராமையால் அவர்களைத் துன்புறுத்துமாறு ஏவினன். சந்நியாசி உடைதரித்துள்ள கூரத்தாழ்வானையே அவன் இராமாநுஜர் என்று கருதினன். அவனுடைய துன்பத் தைப் பொறுக்கமாட்டாமையால் பெரியநம்பிகள் உயிர் நீத்தமை (காலயுக்த யஷ்டகாமத்ய திதிப்ரோக்தாமஹா குரோ, யாமுநார்யபதாம்போஜசுச்ரூஷாபாபவத்ஸதா) என் னும் சரம சுலோகத்தால் விளக்கப்பட்டுள்ளது இராமாநு

---

* 'தீர்லப்தா' 'தர்மோநஷ்ட:' ஆகிய இவை 'கடபயாதி' சங்கி யைப்படி 939-1059 என்னும் எண்களைக் குறிப்பனவாம்.

ஜாரிய திவ்ய சரிதையில். அதிற்குறிக்கப்பெற்ற காளயுக்தி வருஷம் இராமாநுஜருடைய அறுபத்தொன்றாவது வயசிற்கு அடுத்துள்ளது. கோயிலொழுகு முதலிய நூல்களில் இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தில் அறுபது சம்வத்ஸரம் வீற்றிருந்து பிறகு மேற்றிசைக்குச் சென்றனர் என்று கூறப்பெற்றுள்ளதற்கும் இந்தச் சுலோகத்தில் கூறியுள்ளதற்கும் ஒத்துவருகின்றது. ஆகவே இராமாநுஜர் தமது அறுபத்தோராவது வயசில் அதாவது, கி. பி. 1078ல் மேற்றிசைக்குச் சென்றனராதல் வேண்டும். கி. பி 1078 காளயுக்தி வருஷத்தில் சோழநாட்டை யாண்ட அரசன் யாவன் என்று ஆராயுமிடத்து இரண்டாம் இராஜேந்திர சோழன் என்ற பெயருடன் கூடிய முதற் குலோத்துங்கசோழனே கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து சோழநாட்டை யாண்டுவந்தனன் என்பது சரித்திர ஆசிரியர்களுடைய துணிபாம்.

அவன் தந்தை வழியில் சளுக்க வேந்தனாவான். அவன் தந்தை, சாளுக்கிய விமலாதித்தன் மகனாகிய முதல் இராஜராஜனாவான். அவனுடைய மனைவி முதல் இராஜேந்திர சோழனுடைய மகள் அம்மங்கா தேவியாவாள். அவ்வம்மங்கா தேவியினுடைய மகனே நம் குலோத்துங்கனாவான். ஆதலால் அவன் தாய்வழியில் சோழபரம்பரையைச் சேர்ந்தவனாவான். அவன் கி. பி. 1070ல் சோழ சிம்மாசனமேறி கி. பி. 1118 வரை 49 வருஷம் சோழ நாட்டையாண்டவன். அவனுக்கு அபயன், சென்னி, அபயன், குலோத்துங்கன் முதலிய பெயர்களும் வழங்கின. அவனுக்கு மக்கள் ஏழுவருண்டு. அவருள் விக்கிரமசோழன் என்பவனே அவனுக்குப் பின் பட்டம் எய்தினனாவான். விக்கிரமன் இளவரசனாக உறையூரிலிருந்த காலத்தே இராமாநுஜரின் மேன்மையை யறிந்து அவருக்குச் சிஷ்யனாயினன்.

இவனே தன் தந்தை யிறந்து தான் பட்டத்துக்கு வந்தபிறகு இராமாநுஜரைத் தொண்டனூரிலிருந்து முன்போலவே தன்னாட்டிற்கு அழைத்துவர முயற்சி யெடுத்துக் கொண்டனன். இவன் வைஷ்ணவ சமயத்தை அனுசரித்தவன், ஸ்ரீரங்கத்தில் பல திருப்பணிகள் செய்துள்ளான். நிற்க,

மேலே கூறிய குலோத்துங்க சோழன் என்பவனே கலிங்கப் போரில் வெற்றிகொண்டு சயங்கொண்டாரால் பரணிபாடப் பெற்றவன். அதுவே கலிங்கத்துப் பரணி எனப் பெயர் பெறுவதாகும். அவன் கலிங்கத்துப் போரை வெல்வதற்குத் தன் மகன் விக்கிரமனைத் தன் தண்டத்தலைவனை கருணாகரத்தொண்டைமானுடன் கலிங்கத்திற்கு அனுப்பினான். அதுபற்றியே விக்கிரமனைக் கலிங்கம் செற்றதாக அவனுடைய மெய்க்கீர்த்தி முதலியன கூறும். குலோத்துங்கன் தன்னாட்டுக் குடிகட்கு மிக்க நன்மை செய்தவன். முதலாவது, சுங்கங்களைத் தவிர்த்தான். அதனால் அவன் சுங்கம்தவிர்த்த சோழன் என்ற சிறப்புப் பெயர் பெற்றான். பின்பு, இராச்சிய முழுதும் புதிதாக அளப்பித்து ஆறிலொரு கடமை வரி யேற்படுத்தினான். குடிகளுக்கு உழுதொழிலுக்கு உபயோகமாகும்படி பல ஏரிகளையும் கட்டிக் காடுகளையும் வெட்டி நகரங்களையும் உண்டாக்கிக் கொடுத்தான்.

அவன் பரம சைவன். அவன் சிதம்பரத்தில் நடராஜருடைய பேரம்பலத்தைப் பொன்வேய்ந்தவன். அதனால் அவன் பேரம்பலம் பொன்வேய்ந்த சோழன் என்றும் பெயர் பெறுவான். அவன் சைவனானதற் கேற்பத் திருநீற்றுச் சோழன் என்றும் வழங்கப் பெறுவான். அவனே, சேக்கிழாரைப் பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தை ஆக்குமாறு வேண்டிக் கொண்டனன்.

அவனுடைய சபையில் மத விஷயமான ஆராய்ச்சி ஏற்பட்டது என்பதைச் சீவகசிந்தாமணி முதலிய சைன நூல்களை அரசன் போற்றிப் புகழ அதனைக் கண்ட அவனுடைய மந்திரியாராக இருந்த சேக்கிழார் என்பவர், அரசனிடத்தில் 'அந்நூல்கள் உண்மைப் பொருளை யுணர்த்துவனவல்ல; அவற்றைக் கற்று வாணாளை வீணாக்கிக்கொள்ள வேண்டாம்' என்று கூறிப் பின்னும் தொண்டர்களுடைய சிறப்பினை எடுத்துப் புகன்று தாம் அவற்றைச் செய்யுளுருவமாக ஆக்கித் தருவதாகவும் சொல்லிச் சிதம்பரம் சென்று தொண்டர் புராணம் பாடத் தொடங்கினார் என்னும் பெரிய புராணவரலாறு விளக்குகின்றது. இவ்வாறு ஜைன மதத்து நூல்களைப்பற்றிய தூஷணை ஏற்பட்டது என்பதனால், மதவிஷயமான ஆராய்ச்சி அவனுடைய அவைக்களத்தில் ஆரம்பித்திருக்க வேண்டும். சைவப் பற்றுடையனான அவ்வரசன் தன் மதத்தையே பெரிதென்றும், தன் கடவுளையே முதற்கடவுள் என்றும் நினைத்துத் தன் சபையிலுள்ள சைவப் பெரியோர்களால் வாதப்போர் நிகழ்த்துமாறு செய்திருக்க வேண்டும். அவ்வாறு நிகழ்ந்த வாதப் போரில், வைஷ்ணவ சமயத்துப் பெரியோர்களுடைய உடன்பாடும் பெறவேண்டும் என்று சில மந்திரிகள் தூண்டினமையால், அவ்வரசன் அக்காலத்தே ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீவைஷ்ணவ சமயத்தை உலகெங்கும் பரவும்படி செய்து கொண்டுவீற்றிருக்கின்ற ஸ்ரீஇராமாநுஜரைத் தன் சபைக்கு அழைத்துவருமாறு ஏவலரை அனுப்பலாயினன். அவர்களால், இராமாநுஜருக்குப் பதில் கூரத்தாழ்வான், இராமாநுஜருடையில் அழைத்துவரப் பெற, அரசன் அவரை இராமாநுஜரென்றே கருதித் தன் சமயத்தையும் கடவுளையும் மேல் என்று சைவப் பெரியோர்களால் வாதம் நிகழ்த்திச் சிவனும் தெய்வத்தின் மேற்றெய்வம் வேறில்லை (சிவாத் பரதரம்

நாஸ்தி) என்று எழுதப்பட்ட பட்டயத்தில் அதனை உடன் பட்டுக் கையெழுத்திடுமாறு கூறினன். அதற்குக் கூரத் தாழ்வான் எதிர்த்து வாதம் செய்து சிவாத் பரதரம் நாஸ்தி என்பதை யடுத்துத் துரோண மஸ்தி ததப்பரம் * என்று எழுதித் தம் கையெழுத்தும் இட்டனர் என்றும் அது கருதித் தன்னை இவ்வாறு பரிகசித்து எழுதிய கூரத் தாழ்வானிடத்தில் அரசனுக்குப் பகையும், அவரைப் பின் பற்றுகின்ற மதத்தவர்களிடத்து வெறுப்பும் உண்டாயிற்று என்றும் கருத இடமிருக்கின்றது.

அரசனுக்கு அம்மதங்களில் துவேஷபுத்தி ஏற்படுவதற்குமுன் அவன் எல்லா மதங்களிலும் சமநோக்குடையவனுயிருந்தனன் என்பதை நாகப்பட்டணத்துப் பிரபலமான ஜைனர்களுடைய இராஜராஜப் பெரும்பள்ளிக்கு இவ்வரசன் நிலம் முதலியன தானம் செய்திருப்பதாலும், மன்னார்குடியிலுள்ள இராஜகோபால சுவாமி கோயிலைக் குலோத்துங்கவிண்ணகரம் எனத் தன் பெயரால் அவ்வரசன் கட்டியிருப்பதாலும் அறியலாம். அவ்வரசனுக்குத் துவேஷ புத்தி அவனுடைய அரசாட்சி தொடங்கிச் சில காலமான பிறகு ஏற்பட்டிருக்க வேண்டும். அவ்வரசன் கலிங்கம் செற்ற பிறகே விஷ்ணு வைஷ்ணவர்களிடத்துத் துவேஷ புத்தி யுடையவனுக ஆயினன், என்பது சயங்கொண்டார் பரணியில் அவ்விஷயமாக ஒன்றும அவனைப்பற்றிக் குறிப்பிடாமையினுலுணரலாகும்.

அவ்வரசன், சைவர்களுக்குச் சிறந்த தலமாகிய பேரம்பலத்தைப் பொன்வேய்ந்த காலத்தில் மன்றுக்கு )டம

---

* சிவம், என்பது குறுணி என்னும் அளவினையும், துரோணம் என்பது பதக்கு என்னும் அளவினையும் குறிக்கும் பொழுது சிவமாகிய குறுணியைக் காட்டிலும் துரோணமாகிய பதக்கு அதனினும் மேல் என்னும் பொருள் தோன்ற எழுதப்பட்டதாகும்.

பற்றுமையால் அவ்விடத்திலுள்ள சித்திர கூடம் எனனும திருமால் கோயிலை இடித்து எறிந்துவிட்டு அதன்கண் ணிருந்த மூர்த்தியையும் கடலில் எறிந்தான் என்று இராமா நுஜ திவ்ய சரிதை முதலிய நூல்களில் கூறப் பெற்றுள்ளது. இதனை:—

"அம்பொற் குடைசகன் ஆயிரத்து
ஒன்பதாம் வருஷத்துத் தென்பால்
சென்னி குலோத்துங்கன் சித்திரகூடச் செங்கண்மால்
தன்னை யலையெறி நாள்தான்"

என்னும் சிதைந்துபோன பாடலாலறிக. இதில் சகவருடம் 1009ல் அவ்வரசன் சித்திரகூடத்தைச் சிதைத்ததாகக் கூறப்பெற்றுள்ளது. இதிற் குறிக்கப்பெற்ற வருடம் முதற் குலோத்துங்கனுடைய ஆட்சிக்காலமாகுமே யொழியச் சோழநாட்டையாண்ட வேறு அரசர்களுடைய காலமாக மாட்டாது. இராமாநுஜர் தொண்டனூர் சென்று பத்து வருடம் கழித்த பிறகு, அவர் அவ்விடத்தில் இருக்கும் காலத்தில் சித்திரகூடச் சிதைவு ஏற்பட்டதாக வேண்டும்.

இராமாநுஜர் சோழநாட்டை நீங்கி மேற்றிசையில் ...ண்டனூரில் பன்னிரண்டு வருடங்கள் வதிந்தனர் என்று ஆறாயிரப்படி, திவ்ய சரிதை முதலிய நூல்கள் கூறும். இதற்கு மாறாக மூவாயிரப்படி முதலிய குரு பரம் பரை நூல்கள் அவர் தொண்டனூரில் 20 வருடங்கள் தங்கி யிருந்தார் என்று பகரும். இராமாநுஜர் தமக்குப் பகைவ னான சோழன், கிருமிகண்டனாய் இறந்தான் என்று கேட்ட பிறகே தொண்டனூரை நீங்கிச் சோணாடடைந்தனர் என்று கூறப் பெற்றுள்ளது. அவ்வரசன், கி. பி. 1118-ம் வருடம் அதாவது சகம் 1040ல் இறந்தான் என்று தெரி கின்றது. அவனை அடுத்து அவன் மகன் அகளங்கன்

என்ற விக்கிரம சோழன் கி. பி. 1118ல் பட்டமெய்தினன். அவனே இராமாநுஜரை ஆதரித்த சோழவரசன். அவனே இராமாநுஜரைத் திரும்பவும் சோழநாட்டிற் கழைத்தவன். அன்றியும், தொண்டனூரில் போசளவரசன், பிட்டிகன் அல்லது விட்டலதேவன் என்பவன், கி. பி. 1110ல் பட்டமெய்தி கி. பி. 1140 வரை போசள ராச்சியத்தை யாண்டவன். இவனை இராமாநுஜர் வைஷ்ணவனாகச் செய்து அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்று வைஷ்ணவப் பெயருமீந்து அவனுதவியால், திருநாராயணபுரத் திருப்பணியும் அவன் இராஜ்ஜியத்தில் வேலூர் (பேலூர்) முதலிய இடங்களில் முதலியாண்டானால் பஞ்சநாராயணப் பிரதிஷ்டையும் செய்தார் என்பதனால் இராமாநுஜர் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலும் நீண்ட காலம் தொண்டனூரில் தங்கியிருந்தாராதல் வேண்டும். அன்றியும் 'ஈங்கு நின்றும் போந்து பதினோராண்டு இங்ஙன் புகழ்தான் வளர்த்த பெரும்பூதூர் வேந்தன், ஆய்ந்த சகாப்தம் ஆயிரத்தைம்பத்தொன்பதில், பரமபதம் சேர்ந்தார். (இரா-திவ்ய சரிதை, பக் 227) என்று கூறப்படுவதால் அவர், நித்யவிபூதிக்கு, கி. பி. 1137ல் எழுந்தருளினார் ஆதலினால், அதற்குப் பதினொரு வருடங்களுக்கு முன்பு அதாவது, கி. பி. 1126ல் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டு வந்தனராதல் வேண்டும். அன்றியும், விஷ்ணு வர்த்தனன் பேலூர், தழைக்காடு முதலிய இடங்களில் நாராயணர்களைப் பிரதிஷ்டை செய்தது, சகம் 1039 ஆன ஹேமலம்பி சம்வத்ஸரம் என்று சாசனங்கள் கூறுகின்றன. இப் பஞ்சநாராயணப் பிரதிஷ்டையை முதலியாண்டானால் முடித்துக் கொள்ளுமளவும் இராமாநுஜர் போசள இராச்சியத்தில் தங்கியிருந்தாராதலினால் சகம் 1039க்குக் குறையாமல் அவர் அங்கே இருந்திருக்கவேண்டும். எனவே, கி. பி. 1078 முதல் கி. பி. 1120 or 1126 வரை உள்ள

காலவளவு இராமாநுஜர் மேற்றிசை நாடுகளில் சஞ்சரித்து விட்டு மீண்டும் ஸ்ரீரங்கம்வந்து சேர்ந்தகாலமாகும். இராமாநுஜர் தொண்டனூரிலிருந்து ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்த பிறகு தமது ஸ்ரீபாஷியத்தில் எஞ்சி நின்ற மூன்றத்து ஒரு கூற்றையும் எழுதிமுடித்து நிறைவேற்றியருளினார். அவ்வாறு அவர் நிறைவேற்றியருளியது கி. பி. 1118க்கும் 1137க்கும் இடைப்பட்ட காலமாதல் வேண்டும் இதனை:—

"இன்னவாறு திருப்பதிகள் எங்கும வாழ்வித் தெதிராஜன
தன்னதாக்கித் தரிசனமும் தரணியெங்கும் விளங்குவித்து
முன்னமுரைத்த பாடியத்தின் முற்றமூன்றத் தொருகூறு
தன்னைச் சென்றுண்டாயிரத் தாங்கெழுபத்தேழில் சாத்தினன்"

என்னும் பழம் பாடலில் சகம் 1077ல் சாத்தினன் என்று கூறப் பெற்றுள்ளது. அது பிழைபட்ட பாடமாக இருக்க வேண்டும். ஏனெனில், அவருடைய வயசு நூற்றிருபதும் சகம் 1059 உடன் முடிவு பெற்றுவிட, அதற்கு மேலும் உள்ள சகம் 1077ல் பாஷியம் சாத்தினார் என்று சொல்லுவது பொருந்துமா றன்மையுணர்க. எனவே, அப்பாடலில் எழுபத்தேழு என்பதற்குப் பதில் நாற்பத்தேழு என்றிருந்தால் தகுதியுடையதாம். அதாவது கி. பி. 1125க்கு மேல் கூரத்தாழ்வானுடன் சேர்ந்து ஸ்ரீபாஷியத்தைச் சாத்தியருளினாராதல் வேண்டும்.

இனி; விக்கிரமசோழன் கி. பி. 1118ல் பட்டமெய்திச் சோழநாட்டை யாண்டனன். அவன் 18 வருடங்கள் இராச்சியபாரம் செய்தனன் என்று தெரியவருவதால் அவனுடைய அரசாட்சி கி. பி. 1136ல் முடிவடைய அவனுக்குப்பின் அவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் கி. பி. 1137ல் இராமாநுஜர் நித்தியவிபூதிக்கு எழுந்தருளினார் என்பது தெளிவாம்.

இவ்வாறன்றி, கி. பி. 1136க்கு மேல் பட்டம் பெற்ற விக்கிர சோழனுடைய மகன் இரண்டாம் குலோத்துங்கனுடைய காலத்தில் இராமாநுஜர் இருந்தனராதல் வேண்டும் என்றும் அவனே விஷ்ணு வைஷ்ணவத்வேஷி என்றும் சித்திரகூடத்தைச் சிதைத்து மன்றுக்கிடங்கண்ட செயலை உலாக்களும் தக்கயாகப்பரணி முதலியனவும் அவனுக்கு ஏற்றிச் சொல்லுகின்றன என்றும் சில பெரியோர் கூறுவர். அது பொருத்தமன்று என்பதை மேலே கூறிய காரணங்களாலறிந்து கொள்க.

இன்னும் சிலர், முதற் குலோத்துங்கனுக்கு முன்னர்ச் சோழநாட்டையாண்ட அதிராஜேந்திரன் என்பவனே இராமாநுஜருக்குப் பகைவனாய் அவரைத் தன் நாட்டினின்றும் துரத்தியவன்; ஆதலால், அவன் காலத்தவர் இராமாநுஜர் என்றும் கூறுவார். அவர் கூற்றும் பொருத்தமற்ற கூற்று என்று விட்டுவிடுக.

ஸ்ரீ இராமாநுஜர் நூற்றிருபது திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்தார் என்றும், நூற்றிருபத்தைந்து திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்தார் என்றும் பலவாறு கூறுவார்கள். எவ்வாறாயினும் அவர் நீடித்த வயசு நிலவியிருந்தார் என்பதில் குறைவில்லை.

"நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன நாரணனைக்
காட்டிய வேதங் களிப்புற் றதுதென் குருகைவள்ளல்
வாட்டமி லாவண் டமிழ்மறை வாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டிய சீலத் திராமா நுசன்றன் னியல்புகண்டே."

(பிற்பகுதி முற்றிற்று.)